# கலித்தொகையில் மெய்ப்பாடுகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,) பட்டத்திற்குப்

பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**வ.மீனாட்சி**

(பதிவு.எண்.0993)

நெறியாளர்

**பேராசிரியர் சே.செந்தமிழ்ப்பாவை**






**தமிழ்ப்பண்பாட்டு மையம்**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசிய தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+ (CGPA:3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பலகலைக்கழகத் தகுதி பெற்றது.)

**காரைக்குடி- 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**அக்டோபர் - 2020**

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** எம்.ஏ., எம்.ஃ.பில், பி.எட்., பிஎச்.டி.,
பேராசிரியர் & இயக்குநர்,
தமிழ்ப்பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003

நாள் : 29.10.2020

## நெறியாளர் சான்றிதழ்

**"கலித்தொகையில் மெய்ப்பாடுகள்"** என்னும் தலைப்பில் **வ.மீனாட்சி** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு வழங்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்

(சே.செந்தமிழ்ப்பாவை)

நெறியாளர்

**வ.மீனாட்சி** எம்.ஏ., எம்.ஃபில்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்ப்பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003

நாள் : 29.10.2020

## ஆய்வாளர் உறுதிமொழி

**“கலித்தொகையில் மெய்ப்பாடுகள்”** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு, எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(வ.மீனாட்சி)
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.,
பேராசிரியர் & இயக்குநர்,
தமிழ்ப்பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003

# நன்றியுரை

**கலித்தொகையில் மெய்ப்பாடுகள்** எனும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் மற்றும் பதிவாளர் ஆகியோருக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேடு செம்மையாக அமைவதற்குத் தன்னலம்பாராது தாயுள்ளத்துடன் பல்லாற்றானும் உதவிபுரிந்து நான் அணுகிய போதெல்லாம் அறிவுரை தந்து ஆற்றுப்படுத்தி உதவிய ஆசிரியப் பெருந்தகை எனது நெறியாளர் பேராசிரியர் **சே.செந்தமிழ்ப்பாவை** அம்மா அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி என்றும் உரியது.

ஆய்வு தொடர்பாக நூல்கள் கொடுத்துதவிய தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக மேனாள் நாட்டுப்புறவியல் துறைப் பேராசிரியர் **முருகேசன்** அவர்களுக்கும் இராமசாமி தமிழ்க் கல்லூரியின் மேனாள் பேராசிரியர். **நா.சுப்பிரமணியன்** அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்காக நூல்கள் தந்துதவிய அழகப்பா பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் என்னை ஊக்கப்படுத்திய **எனது பெற்றோர் திரு.அழ.வள்ளியப்பன் திருமதி வ.சாத்தம்மை (எ) விஜயலெட்சுமிக்கும்** எனது நன்றி என்றென்றும் உரியது.

ஆய்வின் தொடக்கம் முதல் நிறைவு வரை உதவி செய்த எனது அண்ணன் **திரு.இர.சிவக்குமார்** அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் எனது ஆய்விற்கு ஊக்கம் அளித்த எனது அருமைத் தோழமைகள் **வை.பொன்னழகம்மை (எ) லெட்சுமி, அழ.பொன்னழகு,** ஆகியோருக்கும் தமிழ்ப் பண்பாட்டு மைய முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இவ்வாய்வேடு செம்மையாக வெளிவர உதவிய அனைத்து நல் உள்ளங்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றியுடன்,

**(வ.மீனாட்சி)**

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

1. கலித். - கலித்தொகை
2. தொல். - தொல்காப்பியம்
3. ப. - பக்கம்
4. பக் - பக்கங்கள்
5. உ.ஆ - உரையாசிரியர்
6. ப.ஆ - பதிப்பாசிரியர்
7. நூ. - நூற்பா

# முன்னுரை

எட்டுத்தொகை அக நூல்களுள் ஒன்று கலித்தொகை. இது கற்றறிந்தார் ஏத்தும் கலி என்று போற்றப்பெறும் பெருமையுடையது. தொல்காப்பியர் அகப்பாடல் பாடுவதற்குரிய பாவகையாகக் குறிப்பிடும் கலிப்பா யாப்பில் பாடப்பட்ட சிறப்பிற்குரியது. இதில் தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், கண்டோர், அடியோர், வினைவலர், போன்ற பல அகமாந்தர்களின் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன. இம்மாந்தர்கள் ஒருவர் மற்றொருவரிடமோ அல்லது ஒருவர் மற்ற இருவரிடமோ அல்லது அவர்கள் தங்களுக்கு உள்ளாகவோ நிகழ்த்தும் கூற்றுகள் அவர்தம் உள்ளத்து உணர்ச்சிகளை வெளிப்படுத்துகின்றன. இவ்வுள்ள உணர்வே செய்யுட்களில் மெய்ப்பாடாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது. அவ்வகையில் கலித்தொகையில் இடம்பெற்றுள்ள மெய்ப்பாடுகள் குறித்து ஆராய்வது சிறப்புடைத்து.

## ஆய்வுத் தலைப்பு

**“கலித்தொகையில் மெய்ப்பாடுகள்”** என்பது ஆய்விற்குரிய தலைப்பாக அமைகிறது.

## ஆய்வு நோக்கம்

கண்ணினும் செவியினுந் திண்ணிதின் உணரும் நுட்பமான ஓர் இலக்கிய உணர்ச்சி மெய்ப்பாடாகும். செய்யுளுக்குரிய இந்நுண்ணிய உணர்வைக் கலித்தொகை வழி வெளிப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் மற்றும் கலித்தொகை முழுவதும் இவ்வாய்விற்குரிய எல்லையாக அமைகின்றது.

## ஆய்வு முன்னோடிகள்

மு.பொன்னுச்சாமியின் **சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்**, (சென்னைப் பல்கலைக்கழகம் 1982), ச.லதாவின் **ஐங்குறுநூற்றில் மெய்ப்பாடுகள் -ஓர் ஆய்வு** (மாநிலக் கல்லூரி சென்னை -2009), செ.மோகனப்பிரியாவின் **நற்றிணையில் மெய்ப்பாடு** (பாரதியார் பல்கலைக்கழகம் 2009), ம.தமிழ்மதியின் **சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள் (**பாரதிதாசன் பல்கலைக்கழகம் 2011), ப.வளர்மதியின் **பத்துப்பாட்டில் மெய்ப்பாடுகள்**, (ஜமால் முகமது கல்லூரி திருச்சிராப்பள்ளி 2012), வீ.பாஸ்கரின் **நற்றிணையில் மெய்ப்பாட்டுக் கூறுகள்** (பாரதிதாசன் பல்கலைக்கழகம் 2015), கோ.திலகரின் **சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்** (பாரதிதாசன் பல்கலைக்கழகம் 2016), ஜெ.முத்தமிழ்ச்செல்வியின் **சங்க இலக்கியம் பதினெண்கீழ்க்கணக்கு அகநூல்களில் மெய்ப்பாடுகள் -ஓர் ஓப்பீடு,** (பெரியார் பல்கலைக்கழகம் 2017) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடுகள் இவ்வாய்விற்கு முன் ஆய்வுகளாக அமைந்துள்ளன.

## ஆய்வுக் கருதுகோள்

அன்பின் ஐந்திணைக்குரிய மாந்தர்கள் மட்டுமின்றி, கைக்கிளை பெருந்திணைக்குரிய மாந்தர்களின் கூற்றுகள் இடம்பெற்றுள்ள ஒரு நூல் கலித்தொகை. எனவே அனைத்து மாந்தர்தம் கூற்றுகளிலும் மெய்ப்பாடு வெளிப்படும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வுச் சான்றாதாரம்

இலக்கண நூல்களுள் முதன்மையான தொல்காப்பியமும் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய கலித்தொகையும் முதன்மைச் சான்றாதாரமாகும். தொல்காப்பியம் மற்றும் கலித்தொகை தொடர்பாக வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள், மெய்ப்பாடு தொடர்பாக வெளிவந்துள்ள

நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள், போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில் மெய்ப்பாடுகள் குறித்து விளக்கும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும் மெய்ப்பாடுகளைப் பகுத்து ஆராயும் நிலையில் பகுப்பாய்வு அணுகுமுறையும் அணுகுமுறைகளாகப் பயன்படுத்தப் பெற்றுள.

## இயல் பகுப்பு

**"கலித்தொகையில் மெய்ப்பாடுகள்"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

**இயல் ஒன்று:** கலித்தொகை காட்டும் எண்வகை மெய்ப்பாடுகளும் அவற்றின் நிலைக்களன்களும்

**இயல் இரண்டு:** கலித்தொகையில் களவுக் கால மெய்ப்பாடுகள்

**இயல் மூன்று:** கலித்தொகையில் கற்புக் கால மெய்ப்பாடுகள்

**இயல் நான்கு:** கலித்தொகையில் கைக்கிளை பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள்

**இயல் ஐந்து:** கலித்தொகை மெய்ப்பாடுகளும் உளவியலும்

என்பனவாகும்.

## இயல் ஒன்று

**"கலித்தொகை காட்டும் எண்வகை மெய்ப்பாடுகளும் அவற்றின் நிலைக்களன்களும்"** என்பது முதலாம் இயலாகும். இதில் தொல்காப்பியம் குறிப்பிடும் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் எண்வகை மெய்ப்பாடுகளும் அவற்றின் நிலைக்களன்களும் கலித்தொகையில் இடம்பெற்றிருக்கும் நிலை குறித்து விளக்கப் பெற்றுளது.

**இயல் இரண்டு**

**“கலித்தொகையில் களவுக் கால மெய்ப்பாடுகள்”** என்பது இரண்டாம் இயலாகும். இதில் தொல்காப்பியம் குறிப்பிடும் களவுக்குரிய மெய்ப்பாடுகள் கலித்தொகையில் இடம்பெற்றுள்ள விதம் குறித்து ஆராயப் பெற்றுளது.

**இயல் மூன்று**

**“கலித்தொகையில் கற்புக் கால மெய்ப்பாடுகள்”** என்பது மூன்றாம் இயலாகும். இதில் தொல்காப்பியர் கூறும் கற்பிற்குரிய மெய்ப்பாடுகள் கலித்தொகையில் பயின்றுவரும் முறை குறித்து விளக்கப் பெற்றுளது.

**இயல் நான்கு**

**“கலித்தொகையில் கைக்கிளை, பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள்”** என்பது நான்காம் இயலாகும். இதில் கலித்தொகையில் கைக்கிளை பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள் பயின்று வரும் நிலை குறித்து ஆராயப் பெற்றுள்ளது.

**இயல் ஐந்து**

**“கலித்தொகை மெய்ப்பாடுகளும் உளவியலும்”** என்பது ஐந்தாம் இயலாகும். இதில் கலித்தொகையில் காணலாகும் மெய்ப்பாடுகள் உளவியல் அடிப்படையில் ஆராயப்பெற்றுள்ளது.

ஐந்து இயல்களிலும் ஆராய்ந்து அறியப் பெற்ற கருத்துகள் முடிவுரையில் இடம்பெற்றுள்ளன. இதனையடுத்து ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட முதன்மை, துணைமைச் சான்றாதாரங்கள் துணைநூற்பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

# கலித்தொகை காட்டும் எண்வகை மெய்ப்பாடுகளும் அவற்றின் நிலைக்களன்களும்

தமிழில் தொன்மை வாய்ந்த இலக்கண நூலாகத் திகழும் தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று அதிகாரங்களைக் கொண்டது. இதில் அகமென்றும் புறமென்றும் பிரிவுகளைக் கொண்டு வாழ்வியல் முறையை நூற்பாக்களுள் வகுத்துச் சொல்லும் பொருளதிகாரத்தின் ஆறாவது இயல் மெய்ப்பாட்டியல் ஆகும். மெய்ப்பாடுகளுக்கு என்று ஒரு தனி இயலைத் தொல்காப்பியர் வகுத்திருக்கின்றார். இங்ஙனம் தனி இயலாக வகுக்கும் அளவிற்கு அவர் காலத்தே மெய்ப்பாடுகள் இலக்கிய ஆட்சி பெற்றிருக்க வேண்டும். அதனால் தான் மெய்ப்பாட்டியலை உவமவியலுக்கு முன்னதாக அமைத்துள்ளார் எனக் கருத இடமுண்டு. இத்தகு சிறப்புடைய மெய்ப்பாடுகள் கலித்தொகையில் இடம் பெற்றிருக்கும் முறை குறித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**மெய்ப்பாடு - சொற்பொருள் விளக்கம்**

**மெய்ப்பாடு என்பது மெய்ப்படு என்பதன் திரிந்த வடிவமாகும். படு என்னும் தொழிற்பெயர் பாடு என நீண்டு முதனிலை திரிந்த தொழிற் பெயராகின்றது.**

**மெய் + படு - மெய்ப்படு ⟹ மெய்ப்பாடு**

**மெய் (உடல்) படு (தோன்றுதல்)**

**மெய்யில் படுதல் மெய்ப்பாடு. அதாவது உணர்ச்சியாவது புற உடலில் வெளிப்படுதல் மெய்ப்பாடு எனப்படும்[1]**

**பேச்சு மொழித் தோற்றத்திற்கு முன்பே மனிதன் தன் உள்ளத்து உணர்ச்சிகளை உடலசைவுகளால் வெளிப்படுத்தினான். உள்ளத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடாக உடலின் மேல் தோன்றும் புறக்குறிகள் மெய்ப்பாடுகள் என அழைக்கப்படுகின்றன[2]**

## தொல்காப்பியத்தில் மெய்ப்பாடு

மெய்ப்பாடு உலக வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் சிறப்பிடம் பெறுகின்றது. அதனால் தான் தொல்காப்பியம் மெய்ப்பாடுகளைச் செய்யுள் உறுப்புகளில் ஒன்றாகக் கூறுகின்றது.

**"பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ" (தொல்.நூ.1259)**

என்பதில் மெய்ப்பாட்டை முப்பத்து நான்கு செய்யுள் உறுப்புகளுள் ஒன்றாகக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர்.

மெய்ப்பாட்டின் சிறப்பை, **அக்காலத்தே மெய்ப்பாடுகள் செய்யுளுக்கு இன்றியமையாதனவாக இருந்தன என்பதைப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் நற்றிணைக்கு எழுதிய உரையினின்றும் காணலாம்**[3] என்னும் கூற்றும் விளக்கும்.

## மெய்ப்பாட்டின் இயல்பு

**"உய்த்துணர்வு இன்றித் தலைவரு பொருளான்**

**மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்" (தொல்.நூ.1460)**

என்னும் நூற்பா மெய்ப்பாடு என்னும் செய்யுள் உறுப்புக்குப் பொருள் விளக்கம் தருவதாக உள்ளது. இந்நூற்பாவிற்கு இளம்பூரணர், **யாதானும் ஒன்றைக் கூறியவழி அதன் பொருண்மையை விசாரித்துணர்த்தலின்றி அவ்விடத்து வரும் பொருண்மையானே மெய்ப்பாடு தோன்ற முடிப்பது மெய்ப்பாடு என்னும் உறுப்பாம்** என்றும் **செய்யுட் செய்வோர் மெய்ப்பாடு தோன்றச் செய்ய வேண்டும் என்பது கருத்து**[4] என்பர். **உய்த்துணர்ச்சியின்றிச் செய்யுளிடத்து வந்து சொல்லப்படும் பொருள் தானே வெளிப்பட்டாங்குக் கண்ணீர் அரும்பல், மெய்மயிர் சிலிர்த்தல் முதலிய சத்துவன் படுமாற்றான் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடு என்னும் உறுப்பாம்**[5] என்றுரைப்பர் பேராசிரியர்.

இவ்விளக்கங்களால் உய்த்துணர்வின்றிச் செய்யுளைப் படித்த அளவில், அச்செய்யுளில் பயின்றுவரும் பொருள் அல்லது உணர்ச்சிக்குரிய புறவுடற்குறிகளின் மாற்றம் அல்லது செயல்களைப் படித்தவரிடத்தில் தோன்றுமாறு செய்யவல்ல செய்யுளுறுப்பு மெய்ப்பாடு என்பது தெளிவாகும். இதனால் இலக்கியத்தில் இடம்பெறும் மாந்தரின் உணர்ச்சியின் விளைவாகத் தோன்றும் மெய்ப்பாடுகளையே செய்யுள் உறுப்பாக இளம்பூரணரும் பேராசிரியரும் கருதினர் என்றுணர இயலும்.

மேலும் செயிற்றியனார் மெய்ப்பாடு பற்றியுரைக்கும்,

**"உய்ப்போன் செய்தது காண்போர்க் கெய்துதல்**

**மெய்ப்பா டென்ப மெய்யுணர்ந் தோரே"**[6]

என்னும் கருத்தும் குறிப்பிடத்தக்கது. இதன்வழி இயற்பாவில் இடம்பெற்றுள்ள படைப்பாசிரியனின் உணர்ச்சியை அதனைக் காண்போரும் அடைதலே மெய்ப்பாடு என்பது புலனாகும்.

## செய்யுளில் மெய்ப்பாடு

செய்யுளில் புலவனின் உள்ளத்துணர்ச்சி இயல்பாகப் படிகின்றது. அவனது உணர்ச்சியைச் செய்யுள் படிப்போர்க்குப் புலப்படுத்துதல் வேண்டும். பாட்டில் வெளிப்படும் உணர்ச்சி வெளிப்பாட்டை **'மெய்ப்பாடு'** என்கின்றனர்.

இலக்கியத்தில் படைக்கப்படும் மாந்தர்களின் மூலம் புலவன் தன் உணர்ச்சிகளை மாந்தரின் உணர்ச்சிகளாக வெளிப்படுத்த முயலுகிறான். எனவே செய்யுளில் **'உணர்ச்சிப் புலப்பாட்டுக் கருவியாக'** மெய்ப்பாடு அமைகின்றது.

## மெய்ப்பாட்டியல்

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் மெய்ப்பாடு பற்றிய செய்திகளை எண்வகை மெய்ப்பாடுகள், அவற்றின் நிலைக்களன்கள், அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவான

மெய்ப்பாடுகள், களவிற்குரிய மெய்ப்பாடுகள், கற்பிற்குரிய மெய்ப்பாடுகள், கைக்கிளை பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள் என வகைப்படுத்தி விளக்குகிறார்.

**மெய்ப்பாடு பற்றிய உரையாசிரியர்களின் கருத்து**

மெய்ப்பாடு பற்றி உரையாசிரியர்கள் கூறும் கருத்துகள் குறிப்பிடத்தக்கன. இளம்பூரணர் 'மெய்ப்பாடு' என்ற சொல்லுக்கு, **மெய்யின் கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று**[7] என்று கூறுகிறார். பேராசிரியர், **உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுத்துவதோர் ஆற்றான் வெளிப்படுதல் மெய்ப்பாடு**[8] என்று விளக்கம் தருகின்றார். மேற்கூறியவற்றால் தன் உள்ளத்துணர்வைப் பிறர் அறியுமாறு வெளிக்காட்டுதல் மெய்ப்பாடு என அறிய இயலும்.

மெய்ப்பாடு என்பது, **அக உணர்வுகளை ஆழ்ந்து ஆராயாமலே யாரும் இனிதறியப் புலப்படுத்தும் இயற்புறவுடற் குறியாம்**[9] என்று சோமசுந்தர பாரதியார் குறிப்பிடுகிறார். தமிழண்ணல், **மெய்ப்படத் தோன்ற முடிப்பது மெய்ப்பாடு. கண்ணீரரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலான சத்துவம் படுமாற்றால் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடு**[10] என்பர். **மெய்ப்பாடு என்பது வெளிப்படுவது என்று பொருள்படும்**[11] என்பர் ந.சுப்புரெட்டியார்.

மெய்ப்பாடாவது, **மக்களுடைய உள்ளத்தில் நிகழும் குறிப்புகள் பிறர்க்குப் புலப்படுமாறு உடம்பின்கண் தோன்றுவது. புலி முதலியவற்றைக் கண்டு அஞ்சிய ஒருவனது உள்ளத்தில் நிகழும் அச்சக் குறிப்பானது அவனது உடம்பில் தோன்றும் நடுக்கம், வியர்வை முதலிய வெளித்தோற்றங்களால் காண்போர்க்குப் புலனாதலை இம்மெய்ப்பாட்டிற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்**[12] என்பர் கரு.இராமநாதன்.

மெய்ப்பாடு பற்றி இலக்குவனார் கூறும்போது, **உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிக்கேற்ப உடலில் தோன்றும் வேறுபாடு என்பது தான் மெய்ப்பாடு என்கிறார்**[13] மேலும் அவர் மெய்ப்பாட்டின் எண்ணிக்கையைக் கூறுமிடத்து, **சுவைக்கப்படும் பொருள், அதனை நுகர்ந்த பொறியுணர்வு, அது மனத்துட் பட்டவழி உள்ளத்து நிகழும் குறிப்பு,**

**குறிப்பு உண்டானவுடன் கண்ணீர் தோன்றல், மெய்மயிர் சிலிர்த்தல் போன்ற உடம்பின்கண் வரும் வேறுபாடு என நான்கும் ஒவ்வொரு சுவைக்கும் உண்டு அதுவே எட்டு சுவைக்கும் முப்பத்திரண்டாகும்**[14] என்கிறார்.

தொல்காப்பியர், உரையாசிரியர்கள், நாடகவியலார் ஆகியோர்தம் மெய்ப்பாடு பற்றிய விளக்கக் கருத்துகளை நோக்கும் பொழுது மெய்ப்பாடு என்பது உள்ளத்தில் இயல்பாக தோன்றும் உணர்வின் வெளிப்பாடு என்பது புலனாகும்.

ஒருவரது மனக்குறிப்பின்வழி அவரது முகம் வேறுபடுதலும் சொற்கள் வேறுபடுதலும் இயல்பாகும். எனவே அவ்வேறுபாட்டைக் கண்ணினாலும் செவியினாலும் உணர்ந்து கொள்ளத் துணைபுரிவது மெய்ப்பாடாகும்.

**கண் முதலிய ஐம்பொறிகளுள் காண, கேட்க, நுகர அமைந்துள்ளன. இவ்வைம்பொறிகளின்று எழும் நுண்ணிய தசை நாண்கள் அவற்றை மூளையோடு தொடர்புபடுத்துகின்றன. கண்ணாற் காணும் காட்சி, செவியால் பெறும் கேள்வி ஒலிகள், மூக்கு நுகரும் மணம், நாவால் பெறும் சுவை, உடல் பெறும் தொடு உணர்ச்சி முதலியன, தசை நாண் அதிர்வு அலைகளாக மூளையைச் சேர்கின்றன. கண்டவை, கேட்டவை, நுகர்ந்தவை ஆகியவற்றின் பதிவுகளை அவை மூளையில் பதிப்பிக்கின்றன. இப்பதிவுகள் உணர்வுகளைத் தருகின்றன. இப்பதிவுகளின் தன்மைக்கு ஏற்ப அப்பதிவுகள் சில அறிவைத் தருவன. சில உணர்வுகளைத் தூண்டுவன. தூண்டப்பட்ட உணர்ச்சிகள் எழுந்து உணர்ச்சி நாளங்களின் வழியே உடலில் பரவி ஆட்டியும், அலைத்தும் புறஉடல் உறுப்புகளில் சென்று முடிகின்றன. அவ்வாறு அவை முடியுமிடத்து அவ்வுணர்ச்சியின் மென்மையான அறிகுறிகள் இயற்கையாகப் புற உடலில் தோன்றுகின்றன. இவ்வாறு தோன்றுதலை இயல்நெறி அல்லது இயற்கைநெறி என்பர் தொல்காப்பியர். உணர்ச்சியின் மெய்ம்மை வெளிப்பாடாக அப்புறவுடற் குறிகள் அமைகின்றன. ஆதலின் அவை மெய்ப்பாடு எனப் பெயர் பெற்றன**[15] என்பர் கோதண்டபாணி பிள்ளை.

## மெய்ப்பாடு பற்றி அகராதிகள் தரும் விளக்கம்

அபிதான சிந்தாமணி, மெய்ப்பாடு என்பதற்கு, **நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், உவகை, வெகுளி ஆக எட்டு**[16] என்று பொருள் தருகின்றது.

தமிழ் மொழியகராதி மெய்ப்பாடு என்பதற்கு, **மெய்ப்பாடு -குறிப்பு வெளிப்படுக்குந் தோற்றம்**[17] எனப் பொருள் தருகின்றது.

மதுரை தமிழ்ப் பேரகராதி மெய்ப்பாடு என்பதற்கு, **மெய்ப்பாடு குறிப்பு வெளிப்படுத்தும் தோற்றம், புகழ், இயற்கைக்குணம்**[18] என்று விளக்கம் தருகின்றது.

வாழ்வியல் களஞ்சியம் மெய்ப்பாடு என்பதற்கு, **மெய்ப்பாடுகள் அகம் பற்றிய ஒழுகலாறுகளிலும் புறம் பற்றிய ஒழுகலாறுகளிலும் மக்கள் ஈடுபடச் செயற்படும் பொழுது அவர்கள் உள்ளத்தில் நிகழும் குறிப்புகளுக்கு ஏற்பத் தோன்றுவன மெய்ப்பாடுகள் ஆகும்**[19] என விளக்கம் தருகின்றது.

தமிழிசைப் பேரகராதி மெய்ப்பாடு என்பதற்கு, **உள்ளத்து உணர்வுகளை உடல்மொழியான சைகைகளால் வெளிப்படுத்துவது என்றும் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என மெய்ப்பாடு எண்வகையாகும்**[20] என்றும் கூறுகிறது.

தமிழ் இலக்கணப் பேரகராதி மெய்ப்பாடு குறித்து, **மெய்ப்பாட்டியல் தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் ஆறாம் இயலாக உள்ளது. முன் ஐந்தியல்களில் கூறப்பட்ட அகப்புறச் செய்திகளை உடற்குறியால் வெளியிட்டு உவமத்தைப் போலப் பொருளைப் புலப்படுத்தும் மெய்ப்பாடு. அவ்வைந்தியல்களையும் அடுத்துச் செய்யுளியலை ஒட்டி அமைந்த உவமவியற்கு முன்னர் ஆறாம் இயலாக அமைந்துள்ளது** எனவும் **மெய்ப்பாடுகள் பொதுவாக அகப்பொருள் புறப்பொருள் துறைகளுள் அனைத்திற்கும் அமைய வருவனவும், சிறப்பாக அகத்துறைக்கே**

**ஆவனவும் என இருவகைப்படுதலின் பொதுவியல்புடையவற்றை முன்னர்க் கூறிச் சிறப்பியல்புடையவற்றைப் பின்னர் குறிப்பிடுகிறார். ஒருவருடைய உள்ளுணர்களுள் மற்றவர் கண்டும் கேட்டும் அறிய புறவுடற்குறியால் புலப்படுவனவே இயற்றமிழ்ச் செய்யுளில் மெய்ப்பாடு எனப்படும்**[21] என உரைக்கின்றது.

செய்யுளுக்குரிய உறுப்புகளுள் ஒன்றாக மெய்ப்பாட்டைத் தொல்காப்பியர் கூறினாலும் மெய்ப்பாடு மனித வாழ்வோடு தொடர்புடைய ஒன்று. எழுத்து மொழி தோன்றுவதற்கு முந்தையது பேச்சு மொழி. பேச்சு மொழிக்கு முந்தையது சைகை மொழி. இக்காலக் கட்டத்தில் மனிதன் தன் உள்ளத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடாக உடலில் தோன்றும் செய்கைகள் அமைந்தன. இதுவே மெய்ப்பாடாகியது

## தொல்காப்பியர் கூறும் மெய்ப்பாடுகள்

| | |
|---|---|
| **எண் வகை மெய்ப்பாடுகள்** | **32** |
| **அகப்புற மெய்ப்பாடுகள்** | **32** |
| **களவுக்குரிய மெய்ப்பாடுகள்** | **24** |
| **பிரிவுக்கால மெய்ப்பாடுகள்** | **20** |
| **வரைவுக்கு வழி வகுக்கும் மெய்ப்பாடுகள்** | **08** |
| **கற்புக்குரிய மெய்ப்பாடுகள்** | **10** |
| **மொத்த மெய்ப்பாடுகள்** | **126** |

## உணர்ச்சி - மெய்ப்பாடு

**ஒருவரின் உள்ளதிலெழும் உணர்ச்சிகள் மற்றவர் கண்டும் கேட்டும் அறியப் புறவுடற் குறியால் புலப்படுபவையே மெய்ப்பாடு**[22] ஆகும். **பிறர் உணர்ச்சிகளை ஒருவர் உணருதற்கு அவர்தம் மெய்ப்பாடுகளே காரணமாக அமைவதால் உணர்ச்சி என்ற சொல் பெய்தற்குரிய இடங்களில் 'மெய்ப்பாடு' என்ற சொல்லையே இந்நாளைய உளவியல் அறிஞர் பயன்படுத்தலை இங்கு கருத்தில் நிறுத்தல் தகும்**[23] என்றுரைப்பர் தா.ஏ.சண்முகம். இதனை சோமசுந்தர பாரதியாரின், **மெய்ப்படத் தோன்றும்**

**உள்ளுணர்வை மெய்ப்பாடென்றது ஆகுபெயர்** என்றும் **ஒருவர் உள்ளுணர்வை மற்றவர் கண்டும் கேட்டும் அறியப் புறவுடற்குறியால் புலப்படுபவையே இயற்றமிழ் செய்யுளில் மெய்ப்பாடு எனப்படும்**[24] என்றும் கூறுகிறார்.

உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் மெய்ப்பாடுகள் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன. மெய்ப்பாடுகள் உளவியல் சார்ந்தன. உளவியலார் மற்றும் இலக்கியத் திறனாய்வாளர்கள் பலரும் இலக்கிய உணர்ச்சியைப் பற்றிச் சிந்தித்துப் பல கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

## மனித வாழ்வில் இன்றியமையாத இடத்தைப் பெறும் மெய்ப்பாடு

உணர்ச்சிகள் தான் வாழ்வின் இயக்கியாகவும், இலக்கியத்தின் உயிர் நாடியாகவும் விளங்குகின்றன. உள்ளக் கிளர்ச்சியைப் பொருத்தே மனித நடத்தைகள் வெளிப்படுகின்றன. அதாவது உள்ளக்கிளர்ச்சியின் வெளிப்பாடாகிய மெய்ப்பாடுகள் நடத்தைகள் உருவாகக் காரணமாகின்றன. மனித வாழ்வின் மிக உன்னதமான நடத்தைப் பண்புகளும் மனிதச் சிந்தனையும் உணர்ச்சி, உள்ளக்கிளர்ச்சி, மெய்ப்பாடு என்னும் இவற்றைப் பொறுத்தே அமைகின்றன.

ஆதிமனிதன் தன் உள்ளத்துணர்ச்சிகளை மெய்ப்பாடுகளால் வெளிப்படுத்தினான். உள்ளத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடாகத் தோன்றும் புற உடலசைவுகளே மெய்ப்பாடுகளாக வெளிப்படுகின்றன. பேச்சு மொழித் தோற்றத்திற்கு முன்னரே அவன்தன் உள்ளத்துணர்ச்சிகளைப் புலப்படுத்தவும், ஒருவரின் உள்ளத்து உணர்ச்சிகளை அறிந்து செயல்படவும் மெய்ப்பாடுகளை உணர்ச்சிப் புலப்பாட்டுக் கருவியாகக் கொண்டான். இவ்வாறு மெய்ப்பாடுகள் மனித வாழ்வில் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன.

## பேச்சும் மெய்ப்பாடும்

உணர்ச்சிகளின் வெளிப்பாட்டு நிலைகளில் பேச்சும் ஒன்று. உணர்ச்சி வசப்பட்ட நிலையில் பேசும் பேச்சுக்கள் மெய்ப்பாடுகளாகக் கொள்ளத்தக்கன. வெறும் எண்ணங்களை வெளிப்படுத்தும் பேச்சுக்கள் மெய்ப்பாடுகளல்ல.

எண்வகை மெய்ப்பாடுகளின் வெளிப்பாடாகத் தோன்றும் பேச்சு மெய்ப்பாடுகள் பல. **எள்ளி நகையாடுதல் என்பது நகையின் பேச்சு மெய்ப்பாடாகவும், ஐயோ என அரற்றல், வாழ்வை முனிந்து கூறுதல் என்பன அழுகையின் பேச்சு மெய்ப்பாடுகளாகவும் அலறல் என்பது அச்சத்தின் பேச்சு மெய்ப்பாடாகவும், வஞ்சின மொழிகள் கூறுதல், சினச் சொற்களை மொழிதல் வீரமொழிகள் கூறுதல் என்பன தறுகண், பெருமிதத்தின் பேச்சு மெய்ப்பாடுகளாகவும் கடுஞ்சொற் கூறுதல் இழி சொற்களால் வைதல், பேசுதற்கு நா எழாத அளவிற்குச் சினந்து தடுமாறிப் பேசுதல் என்பன வெகுளியின் பேச்சு மெய்ப்பாடுகளாகவும் வாழ்த்தல், பாராட்டுதல், ஆர்த்தல் என்பன உவகையின் பேச்சு மெய்ப்பாடுகளாகவும் தோன்றுகின்றன. இப்பேச்சு மெய்ப்பாடுகள் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் தோன்றுகின்றன. உணர்ச்சி புலப்பாட்டுக் கருவிகளுள் பேச்சையும் மெய்ப்பாடாகத் தொல்காப்பியனார் கருதினார் என்பது புலனாகிறது. உளவியலாளரும் உணர்ச்சி வசமான பேச்சை மெய்ப்பாடாக கருதுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.**[25]

**தொல்காப்பியர் கூறும் பலவகை மெய்ப்பாட்டு வகைகளில் தலைவி முதலாயினோர் பேச்சுக்களுங்கூட மெய்ப்பாடுகளாகவே சேர்க்கப்பட்டுள்ளன**[26] எனக் கருதும் டாக்டர்.கோ.சுந்தரமூர்த்தியின் கருத்தும் மேற்சுட்டிய கருத்தை அரண் செய்வதாக அமைகின்றது.

பேச்சினை மெய்ப்பாடாகக் கருதும் வழக்கு வடமொழி மரபிலும் அமைந்துள்ளது. **பேச்சினைப் பரதர் அபிநயங்களில் ஒன்றாகவே கருதினார். அதனை ‘வாசிக அபிநய’ என்னும் பெயரிட்டு அவர் அழைத்தார். எடுத்துச் செல் என்னும்**

**பொருளுடைய ‘நி’ என்ற வேர்ச்சொல்லோடு ‘அபி’ என்ற முன்னொட்டுச் சேர ‘நோக்கி’ என்ற பொருளில் பெறப்பட்டது என்பர் பரதர். அதாவது பாத்திரங்களின் உணர்ச்சிகளைப் பார்வையாளர்களுக்கும் படிப்பவர்களுக்கும் எடுத்துச் செல்வது என்ற பொருளுடையது என்பர்**[27] ஆத்யா ரெங்காச்சார்யா.

பேச்சுக்கள் உள்ளத்து எண்ணங்களின் வெளிப்பாடுகளாகவே அமைந்தால் அவை உறுதியாக மெய்ப்பாடுகளாகவே கொள்ளத்தக்கன. தொல்காப்பியரின் மெய்ப்பாட்டுப் பட்டியல்களை நுணுகி ஆராய்வோமாயின் தலைவன், தலைவி முதலானோர் பேச்சுக்கள் அனைத்தும் உணர்ச்சி வெளிப்பாடுகளாக அமையும் மெய்ப்பாடுகளாகவே இடம்பெற்றிருப்பதைக் காண முடிகிறது. பேச்சுக்கள் உள்ளத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடுகளாக அமைகின்ற போது அவைகளையும் மெய்ப்பாடுகளாகவே கருதுவது ஏற்றுக்கொள்ளத் தக்கதாகவே அமைகின்றது. இதனை தமிழண்ணல் களவியலில் தலைவிக்குரிய கூற்றுகளை விளக்கும் போது,

**“மறைந்து அவன் காண்டல், தன் காட்டுறுதல்,**
**நிறைந்த காதலில் சொல் எதிர் மழுங்கல்,**
**……………………………………….**
**அன்னவும் உளவே ஓரிடத் தான”** **(தொல்.நூ.1057)**

என்னும் நூற்பாவில் களவுக் காலத்தில் தலைவியிடம் தோன்றக்கூடிய உணர்ச்சிகளையும் கூற்றுகளையும் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இதில் புணர்ச்சிக்கு முன்பு நிகழும் மெய்ப்பாடுகள், புணர்ச்சிக்குப் பின் நிகழும் மெய்ப்பாடுகள், வரைவுக்கு வழிவகுக்கும் மெய்ப்பாடுகள் போன்றவை இடம்பெற்றுள்ளன.

## தொகையும் வகையும்

நகை முதலாக வரும் எட்டு மெய்ப்பாடுகளுக்கு உரிய உணர்ச்சிகள் முப்பத்திரண்டு (எண்வகை மெய்ப்பாடுகள் $8 \times 4=32$) ஆகும். அடுத்து உணர்ச்சிகளும்

மெய்ப்பாடுகளும் கலந்து வருவன முப்பத்திரண்டு (அகப்புற மெய்ப்பாடுகள் 22+10=32 32) ஆகும். இவற்றுள் உணர்ச்சிகள் (அகப்புற மெய்ப்பாடுகள் 22+10=32 (உணர்ச்சிகள் 22) இருபத்திரண்டு ஆகத் தொல்காப்பியர் குறிப்பிடும் உணர்ச்சிகள் ஐம்பத்து நான்கு (32+22=54) ஆகும். இம்முப்பத்திரண்டனுள் எஞ்சிய பத்தும் மெய்ப்பாடுகள் ஆகும். இவற்றோடு களவிற்குரிய மெய்ப்பாடுகள் (24) இருபத்து நான்கு, களவு கற்பிற்குப் பொதுவான மெய்ப்பாடுகள் (20) இருபது, வரைந்தெய்துங் காலத்திற்குரிய மெய்ப்பாடுகள் (10) பத்து ஆகத் தொல்காப்பியர் குறிப்பிடும் மெய்ப்பாடுகள் அறுபத்து நான்கு (24+20+10+10=64) ஆகும். நகை முதலான எட்டு மெய்ப்பாடுகளுக்குரிய உணர்ச்சிகளைக் குறிப்பிட்டது போல் இவ்வறுபத்து நான்கு மெய்ப்பாடுகளுக்குரிய உணர்ச்சிகளைக் குறிப்பிடவில்லை. இவைகளுடன் மெய்ப்பாடு என்ற பொது வகையால் நகை முதலான எட்டு மெய்ப்பாடுகளையும் சேர்க்கத் தொல்காப்பியர் குறிப்பிடும் மொத்த மெய்ப்பாடுகள் எழுபத்திரண்டு நிலைக்களன்களாக அமையும்.

உணர்ச்சிகள் சுட்டப்பெறாமல் மெய்ப்பாடாக மட்டும் இடம்பெறும் இவ்வறுபத்து நான்கு மெய்ப்பாடுகள் ஒவ்வொன்றும் எத்தனை நிலைகளின் விளைவால் தோன்றும் என்பது சுட்டப்பெறாத காரணத்தால் களவு, கற்புக் கால மெய்ப்பாடுகளில் ஒன்றுக்கு மேற்பட்ட மெய்ப்பாடுகள் ஒரே உணர்ச்சியின் விளைவாக அமைவதாலும் தொல்காப்பியர் குறிப்பிடும் உணர்ச்சிகளையும் மெய்ப்பாடுகளையும் இத்தனை என வரம்பிட்டுக் கூறுதல் என்பது இயலாததாகின்றது.

களவுக்கால மெய்ப்பாடுகளைக் கூறிய பின்னர்

**“அன்ன பிறவும் அவற்றொடு சிவணி**

**மன்னிய வினைய நிமித்தம் என்ப”** **(தொல்.நூ.1213)**

என்னும் நூற்பாவில் மேற்சுட்டப் பெற்ற இருபத்து நான்கு மெய்ப்பாடுகளைப் போன்றே பிற மெய்ப்பாடுகளும் அவற்றின் பகுதிகளாக வருவனவும் ஆகிய பிற மெய்ப்பாடுகளும்

உள்ளன எனத் தொல்காப்பியர் குறிப்பிடுவதால் உணர்ச்சிகளையும் மெய்ப்பாடுகளையும் வரையறை செய்தல் இயலாது என்பது பெறப்படுகிறது. **உண்மையில் உணர்ச்சிகளை வரையறை செய்தல் என்பது இயலாது. இங்கே இலக்கியத்தில் பயின்று வரும் உணர்ச்சிகள் எண்ணிறந்தவை. அதனை இத்துணை என வரம்பிட்டுக் கூற முயல்வதும் வகைப்படுத்த முயல்வதும் தவறாகவே முடியும்.**[28] என்னும் வின்செஸ்டர் கருத்து இங்கு சுட்டுதற்குரியது.

**தொல்காப்பியரின் உணர்ச்சிக் கொள்கையின் சாரம் பின்வருமாறு:**

இலக்கிய மாந்தர்களின் உணர்ச்சிகளுக்குரிய புற உடற்குறிகளின் மாற்றம் அல்லது செயல்களை இலக்கியத்தில் படைத்தளித்துப் படிப்பவர்கள் இவ்வுணர்ச்சியை அப்படியே உணருமாறு செய்யவல்ல செய்யுளுறுப்பே மெய்ப்பாடு.

- இலக்கியத்தில் இடம்பெறும் உணர்ச்சிகளைக் கற்போருக்கு உணர்த்தும் கருவியாக மெய்ப்பாடு அமைவதால் உணர்ச்சி என்ற பெயரால் குறிப்பிட வேண்டிய செய்யுளுறுப்பைத் தொல்காப்பியர் மெய்ப்பாடு என்றே குறித்தார். எனவே மெய்ப்பாடுகளாகக் குறிக்கப்பெறினும் அவைகளுக்குரிய உணர்ச்சிகளையே குறித்ததாகக் கொள்ளவேண்டும்.
- நகை முதலாகிய எட்டு மெய்ப்பாடுகளும் முப்பத்திரண்டு உணர்ச்சிகளால் ஏற்படுகின்றன.
- உணர்ச்சிகளும் மெய்ப்பாடுகளும் கலந்த மற்றும் ஒரு முப்பத்து இரண்டு உள்ளன. இதுவும் முன்னர்க் கூறப்பட்டனவும் அகம் புறம் என்னும் இருதிணைக்கும் பொதுவாகும்.
- இவை தவிர எஞ்சிய பிறவெல்லாம் அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகள் ஆகும்.
- அகத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடாக அமையும் பேச்சும் மெய்ப்பாடாகக் கருதப் பெறும்.
- உணர்ச்சிகளை வரையறை செய்தல் எளிதல்ல.

## கலித்தொகை

கலித்தொகையில் கடவுள் வாழ்த்துப் பாடலுடன் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடிய 35 பாலைக்கலிப் பாடல்களும் கபிலர் பாடிய 29 குறிஞ்சிக்கலிப் பாடல்களும் மதுரை மருதனிளநாகனார் பாடிய 35 மருதக்கலிப் பாடல்களும் சோழன் நல்லுருத்திரன் பாடிய 17 முல்லைக்கலிப் பாடல்களும் நல்லந்துவனார் பாடிய 33 நெய்தற்கலிப் பாடல்களும் சேர்த்து மொத்தம் 150 பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

**எட்டுத்தொகை நூல்களுள் கலித்தொகையிலும் ஐங்குறுநூற்றில் மட்டுமே ஐந்து திணைகளுள் ஒவ்வொரு திணையைக் குறித்த அத்துணைப் பாடல்களையும் ஒரு புலவரே பாடியுள்ளார். கலித்தொகை முழுவதையும் ஒரு புலவரே பாடியிருக்க வேண்டும்**[29] என்று கமில் சுவலபில் கருதுகின்றார். பாடுபொருள், கவிதைநடை, யாப்பு, மொழிநடை ஆகிய அனைத்துக் கூறுகளையும் வைத்துப் பார்க்கும் போது கலித்தொகை ஒரே புலவரால் எழுதப்பட்டிருக்க வேண்டும். மேலும் ஒட்டுமொத்த ஒருமைப்பாட்டுத் தன்மையிலும் நாடோடிப் பாடல்களின் தனித்தன்மை வாய்ந்த கூறுகள் அடிப்படையிலும் கூடக் கலித்தொகையை ஒரு ஆசிரியரே பாடினார் எனக் கருத இடமுண்டு. அந்த ஆசிரியர் பாண்டிய நாட்டில் வாழ்ந்தவராக இருக்க வேண்டும் என்று பல உரையாசிரியர்கள் கருதுகின்றனர்.

**கலித்தொகை ஆட்ட மரபிற்குப் பொருந்தி வரக்கூடிய துள்ளல் ஓசையைக் கொண்ட கலிப்பா யாப்பில் அமைந்துள்ளது. சங்க அகப்பாடல் மரபிற்கு மாறாகக் கலித்தொகைப் பாடல்கள் நாடகப் பாங்கில் இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட பாத்திரங்கள் ஒருவருக்கொருவர் உரையாடும் போக்கிலும் தனிமை நிலையிலும் நேரிடையாகவும் உரையாடும் பாங்கிலும் அமைந்துள்ளன.**[30] கலித்தொகையில் இடம்பெறும் நெய்தல் திணைப் பாடல்களைப் பாடிய நல்லந்துவனாரே

கலித்தொகையைத் தொகுத்தவர் எனக் கலித்தொகையை முதன்முதலில் பதிப்பித்த சி.வை.தாமோதரம்பிள்ளை கருதுகிறார்.

**கலித்தொகையில் இடம்பெற்றுள்ள கலிப்பா யாப்பு மற்றும் அதன் உறுப்புகளை தமிழின் நிகழ்த்துதல் மரபுகளுடன் இணைத்துப் பார்க்கையில் தமிழ் நாடகத்தின் தொடக்கக் கூறுகளை இந்நூலில் இருந்தே மீட்டுருவாக்கம் செய்ய இயலும் என்கிறார்**[31] மு.இராமசாமி

தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் கூறும் பொழுது, **சங்க இலக்கியம் நாடக உரையாடலாக பாத்திரங்களின் பேச்சுக்களாக அமைந்திருக்கின்றனவே அன்றிக் கதையாக அமைந்திருக்கவில்லை அவை முழுநாடகங்களாக அமையாமல் தனிப் பாத்திரத்தின் பேச்சுக்களாக அமைந்திருக்கின்றன**[32] என்று கூறுகின்றார்.

கலித்தொகை முழுவதும் கலிப்பா என்னும் யாப்பு வகையால் பாடப்பட்டுள்ளது. **கலி என்னும் சொல் களிப்பு, களிப்பின் பெருக்கு, செருக்கு, ஆரவாரம் முதலிய எழுச்சிநிலைகளை உணர்த்துகின்றது**[33]

அதுமட்டுமன்றி கலித்தொகை அகப்பொருளுக்கென அக்காலத்தில் இருந்த பழைய மரபை முழுவதுமாகப் பின்பற்றியமையும் சுட்டுதற்குரியது. கலிப்பாவின் யாப்பு பல உறுப்புகளைக் கொண்டது. அவ்வுறுப்புகள் செய்யுளுக்கு ஏற்ப வேறுபடும். அவை தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்பனவாகும். பாடலில் அமையும் தரவு பாட்டை அறிமுகம் செய்வதுடன் பின்னணியையும் விளக்குவதாக உள்ளது. இத்தரவு பாட்டின் முன்னுரை போலவும் அமைந்துள்ளது. இதன் முடிக்கும் பகுதி சுரிதகம் எனப்படும். தரவு பாட்டின் பொருளை அறிமுகம் செய்ய சுரிதகம் அதனை முடித்து வைக்கின்றது. தரவைத் தொடர்ந்து வருவது இடைநிலைப்பாட்டு - இடையில் வரும் பாட்டு இது தாழிசை எனவும் வழங்கப்பெறும். இங்கு இசை தாழ்ந்து வருவதால் தாழிசை எனப்படுகின்றது. இதில் கூற வந்த பொருளை அழுத்தம் திருத்தமாக ஒரே பொருள் மூன்று முறை வெவ்வேறு வகையில் அடுக்கிக் கூறப்படும். தனிச்சொல்

சுரிதகத்தைத் தாழிசையின் அமைப்பு நோக்கிலும் பொருள் அடிப்படையிலும் இணைக்கின்றது.

கலித்தொகைப் பாடல்கள் தலைவன் தலைவி தோழி என்ற மூன்று முதன்மை மாந்தர்களையும் செவிலி, கண்டோர், பாணன், அடியோர், வினைவலர் போன்ற துணைப் மாந்தர்களையும் உள்ளடக்கியுள்ளது.

## கலித்தொகையில் மெய்ப்பாடு

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் மெய்ப்பாடுகள் எட்டு என்றும் இவ்வெட்டு மெய்ப்பாடுகளும் முப்பத்திரண்டு உணர்ச்சிகளால் தோன்றும் என்றும் தெளிவாக்குகின்றார். எப்படியாயினும் எண்வகை மெய்ப்பாடுகளும் இயல்பில் தோன்றும் இடம் அகம். அகத்தில் ஏற்படும் உணர்வினை மெய் காட்டுகின்றது. இதனைக் கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும் உணர்வுடை மாந்தர் இனிது காண்கின்றனர் என்று தொல்காப்பியர் (தொல்.1221) கூறுகின்றார். **உணர்ந்தோர் செய்யும் செய்யுளில் தோன்றும் மெய்ப்பாடு சொல்வழி பொருள் புலப்படுத்துவதாக அமையும். அச்சொல்லினைக் கேட்டார்க்குப் பொருள் கட்புலனாகும். அத்தகையோர் கவி கண் காட்டும். அக்கவிப் பொருளை கண்டுணரலாம்.**




**இங்கே, வாழ்க்கை நிகழ்வு, படைப்பாளி வயப்பட்டுப் படைப்பாகத் தோற்றம் கொள்கிறது. படைப்பாளி அதனைக் கற்கும் போது அது கட்புலனாகின்றது. அதன்வழி காணும் வாழ்க்கை இன்னொரு பரிமாணம் எய்துகின்றது. முழுமை எய்த வைக்கும் படியான இலக்கிய வாழ்வு மெய்ப்பாட்டின் வழியாக நேர்கோட்டில் ஒன்றும்**

**படைப்பாளி/படிப்பாளிக்குச் சித்திக்கின்றது. இதனை விளக்கும் படைப்பாளி மக்களுக்கு உயிர் எனத்தகும் நூல் தந்தவனாகின்றான். படிப்பாளி அவனைத் தெய்வத்திற்கு நிகராகக் கொண்டாடுகின்றான். மெய்ப்பாட்டை மையமாகக் கொண்டு முழுமையடைகிறது இலக்கிய வாழ்க்கை**[34] என்கிறார் சொ.சேதுபதி.

**“நகையே அழுகை இளிவரல் மருட்கை**

**அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று**

**அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப” (தொல்.நூ.1197)**

என்று எண்வகை மெய்ப்பாட்டிற்கு நூற்பாவினை வகுத்துள்ளார் தொல்காப்பியர். இம்மெய்ப்பாடுகளின் நிலைக்களன்கள் பின்வருமாறு:

| **எண்வகை மெய்ப்பாடு** | **- நிலைக்களன்கள்** |
|---|---|
| **நகை** | **- எள்ளல், இளமை, பேதைமை, மடம்** |
| **அழுகை** | **- இளிவு, இழவு, அசைவு, வறுமை** |
| **இளிவரல்** | **- மூப்பு, பிணி, வருத்தம், மென்மை** |
| **மருட்கை** | **- புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம்** |
| **அச்சம்** | **- அணங்கு, விலங்கு, கள்வர், இறை** |
| **பெருமிதம்** | **- கல்வி, தறுகண், இசைமை, கொடை** |
| **வெகுளி** | **- உறுப்பறை, குடிகோள், அலை, கொலை** |
| **உவகை** | **- செல்வம், புலன், புணர்வு, விளையாட்டு** |

என்பனவாகும்.

**நகை**

நகையாகிய சிரிப்பு மனித இனத்திற்கே உரிய சிறப்பான மெய்ப்பாடு. ஆயத்தாரோடு கூடி மகிழும் இடத்து நகை தோன்றுதல் இயற்கை. அதனால் தான் பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளுள் நகை முதலாக அமைகின்றது.

தொல்காப்பியர் குறிப்பிடும் எண்வகை மெய்ப்பாடுகளுள் முதல் மெய்ப்பாடாக நகை மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. நகையென்பதற்கு, **இகழ்ச்சியிற் பிறப்பது**[35] என இளம்பூரணரும் **நகையென்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலும் என மூன்றென்பது**[36] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

நகை என்னும் மெய்ப்பாடு தோன்றுதற்கான நிலைக்களன்களாக,

**“எள்ளல் இளமை பேதைமை மடன் என்று**

**உள்ளப்பட்ட நகை நான்கு என்ப”** **(தொல்.1198)**

என்னும் சூழல்களைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

நகை என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 120 இடங்களில் பயின்றுவந்துள்ளது.

| **நகைக்குரிய நிலைக்களன்கள்** | **எண்ணிக்கை** |
|---|---|
| எள்ளல் | 25 |
| இளமை | 7 |
| பேதைமை | 8 |
| மடமை | 24 |
| நகை | 45 |
| முறுவல் | 6 |
| பெருநகை | 3 |
| மொத்தம் | 120 |

### எள்ளல்

எள்ளல் என்பது பரிகசித்தல். தான் பிறரைப் பரிகசித்துச் சிரித்தலும் தான் பிறரால் பரிகசிக்கப்பட்டுச் சிரித்தலும் ஆகும். எள்ளல் தோன்றுமிடத்தை பேராசிரியர் **முடவர் செல்லும் செலவு, கூனரும் குறளரும் நடக்கும் நடை, ஊமை பேச முயலும் ஓசை, செவிடர் பிறர் கூறியதை உணராமல் பேசும் பேச்சு, கல்லார் கூறும் கல்வி, கள்ளுண்டு களித்தோர் செயல், அலி, பேடி, இவர்கள்தம் நடை உடைகள், ஆரியர் கூறும் தமிழ் போல்வன**[38] என்று கூறுகின்றார். **எள்ளல் என்பது பிறருடைய ஏளனத்திற்கு ஒருவர் ஆளாதல்**[39] என தமிழண்ணல் விளக்கம் தருகிறார்.

கலித்தொகையில் எள்ளல் என்னும் மெய்ப்பாடானது எள்ள, எள்ளப்படு, எள்ளல், எள்ளலன், எள்ளி, எள்ளுபு, எள்ளும், எள்ளுமார், எள்ளுவாய் என்னும் சொற்களால் 25 இடங்களில் பயின்றுவந்துள்ளது.

| **எள்ளல் மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை (05)** | **கலித்.**13:26-27, 27:9-10, 33:16-18, 33:28-29, 33:13 |
| **குறிஞ்சி (03)** | **கலித்.**59:20-21, 61:22-23, 61:25-26 |
| **மருதம் (09)** | **கலித்.**81:16-17, 81:23-24, 83:26-27, 84:39-40, 94:5-6; 31-32; 13-14; 38-39, 97:15-16 |
| **முல்லை (01)** | **கலித்.**114:4-5 |
| **நெய்தல் (07)** | **கலித்.**118:9-10, 120:8-9, 120:13-15, 137:13-14, 138:3-4, 145:45-46, 145:51-52 |
| **மொத்தம்** | **25** |

மருதத்திணையில் கூனியும் குறளனும் பேசிக்கொள்வதாக வரும் பாடலில் அவர்கள் இருவரும் கோயிலில் ஓரிடத்தில் நின்று பேசிக் கொண்டுள்ளனர்.

இக்காட்சியைக் கண்ட ஊரார் பேயும் பேயும் பேசிக் கொள்வதாகக் கூறி ஏளனம் செய்கின்றனர். இதனைக் கண்ணுற்ற அவர்கள் ஊராரது ஏளனப் பேச்சைத் தடுக்க வேறு இடம் செல்வோம் என வேற்று இடம் செல்வதை,

**'"ஏஎ!, பேயும் பேயும் துள்ளல் உறும்' எனக்**

**கோயிலுள் கண்டார் நகாமை வேண்டுவல்" (கலித்.94:38-39)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இதில் பிறர்கண் தோன்றிய எள்ளல் மட்டுமின்றிக் கூனியும் குறளனும் தங்களின் உரையாடலின் ஊடே ஒருவரை ஒருவர் அவர்களது உருவம் குறித்து ஏளனமாகப் பேசி எள்ளி நகையாடுவதும் தன்கண் தோன்றிய எள்ளலுக்குச் சான்றாகிறது. இதனை,

**"ஆண்டலைக்கு ஈன்ற பறழ் மகனே! நீ எம்மை**

**'வேண்டுவல்' என்று விலக்கினை" (கலித்.94:4-5)**

**"குறிப்புக் காண் -வல்லுப் பலகை எடுத்து நிறுத்தன்ன**

**கல்லாக் குறள! கடும்பகல் வந்து எம்மை" (கலித்.94:13-14)**

**'"யாமை எடுத்து நிறுத்தற்றால், தோள் இரண்டும் வீஇசி,**

**யாம் வேண்டேம் என விலக்கவும், எம் வீழும்**

**காமர் நடக்கும் நடை காண்'" (கலித்.94:31-32)**

என்னும் பாடலடிகள் விளக்கும். பிரிந்து சென்ற தலைவனை எண்ணித் தலைவி படும் துயர் அதைக் கண்டு ஊரார் பேசும் பேச்சு, அ∴றிணை உயிர்களின் ஓசை, வருத்தும் மாலைப்பொழுது என அனைத்தும் தலைவியை எள்ளி நகையாடுவது போன்று இருப்பதாகச் சுட்டுவது எள்ளல் மெய்ப்பாட்டிற்குச் சிறந்த சான்றுகளாகும். இது பேராசிரியர் குறிப்பிடும் தன்கட் பிறந்த எள்ளல் என்னும் அடிப்படையில் அமைந்திருத்தல் குறிப்பிடத்தக்கது.

தலைவன் பிரிந்து சென்றவிடத்து தனித்திருக்கும் தலைவியை ஊரார் ஒதுக்கித் தள்ளி எள்ளி நகையாடி அலர் தூற்றுகின்றதை,

**“தமியார்ப் புறத்து எறிந்து எள்ளி”          (கலித்.33:13)**

என்ற பாடலடி சுட்டும். குயில்களும் மயில்களும் அழகு இழந்து பசலையால் உடல் மாறுபட்ட தலைவியைக் கண்டு பரிகசிப்பதை,

**“நொந்து நகுவன போல்நந்தின, கொம்பு, நைந்து உள்ளி**

**உகுவதுபோலும் என் நெஞ்சு; எள்ளி,**

**தொகுபுஉடன் ஆடுவ போலும், மயில்;”  (கலித்.33:16-18)**

**“புரிந்துநீ எள்ளும் குயிலையும், அவரையும், புலவாதி”  (கலித்.33:28)**

**“நிமிர்பு ஆலும் குயில் எள்ள”    (கலித்.27:9)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

தலைவன் தன் காதலை ஊரில் உள்ள பலரும் அறியும் படி செய்வதற்காக மடலேறி வலம் வருகின்றான். இச்சூழலில் தலைவனது தோற்றத்தைக் காணும் அனைவருக்கும் எள்ளல் தோன்றுகின்றது. இதனால் தலைவன் பிறரால் பரிகசித்தலுக்கு ஆளாகின்றான். (கலி.61:22-23)

போரிலே தோற்று வாடி வந்தவரை எதிரிகள் எள்ளி நகையாடியதைப் போன்று தலைவனின் பிரிவை ஆற்றாத தலைவியின் நிலையினைக் கண்டு மாலைக்காலம் பரிகசிப்பதை நெய்தற்கலி (கலித்.120:13-15) உரைக்கும். இதில் தலைவியின் நிலை போரிலே தோற்ற படைக்கும் மாலைக்காலம் எதிரே போரிட்டு வெற்றி பெற்றோருக்கும் உவமையாக அமைந்துள்ளது.

பரத்தையர் இல்லம் சென்று வந்த தலைவன் தனது வீட்டின் பின்புறத்தில் பதுங்கிப் பதுங்கி வருதலை அறிந்த தலைவி எதிரி நாட்டுப் பகைவர்களை எண்ணி அவர்களின் படைக்கலங்கள் உள்ள இடத்திற்குப் பதுங்கிப் பதுங்கிச் செல்வது போல தன்னுடைய வீட்டிற்கு வருவதற்கே மறைந்து வருகின்றான் என எள்ளி நகையாடுகின்றாள். (கலித்.81:16-17) இந்த எள்ளலின் காரணமாகத் தலைவிக்கு வருத்தம் மிகுகின்றது.

தலைவியை விட்டுப் பிரிந்த தலைவன் பரத்தையரிடம் செல்கின்றான். தலைவன் பரத்தையர் இல்லம் செல்கிறான் என்பதற்காகப் பரத்தையை எள்ளி நகுதலில் எந்தப் பயனும் இல்லை (கலித்.84:39-40) எனத் தலைவி உரைக்கின்றாள்.

இன்றும் கூட ஏதேனும் சிறு தவறு செய்தாலும் அதனைத் திருத்தாமல் பரிகசிக்கும் நிலை உள்ளது. எதற்கு எடுத்தாலும் எள்ளி நகையாடுபவர்களே அதிகம். இவ்எள்ளல் என்னும் மெய்ப்பாட்டின் காரணமாக வருத்தம் என்னும் மெய்ப்பாடு தோன்றுவது குறிப்பிடத்தக்கது. இங்ஙனம் ஒரு மெய்ப்பாட்டின் காரணமாக இன்னொரு மெய்ப்பாடு தோன்றுவது எள்ளல் மெய்ப்பாட்டிற்குரியதாக உள்ளது.

## இளமை

நகை என்னும் மெய்ப்பாடு தோன்றுதற்குரிய நிலைக்களன்களில் இளமை இடம்பெற்றுள்ளது. இளமை என்பதற்கு **குழவி கூறும் மழலை**[39] என்று இளம்பூரணரும் **தன் இளமையான் பிறரை நகுதலும், பிறர் இளமை கண்டு தான் நகுதலும்**[40] எனப் பேராசிரியரும் **மழவு; அறிவு முதிராப் பிள்ளைத் தன்மை**[41] எனச் சோமசுந்தர பாரதியாரும் பொருள் கூறுகின்றனர்.

இளமை என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் ஏழு இடங்களில் பயின்று வந்துள்ளது.

| இளமை மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.10:14-15, 13:27 |
| குறிஞ்சி | கலித்.58:7-8, 57:7, 59:21 |
| மருதம் | கலித்.86:26-27 |
| முல்லை | கலித்.108:21 |
| நெய்தல் | - |
| மொத்தம் | **07** |

இது பெரும்பாலும் தலைவன் கூற்றிலேயே அமைந்துள்ளமை சுட்டுதற்குரியது. குறிஞ்சிக்கலியில் தலைவி தன்னுடைய இளமைச் செருக்கினால் தான் கூறுவதை உணரவில்லை எனத் தலைவன் தலைவியைக் கடிந்து கொள்ளுமிடத்தும் (கலித்.58:7-8) சிறு பெண்களுடன் சிரித்து விளையாடும் போது பருவத்தின் வேகத்தால் வெளியே பந்தை எறிந்துவிட்டு பந்தின் பின்னாகவே ஓடிவரும் தலைவியைக் கண்டு கூறுமிடத்தும் (கலித்.57:7) வளர்ந்த பெண்ணான தலைவி இன்னும் சிறு பிள்ளைகளுடன் சிரித்துப் பேசி விளையாடுவது தான் நன்றாக இருக்குமோ என்று கூறுமிடத்தும் இளமை என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. இதனை,

**“நறு நுதலவரொடு நக்கது நன்கு இயைவதோ?” (கலித்.59:21)**

என்றும் தலைவியின் சிறுபிள்ளைத் தனத்தைக் கூறுமிடத்தும்,

**“மண்டாத கூறி, மழ குழக்கு ஆகின்றே” (கலித்.108:21)**

என்பதில் பொருத்தமற்றதை கூறிப் பிடிவாதம் செய்யும் குழந்தையைப் போன்று தலைவியின் செயல் உள்ளது என்று தலைவன் கூறுவதும் நன்கு விளக்கும். மேலும் தலைவி சிறுமியரோடு சேர்ந்து கோரைப் பொம்மைகளை செய்து விளையாடுகின்ற இளமைப் பருவம் எனத் தலைவன் நினைத்தல் நகைக்குரியது. தன் இளமைப் பொருளால் நகை பிறந்ததை,

**“நடுங்குதல் காண்மார் நகை குறித்தனரே” (கலித்.13:27)**

**“திறனல்ல யாங்கழற யாரை நகுமிம்**
**மகனல்லான் பெற்ற மகன்” (கலித்.86:26-27)**

என்னும் பாடலடிகளால் அறியமுடிகின்றது. இளமை என்னும் மெய்ப்பாடானது பிறர்கண் தோன்றும் இளமை என்னும் அடிப்படையில் கலித்தொகையில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## பேதைமை

நகை என்னும் மெய்ப்பாடு தோன்றக்கூடிய நிலைக்களன்களில் மூன்றாவதாகச் சுட்டப் பெறுவது பேதைமை ஆகும். பேதைமை என்பதற்கு **கேட்டதனை உண்மையா பொய்யா என்று ஆராயாது உண்மையாகவே கோடல்**[42] என்று இளம்பூரணரும் **அறிவின்மை**[43] என்று பேராசிரியரும் பொருள் கூறுகின்றனர். பேதைமை என்னும் மெய்ப்பாடானது 8 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| **பேதைமை மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | கலித்.27:7-8, 27:9-10 |
| **குறிஞ்சி** | கலித்.56:14-17, 56:28-29, 61:15-16 |
| **மருதம்** | - |
| **முல்லை** | கலித்.114:8-9 |
| **நெய்தல்** | கலித்.147:64-65, 147:68 |
| **மொத்தம்** | 08 |

தலைவனின் பிரிவுத்துயரால் வாடும் தலைவியின் துயரத்தை மேலும் மிகுவிப்பதாக இளவேனிற் பருவம் வந்தது. இது அறிவற்ற அமைச்சனின் திறனற்ற செயலால் பெருமையிழந்த அரசனின் நாட்டிலே வேற்றுப் படைகள் வந்து அடித்துக் கெடுப்பது போல தலைவனைப் பிரிந்த இளவேனிலானது துன்பப்படுத்தியது என்று ஒப்பிட்டுரைக்கப்படுகிறது. இதனை,

**“பேதையோன் வினைவாங்க பீடு இலா அரசன் நாட்டு,**

**ஏதிலான் படைபோல, இறுத்தந்தது, இளவேனில்”　　　(கலித்.27:7-8)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

அழகான பெண் ஒருத்தி தெருவில் வலம் வரும் பொழுது அவளின் அழகு கண்டவர்களின் உயிரைக் கொல்லும் தன்மையுடையதாக அமைகின்றது. (கலித்.56:14-15) தன் அழகு பிறருக்குத் துன்பத்தை விளைவிக்கக் கூடியதாக இருப்பதை அறியாத பேதைப் பெண்ணாகத் தலைவி இருத்தலைக் கண்டு தலைவன் அவளிடம் பேதையைப் போல பிறர் வருத்தத்தை நீ அறியவில்லையோ என வினவுவதை,

**“பேதுற்றாய் போலப் பிறர் எவ்வம் நீ அறியாய்,**

**யாது ஒன்றும் வாய் வாளாது இறந்தீவாய்! கேளினி” (கலித்.56:28-29)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். இதில் தலைவியின் பேதைமைத் தன்மை பிறருக்கு நகைப்பை உண்டாக்குவதற்குப் பதிலாக வருத்தத்தை மிகுவிப்பதாகவே உள்ளது.

முல்லைக்கலிப் பாடலில் தலைவி, தலைவனுடன் தான் கொண்டுள்ள களவு ஒழுக்கத்தைப் பெற்றோரிடம் தெளிவாகக் கூறத் தெரியாத தோழியை நோக்கி,

**“சொல் அறியாப் பேதை” (கலித்.114:8)**

எனக் குறிப்பிடுகின்றாள். இதில் தோழியின் பேதைமையால் தான் கொண்டுள்ள களவு ஒழுக்கம் தம் பெற்றோருக்கு உரிய வகையில் எடுத்துச் சொல்லவில்லை என்ற வருத்தம் இம்மெய்ப்பாடு தோன்ற காரணமாக அமைந்துள்ளமை சுட்டத்தக்கது. இதைத் தொடர்ந்து தலைவி தோழியிடம் நீ பெற்றோரிடம் சொல்லத் தெரியாமல் கூறியது போல் அல்லாமல் தலைவனிடம் சென்று விரைவில் மணம் பேச வரவேண்டும் என்பதை மட்டும் தெளிவாக, விளக்கமாக அவனுக்குப் புரியுமாறு கூறுவாயாக என்றுரைக்குமிடத்து தோழியின் பேதைமை சிறப்பாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது. **‘சொல்லறியாப் பேதை’** என்னும் சொற்றொடர் தலைவியின் பேச்சு மெய்ப்பாடாக அமைந்து தலைவிக்கு வருத்த நகையைத் தோற்றுவிப்பதாக உள்ளது.

பேதைமைத் தன்மை கொண்ட தலைவியிடம் நாணமும் வந்து உடலிலே பரவ

தனது தலைவனுடன் சென்று சேர்கின்றாள் என்பதில் தலைவியின் அறியாமைத் தன்மை சுட்டப்படுகின்றது (கலித்.147:68)

கலித்தொகையில் பெரும்பாலும் பேதைமை காரணமாக நகை என்னும் மெய்ப்பாடு தோன்றுவதற்குப் பதிலாக பேதைமையை நிலைக்களனாகக் கொண்டு பிறருக்கு வருத்தமே தோன்றுகின்றது என்பதை அறிய முடிகின்றது. பேதைமை கணப் பொழுது நகைப்பைத் தந்தாலும் அடுத்த நொடி அது வருத்தமாக மாறுதல் சுட்டத்தக்கது.

**மடன்**

நகை என்னும் மெய்ப்பாடு தோன்றக்கூடிய நிலைக்களன்களில் நான்காவது மடன் ஆகும். இதனை இளம்பூரணர், **செய்தியை உள்ளவாறு உணராமல் தவறாக உணர்தல்** என்றும் **மடவோர் சொல்லும் சொல், பிதற்றிக் கூறும் பித்தர் மொழி, தமக்கு உற்றுழி உதவும் சுற்றத்தாரை இகழும் மொழி, ஒருவரிடம் அடியவராகப் பணிபுரிவோர் அவரைப் பற்றிய உண்மையை ஆராயாது கூறும் மொழி, மெலியோர் தம்மை வலியோராக கருதிக் கூறுவது, வலியோர் தம்மை மெலியோராகக் கருதிக் கூறுவது, தம்முடைய பகைவரை நண்பராக மதித்துப் பேசுவது, ஒரு பெண்ணின் உள்ளத்தை உள்ளவாறு அறியாது காமுகன் தன் உள்ளத்தை அவள்பால் செல்லவிட்டுப் பேசுவது - போல்வன பொருண்மை அறியாது திரியக் கொண்டு கூறும் மடன் பற்றியன. இவற்றை கேட்பவருக்குப் பிறர் மடம் பொருளாக நகை பிறக்கும்**[44] என்றும் கூறுகிறார். **பெரும்பான்மையும் பெற்றோரும் தலைவனும் கற்பித்த செய்திகளை மனத்துக் கொண்டு தான் அவற்றை வெளிக்காட்டாதிருத்தல்**[45] என்று பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

| மடன் மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.14:10-11, 27:2-3 |
| குறிஞ்சி | கலித்.56:16-17, 57:1-2, 58:10-11, 61:16-17 |
| மருதம் | கலித்.70:1-4, 82:9; 82:13-14, 83:28-29, 92:17-18 |
| முல்லை | கலித்.102:6-7, 102:30-31, 108:21-22, 111:8-9, 113:15-16, 114:8-9 |
| நெய்தல் | கலித்.123:7-8; 123:10-11; 123:14-15; 123:19, 132:12-14, 147:9-10, 150:22-23 |
| மொத்தம் | 24 |

மடன் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 24 இடங்களில் பயின்று வந்துள்ளது. தலைவன் தலைவியைக் கூறுமிடத்து மடமைத் தன்மையுடைய பெண்ணே என்றும், தலைவி தன் நெஞ்சினை அறியாமைத் தன்மை நிரம்பிய நெஞ்சே எனவும் சுட்டிக் கூறுமிடங்களில் இம்மெய்ப்பாடு பயின்றுளது. இதனை,

**"காணவும் பெற்றாயோ? காணாயோ? - மடநெஞ்சே!" (கலித்.123:8)**

**"வருந்தினை - அளிய என் மடம் கெழு நெஞ்சே!" (கலித்.123:19)**

**"மடக்குறு மாக்களோடு ஓரை அயரும்" (கலித்.82:9)**

என்ற பாடலடிகள் விளக்கும். மேலும் ஒரு அழகிய தாமரைப் பொய்கையில் அன்னம் தன் பெடையுடன் விளையாடிக் கொண்டிருந்தது. அப்போது அகன்ற தாமரை இலை ஒன்று அன்னச் சேவலை மறைக்க தன் இணையைக் காணோமே எனக் கலங்கிய அந்தப் பெடையின் அறியாமை,

**"மணி நிற மலர்ப்பொய்கை, மகிழ்ந்து ஆடும் அன்னம் தன்**
**அணி மிகு சேவலை அகல் அடை மறைத்தென,**

**கதுமென, காணாது, கலங்கி, அம்மடப் பெடை"** **(கலித்.70:1-3)**

என்று பாடப்பெற்றுளது. உயர்திணைக்கு மட்டுமின்றி அஃறிணைக்கும் உரியதாக இம்மெய்ப்பாடு புலவர்களால் பாடப்பெற்றுள்ளதைப் புலப்படுத்தும்.

## முறுவல்

முறுவல் மெய்ப்பாட்டைப் பேராசிரியர் **முறுவலித்து நகுதல்**[46] என்று கூறுகிறார். கலித்தொகையில் 6 இடங்களில் இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. கலித்தொகையில் முறுவல், முறுவலாய், முறுவலார், முறுவலாள் போன்ற பெயர்களில் இம்மெய்ப்பாடு சுட்டப்பெற்றுளது.

| முறுவல் மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.15:25, 27:4, |
| குறிஞ்சி | --- |
| மருதம் | --- |
| முல்லை | --- |
| நெய்தல் | கலித்.119:7, 118:20, 140:27-28 |
| கடவுள் வாழ்த்து | கட.வா:12-13 |
| மொத்தம் | **06** |

**"முளை நிரை முறுவலார் ஆயத்துள் எடுத்து ஆய்ந்த"** **(கலித்.15:25)**

**"மாதரார் முறுவல் போல், மண மௌவல் முகை ஊழ்ப்ப"** **(கலித்.27:4,119:7)**

என்னும் பாடலடிகளில் முளை வரிசை போன்ற பல் வரிசையுடைய கன்னியரின் முறுவல் என்றும், மாதர்களின் முறுவல் போல் முல்லை அரும்புகள் அரும்பி உள்ளன என்றும் தனது மனம் கவர்ந்தவருடன் கூட்டத்தைக் கொண்ட மகளிரின் முறுவலை மாலைக்காலமானது தடைசெய்யாது (கலித்.118:20) என்றும் முறுவல் மெய்ப்பாடு சுட்டப்பெற்றுள்ளது.

மடலேறிய தலைவன், சுற்றி இருந்தோரிடம், முறுவலை உடையவள் தந்தது தான் இந்தக் காமநோய் என்கிறான். இதனை,

**"செறிந்த ஏர் முறுவலாள் செய்த இக்காமம்**

**அறிந்தும் அறியாது, இவ்ஊர்" (கலித்.140:27-28)**

என்னும் பாடலடிகள் விளக்கும். கடவுள் வாழ்த்துப் பாடலிலும் சிவபெருமான் காபாலம் என்னும் கூத்தை ஆடும் போது உடனிருக்கும் உமையம்மை முல்லையை ஒத்த முறுவலை உடையவள் என்பர் நல்லந்துவனார். இதனை,

**"தலை அங்கை கொண்டு, நீ காபாலம் ஆடுங்கால்,**

**முலை அணிந்த முறுவலாள் முன் பாணி தருவளோ?" (கலித்.கடவுள்.வா)**

என்னும் பாடலடிகள் விளக்கும். முறுவல் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் பெண்களுக்கு மட்டுமே உரியதாக்கப்பட்டுள்ளமை சுட்டுதற்குரியது.

**நகை**

கலித்தொகையில் நகை என்னும் மெய்ப்பாடானது நகை என்னும் பெயரிலேயே பயின்றுவந்துள்ளது. நகை, நகூஉம், நகுவார், நகுக, நகுதரும், நகுபவள், நகுவன, நக்க என்பன போன்ற சொற்களால் 45 இடங்களில் காணப்பெறுகின்றது.

| நகை மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.10:1-2, 15:25-26, 23:4-5, 27:3-4 |
| குறிஞ்சி | கலித்.40:1-3, 51:14-16, 55:3-4, 55:21-22, 60:8-9, 65:2-3, 65:28-29 |
| மருதம் | கலித்.71:6-7, 72:11-12, 74:15-16, 81:4-5, 82:13-14, 84:20-21, 92:23-24; 33-34, 93:11-12, 94:35-36, 97:4-7; 20-21, 98:37-38 |
| முல்லை | கலித்.102:38-39, 105:41-42, 108:6-7, 110:4-5, 119:6-7 |

| | |
|---|---|
| நெய்தல் | கலித்.122:23-24, 133:10-11, 137:6-7, 138:24-25, 142:7-8, 139:28-29, 140:27-28, 142:15-16, 143:59-60, 144:2-3, 144:64-65, 145:9-10, 145:45-46, 146:23-24, 147:9-10, 147:13-14 |
| **மொத்தம்** | **45** |

கலித்தொகைத் தலைவி கண்ணினாலும் முகத்தினாலும் நகுபவள் என்பதை,

**"தன், கண்ணினும் முகத்தினும் நகுபவள்" (கலித்.142:8)**

**"நனிவிரைந்து அளித்தலின், நகுபவள் முகம்" (கலித்.71:6)**

**"முத்து ஏர் முறுவலாய்" (கலித்.93:11)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். மேலும் தலைவியின் இல்லத்திற்கு வந்த தலைவன் தாகமாக இருக்கின்றது, பருகச் சிறிது தண்ணீர் வேண்டும் எனக் கேட்கிறான். தலைவியின் தாயும் தலைவியைத் தண்ணீர் கொண்டு வந்து தர உத்தரவிடுகின்றாள். தலைவி தண்ணீரைக் கொடுக்கும் போது அவளது கரத்தைத் தலைவன் பற்ற ஐயோ எனத் தலைவி அலற, பதறி வந்த தாயிடம் சொல்வதறியாது விக்கிற்று எனத் தலைவி கூறியவுடன் தலைவன் தன்னைப் பார்த்து நகைத்ததை,

**"என்னைக் கடைக் கண்ணால் கொல்வான் போல் நோக்கி, நகைக்கூட்டம்**

**செய்தான் அக்கள்வன் மகன்" (கலித்.51:14-16)**

என்னும் பாடலடிகள் விளக்கும். நகை என்னும் மெய்ப்பாடு கேலிப் பொருளிலும் பயன்பட்டதை இப்பாடல் உணர்த்துகின்றது. தலைவி, தோழியை வள்ளைப்பாட்டு பாட அழைக்கின்றாள். தினைப்புனத்தில் உள்ள தினைக் கதிர்களை மகிழ்ச்சியை உடைய நல்ல மகளிருக்கு ஒப்புமைப்படுத்துவதை,

**“அகவினம் பாடுவாம், தோழி! - அமர்கண்**

**நகைமொழி, நல்லவர் நாணும் நிலைபோல்” (கலித்.40:1-2)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். இங்கு நகை என்னும் மெய்ப்பாடானது தொல்காப்பியர் கூறும் நிலைக்களன்களுள் மாறுபட்டு வருவது சுட்டத்தக்கது.

## பெருநகை

பெருநகை என்பது **உரக்கச் சிரித்தல்**[47] ஆகும். பெருநகை என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 3 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| பெருநகை மெய்ப்பாடு | திணை வாரியாக பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | - |
| குறிஞ்சி | - |
| மருதம் | - |
| முல்லை | - |
| நெய்தல் | கலித்.120:9, 145:9, 145:45 |
| மொத்தம் | 03 |

நெய்தற்கலியில் கூற்றுவன் உயிர்களைப் பார்த்துக் கோரமாகச் சிரிப்பது போன்று மாலை வந்ததாக உரைப்பது இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும். இதனை,

**“கூற்று நக்கது போலும் உட்குவரு கடு மாலை!” (கலித்.120:9)**

என்னும் அடிகள் விளக்கும். தன்னை விட்டுச் சென்ற தலைவனை நினைத்து அழுதும் நக்கும் வருந்தும் தலைவியை,

**“மறந்தாள் போல் ஆலி நகூஉம்; மருளும்” (கலித்.145:9)**

என்று கலித்தொகை காட்சிப் படுத்தும். மேலும் தலைவியின் இந்நிலையைக் கண்டு ஊரார் அனைவரும் பெருகச் சிரித்தலும் (கலித்.145:45) இடம்பெற்றுள்ளது. பலரும் என்னைப் பார்த்துச் சிரிக்கும் நிலைக்கு ஆளாக்கிவிட்டான் தலைவன் என்று வருந்தும் தலைவியைக் காணமுடிகின்றது.

கலித்தொகையில் நகை என்னும் மெய்ப்பாடு நகைக்குரிய பொருளில் மட்டுமின்றி கேலிப் பொருளிலும் பயன்பட்டதை அறிய முடிகின்றது. மேலும் நகை என்னும் மெய்ப்பாட்டில் அது பெருநகையாக மாறுகின்ற போது தலைவியின் வருத்தத்தை உட்கொண்டு அமைவதைக் காணமுடிகின்றது. தொல்காப்பியர் முறுவல், பெருநகை என்பதை நகை மெய்ப்பாட்டின் நிலைக்களன்களில் குறிப்பிடவில்லை. ஆனால் பேராசிரியர் தமது உரையில் முறுவலித்து நகுதல், பெருகச் சிரித்தல் எனச் சுட்டுகின்றமை குறிப்பிடத்தக்கது.

### அழுகை

தொல்காப்பியர் உரைக்கும் எண்வகை மெய்ப்பாடுகளுள் இரண்டாவதாக அமைவது அழுகை. நகையை முன்வைத்துப் பின் அழுகையைப் பின் வைத்தற்குரிய காரணத்தை, **மற்று நகையை முன்வைத்ததென்னை யெனின். ‘பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருட்கும்’ (249) இவையென்னும் இயல்பில்லனவல்ல என்றதற்கு விளையாட்டுப் பொருட்டாகிய நகையை முன் வைத்தான் என்பது அதற்கு மறுதலையாகிய அழுகையை அதன்பின் வைத்தான்**[48] என்று பேராசிரியர் உரைப்பர்.

### அழுகை தோன்றக் காரணம்

அழுகை தோன்றுவதற்கான காரணிகளை, **தன் செல்வ நிலைமையையும் இழந்து துணைவர்களையும் பிரிதல், மேம்பாடு பொருந்தியதன் தகுதி நீங்குதல், சிறையிலடைக்கப்பட்டுச் செயலற்றிருத்தல், தேவையான பொருள்களுமின்றி வாடியிருத்தல், சாபம் எய்துதல், சேர்ந்தவர்களுக்குத் தவறிழைத்து வருந்துதல், மனத்தை அடக்க இயலாது கலக்கமொடு தடுமாறுதல், கடகம் அணிந்த கையில்**

**வெறும் மஞ்சட் கயிற்றோடிருத்தல் முடி சூடிய தலையால் பிறருடைய அடிகளில் வீழ்ந்து வணங்குதல், களிறும் பரியும் ஊர்ந்தவன் கால்கள் விலங்கிடப்பட்டு வருந்துதல், பொன்னணி அணிந்த மார்பு புழுதிப்படத் தரையில் கிடத்தல், கயவர்களால் மனம் நோவுமாறு துன்புறுத்தப்படுதல், கொலைக்களம் போர்முனை இவற்றால் வருந்துதல், பிறர் துன்புற்று அழும் அழுகுரல் கேட்டல், பிறர்தம் குறைகளைக் கூறி வருந்தும் புலம்பலைக் கேட்டல் ஆகிய செய்திகள் அவலத்தைத் தோற்றுவிப்பனவாம்**[49] என்று செயிற்றியம் கூறுகின்றது.

அழுகை என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 126 இடங்களில் பயின்று வந்துள்ளது. ஒரு சில பாடல்களில் ஒன்றிற்கு மேற்பட்ட அழுகைக்கான மெய்ப்பாடுகள் காணப்படுகின்றன.

| **அழுகைக்குரிய நிலைக்களன்கள்** | **எண்ணிக்கை** |
|---|---|
| **இளிவு** | **25** |
| **இழவு** | **33** |
| **அசைவு** | **22** |
| **வறுமை** | **07** |
| **அழுகை1** | **26** |
| **மொத்தம்** | **126** |

அழுகை தோன்றுதற்கான களன்களைத் தொல்காப்பியர்,

**“இளிவே இழவே அசைவே வறுமை என**

**விளிவில் கொள்கை அழுகை நான்கே” (தொல்.1199)**

என்பர்.

**அழுகை**

அழுகை என்னும் பெயரிலேயே அழுகை என்னும் மெய்ப்பாடானது அழுதல், அழுதனள், அழுதனை, அழுது போன்ற பெயர்களில் 26 இடங்களில் கலித்தொகையில் பயின்று வந்துள்ளது.

| அழுகை மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.5:10-11, 7:11-12, 14:20-21, 15:19-20, 16:1-2, 27:23-24 |
| குறிஞ்சி | கலித்.46:12-13, 53:13-14, 60:12-13, 64:5-6 |
| மருதம் | கலித்.70:11-12, 77:4-5, 85:27-28, 100:13-14 |
| முல்லை | - |
| நெய்தல் | கலித்.122:1-2, 122:4-6, 125:9-10, 130:7-8, 130:16-17, 142:11-12, 142:60-61, 144:4-5, 144:68-69, 145:7-8, 147:10-11, 148:10-11 |
| மொத்தம் | **26** |

பாலைக்கலிப் பாடலில் தலைவனிடம், நீ பிரிந்து சென்றால் நன்கு மலர்ந்த மணம் வீசும் நீல மலரைப் போன்ற தலைவியின் மை தீட்டிய அழகிய கண்கள் அழுது எரிகின்ற திரியிலிருந்து சொட்டும் நெய்போலக் கொதிக்கும் கண்ணீர்த் துளிகளைச் சிந்துகின்றன எனத் தோழி தலைவனைச் செலவழுங்குகின்றாள். இதில் தலைவனைப் பிரிய வேண்டுமே என்ற கவலையில் தலைவிக்கு அழுகை என்னும் மெய்ப்பாடு தோன்றுவதைக் காண முடிகின்றது. (கலித்.14:20-21) தலைவன் தன்னை மறந்து சென்றுவிட்டான் என்று எண்ணித் தலைவி அழுவதை,

**“சிறிய துனித்தனை; துன்னா செய்து அமர்ந்தனை;**
**பலவும் நூறு அடுக்கினை; இனைபு ஏங்கி அழுதனை;**
**அலவலை உடையை என்றி - தோழீ!”        (கலித்.122:4-6)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இது தலைவன் பிரிந்து சென்றதால் வருத்தம் கொண்டு ஏங்கி அழுகின்ற தலைவியைக் காட்சிப்படுத்துவதாக அமைந்துள்ளது. மேலும் தலைவனைப் பிரிந்த தலைவி ஒருத்தியின் கண்களில் கண்ணீர் வடிந்த வண்ணம் உள்ளன என்பதில் தலைவியின் அழுகை மெய்ப்பாடு சுட்டப்பட்டுள்ளது.

**“பெண்மையும் இலள் ஆகி அழுதலும் அழூஉம்; தோழி”      (கலித்.147:10)**

என்னும் பாடலடியில் தலைவியின் துயரானது அழுகை வாயிலாக வெளிப்படுகின்றது. அழுகை என்பது தொல்காப்பியர் காலம் தொட்டு இன்றுவரை பெண்களுக்குரிய மெய்ப்பாடாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. இம்மெய்ப்பாடு தலைவியின் உள்ளத்து உணர்வை, உளவியலை அறியவும் துணைநிற்கின்றது.

## இளிவு

அழுகைக்குரிய நிலைக்களன்களுள் முதலாவது இளிவு ஆகும். இது **பிறர் தன்னை எளியன் ஆக்குதலால் பிறப்பது**[50] என்கிறார் இளம்பூரணர். **பிறரால் இகழப்பட்டு எளியனாதல்**[51] என்கிறார் பேராசிரியர்.

இளிவு என்ற மெய்ப்பாடானது கலித்தொகையில் 25 இடங்களில் பயின்று வந்துள்ளது. இரத்தல் என்பது இழிவான செயலாகும்.

| இளிவு மெய்ப்பாடு | திணை வாரியாக பாடல் எண்கள் |
|---|---|
| **பாலை (06)** | கலித்.2:1-2, 2:11-12, 2:15-16, 2:19-20, 3:6-7, 14:13-14, |
| **குறிஞ்சி (04)** | கலித்.43:13-14, 55:20-21, 59:8-9, 61:10-11 |
| **மருதம் (09)** | கலித்.71:4-5, 72:25-26, 73:17-18, 79:20-21, 94:13-14, 94:22-23, 94:32-33, 99:15-16, 99:18-19 |
| **முல்லை (03)** | கலித்.104:33-34, 105:26-27, 112:13-14 |
| **நெய்தல் (03)** | கலித்.121:9-10, 121:20-21, 143:23-24 |
| **மொத்தம்** | **25** |

ஒருவர் இரந்து கேட்கும் போது ஒன்றும் கொடுக்காமல் இருத்தல் அதைவிட இழிவான செயல் என்பதை

**“இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு” (கலித்.2:11)**

என்னும் பாடலடி விளக்கும். முல்லைக்கலியில் களவிலே உறவாடிய தலைவியை அவளின் பெற்றோர் கண்டித்தனர். அதன்பின் நடந்த சந்திப்பின் போது தலைவியை வழி மறிக்கின்றான் தலைவன். பெற்றவர்களின் வாக்கிற்குக் கட்டுப்பட்ட தலைவியோ தலைவனிடம் தாங்களும் தங்களின் சுற்றத்தாரும் வல்லவராக இருந்தால் என் பெற்றோரிடம் வந்து பேச வேண்டியது தானே என்று இளிவுபடக் கூறுகின்றாள். மேலும் அவனை நோக்கி நண்பகல் பொழுதில் கன்று மேய்ப்பவனைப் போல வருகின்றாய். அதைக் கண்ட சிலர் ஊரின்கண் சென்று இவ்வாறு கூறாமல் வேறாகத் திரித்துக் கூறுகின்றனர். ஆனால் இதனைக் கேட்ட பிறர் என்னை அல்லவா இளிவாக எண்ணுவார்கள் (கலித்.112:14) என்கிறாள். இது தண்கண் தோன்றிய இளிவு என்னும் மெய்ப்பாடாகும்.

மருதக்கலியில் தலைவன் ஒருவன் தலைவியைப் பிரிந்து பரத்தையர் சேரி சென்று அங்கு துணங்கைக் கூத்து ஆடுகின்றான். அதனால் அவனது ஆடை கிழிந்து போகின்றது. அதே தோற்றத்துடன் தலைவியிடம் வருகின்றான். தலைவனின் தோற்றத்தைக் கண்ட தலைவிக்கு அவன்பால் இளிவு என்னும் மெய்ப்பாடு தோன்றுகின்றது. இது பிறர்கண் தோன்றிய இளிவாகும் (கலித்.73:17). கூனி, குறளன் ஆகிய இருவரின் உரையாடலின் போது ஒருவரை ஒருவர் இழிவான சொற்களைக் கூறிக்கொள்கின்றனர். இதனை,

**“என் நோற்றனை கொல்லோ?-**
**நீருள் நிழல் போல் நுடங்கிய மென் மென்சாயல்**
**ஈங்கு உருச் சுருங்கி**
**இயலுவாய்!- நின்னொடு உசாவுவேன்; நின்றீத்தை.**

அன்னையோ! காண்தகை இல்லாக் குறள் நாழிப் போழ்தினான்

ஆண்டலைக்கு ஈன்ற பறழ் மகனே! நீ எம்மை

‘வேண்டுவல்’ என்று விலக்கினை; நின் போல்வார்

தீண்டப் பெறுபவோ மற்று?

மாண்ட எறித்த படை போல் முடங்கி மடங்கி,

நெறித்துவிட்டன்ன நோய் செய்தாய்; பொறீஇ நிறுக்கல்லேன்;

நீ நல்கின் உண்டு, என் உயிர்.

குறிப்புக் காண் - வல்லுப் பலகை எடுத்து நிறுத்தன்ன

கல்லாக் குறள! கடும்பகல் வந்து எம்மை?

‘இல்லத்து வா’ என மெய் கொளீஇ, எல்லா! நின்

பெண்டிர் உளர் மன்னோ? கூறு.

நல்லாய்! கேள்; உக்கத்து மேலும் நடு உயர்ந்து வாள் வாய

கொக்கு உரித்தன்ன கொடு மடாய்! நின்னை யான்

புக்கு அகலம் புல்லின், நெஞ்சு ஊன்றும்; புறம் புல்லின்,

அக்குளுத்து; புல்லலும் ஆற்றேன்; அருளீமோ,

பக்கத்துப் புல்லச் சிறிது

‘போ, சீத்தை! மக்கள் முரியே! நீ மாறு, இனி; தொக்க

மரக் கோட்டம் சேர்ந்து எழுந்த பூங்கொடி போல,

நிரப்பம் இல் யாக்கை தழீஇயினர், எம்மைப்

புரப்பேம் என்பாரும் பலரால்; பரத்தை என்

பக்கத்துப் புல்லீயாய் என்னுமால்; தொக்க

உழுந்தினும் துவ்வா, குறுவட்டா! நின்னின்

இழிந்ததோ, கூனின் பிறப்பு?’ - ‘கழிந்து ஆங்கே,

“யாம் வீழ்தும்” என்று தன்பின் செலவும், உற்றீயாக்

கூனி குழையும் குழைவு காண் (கலித்.94:27-30)

**‘யாமை எடுத்து நிறுத்தற்றால், தோள் இரண்டும் வீஇசி,**

**யாம் வேண்டேம் என்று விலக்கவும், எம் வீழும்**

**காமர் நடக்கும் நடை காண்’ - ‘கவர் கணைச்**

**சாமனார் தம்முன் செலவு காண்’**

**ஓஓ!காண், நம்முள் நகுதல் தொடீஇயர், நம்முள் நாம்**

**உசாவுவம்; கோன் அடி தொட்டேன்.**

**ஆங்கு ஆக! சாயல் இன்மார்ப! அடங்கினேன்; ‘ஏஏ!**

**பேயும் பேயும் துள்ளல் உறும்’ எனக்**

**கோயிலுள் கண்டார் நகாமை வேண்டுவல்;**

**தண்டாத் தகடு உருவ! வேறாகக் காவின் கீழ்ப்**

**போதர்; அகடு ஆரப் புல்லி முயங்குவேம் -**

**துகள் தபு காட்சி அவையத்தார் ஓலை**

**முகடு காப்பு பாத்துவிட்டாங்கு. (கலித்.94)**

என்ற பாடல் விளக்கும். இளிவு மெய்ப்பாடு பிறரால் இகழப்படுதல் என்னும் நிலையிலேயே பெருமளவு பயின்றுள்ளது.

## இழவு

அழுகைக்குரிய நிலைக்களன்களுள் இரண்டாவது இழவு ஆகும். இதற்கு, **உயிரானும் பொருளானும் இழத்தல்**[52] என்று இளம்பூரணரும் **தந்தையுந் தாயு முதலாகிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலானவற்றையும் இழத்தல்**[53] என்று பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

| இழவு மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.3:4-6, 4:22-23, 8:6-7, 10:8-9, 15:25-26, 25:3-4, 26:17-18, 34:1-2 |
| குறிஞ்சி | கலித்.42:13-14, 53:16-17, 61:1-2 |
| மருதம் | கலித்.72:23-24, 72:25-26, 88:20-21, 99:15-16 |

| | |
|---|---|
| முல்லை | கலித்.104:45-46, 109:21-22 |
| நெய்தல் | கலித்.124:15-16, 127:16-17, 129:24-25, 130:4-5, 130:14-15, 132:7-18, 134:9-10, 134:15-16, 136:11-12, 138:16-17, 139:20-21, 144:38-39, 146:18-19, 147:37-38, 149:8-9, 150:13-14 |
| மொத்தம் | **33** |

**இழப்பு என்பது அன்பு கொண்டாரை இழப்பதைக் குறிப்பதாகும். இவ்விழப்பு மீட்க இயலாதது. பிரிவு, இளிவு, வறுமை போன்ற ஏனைய அவலக்கூறுகள் மாறவும் வாய்ப்புண்டு ஆயின் இழப்பு அதனின்று முற்றிலும் வேறுபட்டது ஆகும்.**[54] என்பர் அ.கோபிநாத்.

கலித்தொகையில் பெரும்பாலும் உயிரிழப்பு கூறப்படவில்லை. தலைவனைப் பிரிந்த தலைவி பசலை பாய்ந்து தன் அழகு நலனை இழக்கின்றாள். இதுவே கலித்தொகையில் இழவு என்னும் மெய்ப்பாடாக குறிக்கப் பெற்றுள்ளது.

**“விறல் நலன் இழப்பவும், வினைவேட்டாய்! கேளினி;**
**‘உடைஇவள் உயிர் வாழாள், நீ நீப்பின்’ என” (கலித்.3:5-6)**
**“அறல் சாஅய் பொழுதோடு எம் அணி நுதல் வேறாகி,**
**திறல் சான்ற பெருவனப்பு இழப்பதை” (கலித்.26:17-18)**
**“மாண்நலம் இழந்ததை” (கலித்.132:11)**
**“வேய்நலம் இழந்த தோள் விளங்கு இழை பொறை ஆற்றாள்” (கலித்.127:16)**
**“வேய் நலம் இழந்த தோள் கவின் வாட இழப்பாளை!” (கலித்.99:16)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. உலகங்களில் உள்ள உயிர்களெல்லாம் பழையதாகிய ஊழிக் காலத்தே பிறந்திறந்து தடுமாறித் திரியும்படி இருந்து படைத்தவன் இறைவன். அவனே அரணாய் இருந்து அவ்வுயிர்களெல்லாம் தன்னிடத்தே தொகுத்தலைத் தான் விரும்பும் ஊழிக் காலத்தின் முடிவிலே தன்னிடமே இழப்பு என்ற ஒன்றைத் தந்து அதன் மூலம் இறைவன் உயிர்கள் அனைத்தையும் தன்னிடமே

எடுத்துக்கொள்கிறான். இதனால் உலகிற்கு இழப்பானது ஏற்படுகின்றது. (கலித்.129:1) நல்லாட்சி செய்யும் அரசன் ஒருவன் இறந்துபடுகிறான். அவனுடன் நல்லவைகளெல்லாம் ஒருங்கே போய் அழிந்தன (கலித்.130:4) இதில் அரசன் இறந்ததால் அந்நாடானது இழப்பில் வாடியதை அறியமுடிகின்றது.

நெறியில்லாத சூதாட்டத்தில் ஈடுபட்டுக் கட்டி வைத்த பந்தயப் பொருளை இழந்தவனைப் போல தலைவனைப் பிரிந்த நிலையில் தலைவி தன் அழகினை இழந்து துயரிலே வாடுகிறாள். இதில் பிரிவுத் துயர் இழப்பிற்கு இணையாக உள்ளதை,

**"உடைப்பொதி இழந்தான் போல், உறுதுயர் உழப்பவோ?" (கலித்.136:12)**

என்னும் பாடலடி புலப்படுத்தும்.

**அசைவு**

அழுகைக்குரிய நிலைக்களன்களுள் ஒன்று அசைவு ஆகும். அசைவு என்பதற்கு, **தளர்ச்சி தன் நிலையில் தாழ்தல்**[55] என்கிறார் இளம்பூரணர். **பொருளும் மன எழுச்சியும் குறைந்து போதல், சாபம் எய்துதல், பற்றுக்கோடானவரை இழந்து கலங்குதல், கயவர்களால் மனம் நோவத் துன்பப்படுதல் காவலின்றிக் கலக்கமொடு திரிதல் என்று செயிற்றியமும்; பண்டைநிலை கெட்டு வேறொருவாறாகி வருந்துதல்**[56] எனப் பேராசிரியரும் உரைப்பர்.

| அசைவு மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.14:7-12 |
| குறிஞ்சி | கலித்.52:13-14 |
| மருதம் | - |
| முல்லை | - |
| நெய்தல் | கலித்.139:5-7 |
| மொத்தம் | 03 |

அசைவு என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 03 இடங்களில் பயின்றுளது. நெய்தற்கலியில் மடலேறப் போகும் தலைவன், தலைவி மின்னலைப் போலத் தோன்றித் தன் ஒளியையும் வடிவையும் காட்டித் தன் மனதைக் கவர்ந்ததால் தான் உறக்கமின்றி வருந்துவதாகத் கூறுவதை,

**“துளி இடை மின்னுப் போல் தோன்றி, ஒருத்தி,**

**ஒளியோடு உரு என்னைக் காட்டி, அளியள், என்**

**நெஞ்சு ஆறு கொண்டாள்; அதற்கொண்டும் துஞ்சேன்” (கலித்.139:5-7)**

என்ற பாடலடிகள் விளக்கும். இதில் தலைவனுக்குத் தன்கண் தோன்றிய அசைவு பற்றிய அழுகை தோன்றுகின்றது. காமதேவனே விரும்பித் தந்தது போன்று அழகே உருவான பெண் ஒருத்தி என் நெஞ்சத்தில் குடிபுகுந்துவிட்டாள். நான் அவளுக்கு அடிமையாகிவிட்டேன். அதனைத் தங்களுக்குக் காட்டவே மடலேறுகின்றேன் என்னும் தலைவன் கூற்றில் அசைவு என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. (கலித்.14:7-12)

தலைவியைப் பிரிந்து பொருள் தேடச் செல்ல வேண்டும் என்று கூறும் தலைவனிடம் அவன் பிரிந்தால் தலைவி படும் துயரை எடுத்துக் கூறி தலைவனின் பிரிவைத் தடுக்கின்றாள் தோழி. இதனால் தலைவன் செலவழுங்குகின்றான். எனவே தலைவனுக்கு அசைவு என்னும் மெய்ப்பாடு பிறக்கின்றது.

### வறுமை

அழுகைக்குரிய நிலைக்களன்களில் நான்காவதாக வருவது வறுமை ஆகும். **வறுமை என்பதற்கு நல்குரவு**[57] என்று இளம்பூரணரும், **தான் விரும்பிய பொருள் கிட்டாதாயினும் அதனிடத்து வைத்த ஆசை குறையாதிருத்தலாகிய போகம் துய்க்கப் பெறாத பற்றுள்ளம்**[58] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர். வறுமை என்னும் மெய்ப்பாடானது 6 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| வறுமை மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள |
|---|---|
| பாலை | கலித்.4:4-5, 6:3-4, 10:1-2, 18:10-11 |
| குறிஞ்சி | - |
| மருதம் | கலித்.82:1-2 |
| முல்லை | - |
| நெய்தல் | கலித்.120:4-5 |
| மொத்தம் | 06 |

தனது வறுமைத் துயரினால் ஒருவரை இரந்து வேண்டுபவனின் நெஞ்சம் போல மரங்களெல்லாம் தோற்றம் மாறி வறண்ட தன்மையுடன் காணப்பட்டதை,

**“இடும்பையால் ஒருவனை**

**இரப்பவன் நெஞ்சம் போல், புல்லென்று புறம் மாறிக்” (கலித்.120:4-5)**

என்று நல்லந்துவனார் உரைப்பர். இதில் வறுமை என்பது மக்களுக்கு மட்டுமின்றி மரங்களுக்கும் உண்டு என்பதை அறிவுறுத்துகின்றார். மேலும் உலகில் ஏற்படுகின்ற கொடிய வறுமையைத் தீர்க்க மழையானது பொழிய வேண்டும் என்றும் (கலித்.82:1), இளமைப்பருவத்திலேயே ஒருவனுக்கு ஏழ்மையின் காரணமாக ஏற்படும் வறுமை மிகவும் வேதனைப்படுத்தக் கூடியது (கலித்10:1) என்றும் கலித்தொகை உரைக்கும். ஒரு துண்டு ஆடையை உடுத்தும் நிலைக்கு ஆட்பட்டு வறுமையுற்று வாழ்ந்தாலும் தலைவனும் தலைவியும் ஒன்றிக் கலந்து இன்பமாக வாழ வேண்டும் என்பதை,

**“ஒன்றன் கூறுஆடை உடுப்பவரே ஆயினும்**

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை;” (கலித்.18:10-11)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும். எத்தகைய துன்பம் வந்தாலும் அன்பு என்ற ஒன்றை இழத்தல் கூடாது எனக் கூறி வறுமையின் கொடுமையைப் பற்றியும் இப்பாடல் மிக அழகாகக் கூறுகின்றது. தொல்காப்பியர் சுட்டிய அழுகைக்குரிய நான்கு

நிலைக்களன்களும் கலித்தொகையில் புலவர்களால் பாடப்பெற்றுள்ளமை சுட்டத்தக்கது.

## இளிவரல்

எண்வகை மெய்ப்பாட்டில் மூன்றாவதாகத் தொல்காப்பியர் சுட்டுவது இளிவரல். இழிபு என்னும் பொருள்படும் இம்மெய்ப்பாடு தோன்றுதற்குரிய காரணங்களைத் தொல்காப்பியர்.

**“மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு**

**யாப்புற வந்த இளிவரல் நான்கே”** **(தொல்.நூற்.1200)**

என்றுரைப்பர்.

“இளிவரல் தோன்றக் காரணமான மெய்ப்பாடுகளுக்கு பேராசிரியர், **வருத்தமெனினும் முயற்சியெனினும் ஒக்கும். யாப்புற வந்த என்பது திட்பமுற வந்த என்றவாறு அங்ஙனங் கூறிய மிகையானே வீரமுதலாயின பற்றியும் இளிவரல் பிறக்கும் என்றவாறு. இவையும் முன்னைய போலத் தன்கண் தோன்றுவனவும் பிறர்கண் தோன்றுவனவும் பற்றி எட்டாதலுமுடைய என்பது கொள்க**[59] என்று உரைக்கின்றார். **உயிர் வாழ ஒல்லாமல் மானம் குன்ற வரும் இழிநிலையே இளிவரல்**[60] என்கிறார் சோமசுந்தர பாரதியார்.

| இளிவரலுக்குரிய நிலைக்களன்கள் | எண்ணிக்கை |
|---|---|
| மூப்பு | 09 |
| பிணி | 64 |
| வருத்தம் | 76 |
| மென்மை | 42 |
| மொத்தம் | 191 |

## மூப்பு

**வேறொரு காரணமின்றி ஆண்டு மிகுந்தமை ஒன்றே காரணமாக உடம்பின்கண் தோன்றும் வேறுபாடே**[61] மூப்பாகும் என்பர் சேனாவரையர். கலித்தொகையில் மூப்பு என்னும் மெய்ப்பாடானது 8 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| மூப்பு மெய்ப்பாடு | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | கலித்.2:1-2, 1218-19, 17:11-12, 25:2-3 |
| **குறிஞ்சி** | - |
| **மருதம்** | கலித்.65:8-9, 65:20-23, 81:30-31 |
| **முல்லை** | - |
| **நெய்தல்** | கலித்.130:5-6 |
| **மொத்தம்** | **08** |

தலைவன் பொருள் தேடப் பிரிந்து செல்கின்றான். பொருளீட்டிப் பின் திரும்பி வரும் வரை இளமையும் காலமும் காத்து நிற்காது. முதுமைத் தன்மை வந்துவிடும் எனத் தலைவி கூறும் கூற்றிலும் தலைவன் கூற்றமும் மூப்பும் உள்ளது என்ற உண்மையை மறந்தவர்களோடு இணைந்து ஒன்றாகக் கூடிப் பொருள் தேடிப் போக எண்ணுகிறான் எனவும் அவ்வழியானது இல்லறத்தார் செல்லும் வழியன்று, அறநெறிக்கு மாறுபட்ட தன்மையைக் கொண்ட தவறான வழி என்று கூறித் தலைவனின் செலவைத் தோழி தடுக்கின்றாள் (கலித்.12:17) இதன்மூலம் இளமை நிலையில்லாதது நீ பொருள் தேடச் சென்று திரும்பி வருவதற்குள் மூப்பானது வந்துவிடும் என அறிவுறுத்துவதில் இம்மெய்ப்பாடு சுட்டப்பெறுகிறது.

தலைவனை இரவுக்குறிக்கண் சந்திக்க வரும் தலைவியை இடைமறித்தான் ஒரு முதுபார்ப்பான். அவ்வயோதிகன் அங்குள்ள சேரியில் வாழ்பவன் எனவும் முடவன் எனவும் அறிந்து கொண்டாள் தலைவி. அவனது கேள்விகளுக்கு பதிலளிக்காமல் இருந்த தலைவியைக் கண்டு அணங்கு என்று அஞ்சி வேறுபக்கம் சென்றுவிட்டான்

அம்முதுபார்ப்பான். அவனின் வரவால் தலைவனைக் கண்டு மகிழ முடியாமல் போனதுடன் எல்லாம் நமக்குத் துன்பமாக அமைந்தது என்று தலைவி வருந்துவதை,

**“முது பார்ப்பான் அஞ்சினன் ஆதல் அறிந்து யான், எஞ்சாது” (கலித்.65:20)**

**“தன், வாழ்க்கை அதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்” (கலித்.65:23)**

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். இது பிறன்கண் உள்ள மூப்பின் காரணமாகத் தனக்கு ஏற்பட்ட துன்பத்தைப் புலப்படுத்துகிறது.

**பிணி**

பிணி என்பதற்கு **பிணியாகிய நோய் ஏற்பட்டிருப்பது கண்டு இழித்தல் அதனால் உடம்பு தூயதன்று என இழித்தலும்**[62] ஆகும் என்கிறார் இளம்பூரணர். பிணி என்னும் மெய்ப்பாடானது 55 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| பிணி மெய்ப்பாடு | திணை வாரியாக பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.27:22-23, 28:10-11, 29:1-2, 29:24-25, 30:18-19, 33:20-21, 35:22-23, 36:16-17 |
| குறிஞ்சி | கலித்.37:5-6, 40:6-7, 40:20-21, 42:19-20, 44:11-14, 46:23-27, 53:20-22, 58:7-8, 60:18-19, 63:10-11, 66:13-14 |
| மருதம் | கலித்.75:7-8, 76:8-9, 77:18-19, 78:17-18, 81:18-19, 82:15-16, 82:20-21, 83:29-30, 85:24-25, 86:24-25, 90:5-6, 94:10-11, 99:12-13 |
| முல்லை | கலித்.107:26-27, 109:21-22, 111:23-24, 113:3-4 |
| நெய்தல் | கலித்.120:18-19, 122:22-23, 123:6-7, 123:10-11, 123:16-17, 124:5-6, 124:10-14, 127:6-7, 127:19-20, 130:18-19, 145:25-26, 145:51-52, 145:60-61, 146:25-26, 146:31-34, 146:38-39, 146:44-45, 147:40-41, 148:17-18 |
| **மொத்தம்** | **55** |

தலைவியை விட்டுத் தலைவன் பொருள் தேடவோ அல்லது பரத்தையரைத் தேடியோ பிரிந்து செல்கின்றான். அவனது பிரிவானது தலைவியிடம் பிணியை உண்டாக்கியதை,

**'"ஓரும் நீ நிலையலை!' எனக் கூறல் தான் நாணி,**
**நோய் அட வருந்தியும் நீ செய்த அருள் இன்மை**
**ஆயமும் மறைத்தாள், என்தோழி" (கலித்.44:13-15)**

**"கலந்த நோய் கைம்மிக, கண்படா என்வயின்**
**புலந்தாயும் நீ ஆயின், பொய்யானே வெல்குவை**
**இலங்குதாழ் அருவியோடு அணிகொண்ட நின்மலைச்**
**சிலம்பு போல், கூறுவ கூறும்**
**இலங்கு ஏர் எல்வளை, இவளுடைய நோயே" (கலித்.46:23-27)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். அழகான வளையலணிந்த தலைவி தலைவனைக் காணாது அவனது நினைவிலேயே வாடுகின்றாள். ஏதாவது பொய் கூறியாயினும் சென்று அவளின் காம நோய் என்னும் பகையைப் போக்கி வெற்றி பெறுவாயாக எனத் தலைவனிடம் தோழி கூறுவதாக உள்ளது. இதன்மூலம் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஏற்பட்ட நோய் பிணி எனும் மெய்ப்பாட்டிற்குச் சான்றாகிறது. தலைவனைப் பிரிந்த தலைவிக்கு மாலை நேரமானது காம நோயினை மிகுவிக்கின்றது. எனவே தலைவி இரவெல்லாம் கொடுமை செய்கின்ற தீராத காம நோயினால் வருந்தி வாடுகின்றாள். அதனால் வாழாது இறந்துபடுவாள் போலுள்ளது. எனவே தலைவனாகிய நீ விரைவில் வந்து அவளது நோயைப் போக்க வேண்டும் எனத் தோழி கூறுவதை,

**"விளியா நோய் உழந்து ஆனா என் தோழி, நின் மலை**
**முளிவுற வருந்திய முனைமுதிர் சிறு தினை**
**தளிபெறத் தகைபெற்றாங்கு" (கலித்.53:20-22)**

என்னும் பாடலடிகள் விளக்கும். பெருமளவு தலைவன் பிரிவால் தலைவிக்கு ஏற்படும் நோயாகவே பிணி எனும் மெய்ப்பாடு கலித்தொகையில் காணப்பெறுகிறது.

## வருத்தம்

வருத்தம் என்னும் மெய்ப்பாடு இளிவரல் தோன்றுவதற்குரிய நிலைக்களன்களுள் மூன்றாவதாக அமைந்துள்ளது. இம்மெய்ப்பாட்டிற்கு **தன் மாட்டும் பிறர் மாட்டும் உளதாகிய துயரம்**[63] என்று இளம்பூரணரும் **முயற்சி**[64] என்று பேராசிரியரும் **இடுக்கண் அஃதாவது அல்லல்**[65] என்று சோமசுந்தர பாரதியாரும் விளக்கம் தருகின்றனர். வருத்தம் என்னும் மெய்ப்பாடானது 60 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| **வருத்தம் மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | கலித்.3:12-13, 5:12-13, 6:1-2, 6:5-6, 6:10-11, 7:1-2, 8:6-7, 9:1-2, 10:1-4, 10:12-13, 11:12-15, 12:9-13, 13:18-20, 6:5-6, 16:15-16, 17:5-6, 19:5-6, 20:5-10, 28:11-12, 29:23-26, 31:22-23, 36:19-20 |
| **குறிஞ்சி** | கலித்.38:5-6, 45:15-16, 46:15-16, 47:12-13, 48:8-9, 49:1-4 |
| **மருதம்** | கலித்.68:21-22, 70:15-16, 71:23-24, 78:7-8, 82:26-27, 83:27-28, 87:7-8, 89:8-9 |
| **முல்லை** | கலித்.101:47-48, 102:26-27, 107:28-29, 109:21-22, 110:15-16, 114:17-18, 118:13-14 |
| **நெய்தல்** | கலித்.121:16-17, 121:21-22, 122:5-6, 123:18-19, 125:17-18, 126:8-9, 126:12-13, 126:19-20, 127:8-9, 127:12-13, 128:16-17, 129:23-24, 129:23-24, 130:6-7, 148:5-6, 149:6-7, 149:15-16 |
| **மொத்தம்** | **60** |

பாலைக்கலித் தலைவி தன்னைப் பிரிந்து செல்லத் திட்டமிடும் தலைவனிடம் அவன் செல்லக்கூடிய வழி மிகவும் கடுமையானது. எனவே தானும் அவனுடன் வருவேன் என்று கூறுவதை,

**துன்பம் துணையாக நாடின், அதுவல்லது**

**இன்பமும் உண்டோ, எமக்கு" (கலித்.6:10-11)**

என்னும் அடிகள் விளக்கும். தலைவனோடு இருக்கும் போது எந்தவிதமான துன்பம் வந்தாலும் அது எனக்கு இன்பத்தையே தரும் என்றும் தலைவனைப் பிரிந்து இருக்கும் போது ஏற்படுகின்ற இன்பம் அனைத்துமே துன்பத்தையே தரும் எனவே கடுமையான காட்டு வழியாக இருந்தாலும் நானும் உடன்வருவேன் என்கிறாள் தலைவி.

பொருட்களின் மீது தீராத பற்றுக் கொண்ட தலைவன் நம்முடைய நலம் முழுதும் தொலைத்தவராக என்னைத் தனிமையில் வாட விட்டுப் பிரிந்து சென்றுவிட்டார். அவரையே தஞ்சம் என்று சரணடைந்த தலைவி வருத்தமடைதலை,

**"தொல் நலம் தொலைபு, ஈங்கு யாம் துயர் உழப்பத் துறந்து உள்ளார்"**

**(கலித்.16:5)**

**"அளி என உடையேன்; யான் அவலம் கொண்டு அழிவலோ" (கலித்.20:10)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

தலைவனைக் காண கடவுள்களை எல்லாம் வேண்டிக் கிடந்தாள் தலைவி. ஆனால் அவனோ வரவில்லை. கடத்தற்கரிய வழியைக் கடந்து வந்தும் இன்பம் பெறான். எனவே வருத்தம் கொண்டேன். அதை அறிந்த தோழியாகிய நீயும் பலவாறும் வாய்விட்டுக் கதறுகின்றாயே இது முறையாகுமா என்கிறாள். தலைவன் நம்மைப் பிரிந்து செல்ல எத்தனிக்கும் வழி கரடுமுரடானது, கடுமையானது அதை எண்ணி தலைவனுக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்துவிடுமோ என்று வருந்துகின்றாள் மேற்சுட்டியவற்றால் தலைவிக்கு ஏற்படுகின்ற வருத்தமென்னும் மெய்ப்பாடு புலப்படுகிறது.

## மென்மை

இளிவரல் தோன்றுவதற்குரிய நான்காவது நிலைக்களன் மென்மை ஆகும். இதனை **நல்குரவு**[66] என்று இளம்பூரணரும், **வலிகுன்றியிருத்தல்**[67] என்று பேராசிரியரும் **இகழ்ச்சிக்கு ஆளாக்கும் எளிமை அஃதாவது நொய்ம்மை**[68] என்று சோமசுந்தரபாரதியாரும் கூறுகின்றனர். மென்மை என்னும் மெய்ப்பாடானது 40 இடங்களில் இடம்பெற்றுள்ளது.

| **மென்மை மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | கலித்.14:1-2, 26:10-11, 30:8-9 |
| **குறிஞ்சி** | கலித்.39:15-16, 40:8-9, 40:16-17, 40:33-34, 41:12-3, 43:25-26, 48:19-20, 49:24-25, 58:5-6, 62:5-6, 64:12-13, 66:9-10 |
| **மருதம்** | கலித்.70:20-21, 72:3-4, 81:20-21, 83:26-27, 84:4-5, 86:15-16, 86:24-25, 93:5-6, 97:8-19 |
| **முல்லை** | கலித்.102:38-39, 103:1-2, 103:44-45, 110:9-10, 112:9-10, 13:16 |
| **நெய்தல்** | கலித்.133:16-17, 135:5-6, 120:21-22, 127:13-14, 129:6-7, 131:2-3, 147:64-65 |
| **மொத்தம்** | **40** |

முல்லைநிலத் தலைவி பெற்றோர்களின் அச்சுறுத்தலால் தலைவனிடம் பேசுவதைத் தவிர்த்தாள். அதை அறிந்த தலைவன் முதலில் உடன்படுவது போன்ற ஆசை வார்த்தைகளைப் பேசி இப்போது பிரிந்து செல்வது போலப் பேசுகின்றாய் என்கிறான் (கலி.113:16).

தலைவியின் பேச்சானது செவிக்கு வன்மையாக இருப்பதாக தலைவன் இகழ்ந்து கூறுகின்றான். அச்சத்தால் மறுத்துரைத்து தன் அசைவினால் என்னருகே வந்து நித்தமும் தடுமாறும் மெல்லியலான தலைவியே என்று அவளின் நடுக்கத்தையும் மென்மையையும் இளிவாகக் கூறுகின்றான் தலைவன் (கலித்.110:9).

**“மென்தோள் நெகிழ விடல்”          (கலித்.86:16)**

என்ற பாடலடியில் தலைவனைச் சரணடைந்த தலைவியின் தோள்கள் மெலிந்து வாடுகின்றன. அதனை எண்ணி வருந்தியவள் தன் மகனிடம் தன்னைக் கைவிட்டுச் சென்ற தந்தையைப் போல் நீயும் இருக்க வேண்டாம் என அறிவுரை வழங்குகின்றாள். இதன்மூலம் மென்மைத் தன்மை வாய்ந்த தலைவியின் தோள்களில் மீண்டும் மீண்டும் மெலிவை ஏற்படுத்துகின்றான் தலைவன் என்பதை அறியமுடிகின்றது.

### மருட்கை

வியப்பைத் தோற்றுவிக்கும் பொருள்களைக் கண்டவழி மனத்தில் விளையும் சுவையே மருட்கையாகும். புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் என்ற நான்கின் அடிப்படையில் மருட்கை பிறக்கும்.

**“புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு**

**மதிமை சாலா மருட்கை நான்கே”          (தொல்.1201)**

என்பதற்கு, **புதிதாகக் கண்டனவும், கழியப் பேசியனவாயினவும், இறப்பச் சிறியனவும் ஒன்றாய்த் திரிந்தனவுமென நான்கும் பற்றி வியப்புத் தோன்றும்**[69] என்கிறார் பேராசிரியர்.

| மருட்கைக்குரிய நிலைக்களன்கள் | எண்ணிக்கை |
|---|---|
| புதுமை | 13 |
| பெருமை | 02 |
| சிறுமை | 04 |
| ஆக்கம் | 04 |
| மொத்தம் | 23 |

### புதுமை

மருட்கை தோன்றுவதற்குரிய நிலைக்களன்களுள் முதலாவது புதுமையாகும். புதுமை என்பதற்கு இளம்பூரணர், **புதுமையாவது யாதொன்றானும் எவ்விடத்தினும் எக்காலத்தினும் தோன்றாததோர் பொருள் தோன்றிய வழி வியத்தல். அது கந்திருவர்**

**அந்தரம் போவது கண்டு வியத்தல்**[70] என்கிறார். **புதிதாகத் தோன்றுவது**[71] என்கிறார் பேராசிரியர்.

எது புதுமை? எது பழைமையாகாதோ அது புதுமை. நேற்றைய புதுமை இன்றைய பழைமை இன்றைய புதுமை நாளைய பழைமை. என்றைக்கும் புதிதாக இருக்கும் ஆற்றல் எதற்கும் கிடையாது. புதுமையின் தோற்றுவாய் கூடப் பழமைதான். பழமையை வைத்துத் தான் புதுமையைப் புதுமையாக அறிந்து கொள்ள முடிகின்றது. அதைக் கொண்டு தான், **முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழம்பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றிதாய்ப் பரம்பொருளைக் கண்டு கருதிப் போற்றுகின்றார் மணிவாசகர்**[72]

கண்ணில் படும் எந்த ஒரு பொருளுக்கும் கவர்ந்திழுக்கும் புதுமைப் பொலிவு உண்டு. ஆனால் அதனால் புதுமைத் தன்மையுடன் நீண்ட நாள் நிலைத்திருப்பது கடினமாகும். எனவே வியப்பு மாறா வண்ணம் தன் வசம் ஈர்க்கும் ஆற்றல் புதுமைக்கு மட்டுமே உண்டு. அத்தகைய ஆற்றல் எதுவெனத் தேடிப் பார்க்கும் அறிவு கடைசியில் தன்னையே கண்டு வியக்கின்றது. ஒன்றை அறிய முற்படும் போது அதனைப் பற்றிய செய்தியானது ஆழ்ந்து போகப் போக புதியதாகப் பலவற்றை கற்க வழிவகை செய்கின்றது. இதுவே வியப்பு தோன்ற காரணமாகின்றது. புதுமை என்னும் மெய்ப்பாடானது 14 இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

| **புதுமை மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | கலித்.17:15-16, 26:9-10, 29:3-4, 31:5-6, 35:17-18, 28:4 |
| **குறிஞ்சி** | கலித்.52:24-25, 68:4-5 |
| **மருதம்** | கலித்.69:1-2, 72:5-6, 74:1-2, 83:21-22, 98:25-26 |
| **முல்லை** | - |
| **நெய்தல்** | கலித்.150:17-18 |
| **மொத்தம்** | **14** |

மலர்கள் மலர்ந்தால் வண்டுகளுக்கு ஆனந்தம் தான். வண்டுகள் வந்து தன் புதுமையை அனுபவிக்கும் படியாகப் பூந்தாதுகளோடு விளங்கும் குளிர்ந்த மலரின் முகைக்கு வாய்த்த மலர்ச்சி போன்று மலர்ந்திருந்ததை,

**“தகைவண்டு புதிது உண்ணத் தாது அவிழ் தண் போதின்” (கலித்.17:15)**

என்ற பாடலடி மெய்ப்பிக்கின்றது. மேலும் பல வரிகளையுடைய வண்டினங்கள் புதிய மலர்களில் உள்ள பூந்தாதுகளை உண்டு களிக்கும் இளவேனில் பருவம் என்பதை

**“பல்வரி இனவண்டு புதிது உண்ணும் பருவத்து” (கலித்.26:9)**

என்றும் பெண் ஒருவள் தான் கருவுற்ற போது அடைந்த துன்பம் குழந்தை பிறந்தவுடன் ஏற்படும் மகிழ்ச்சியில் அவள் பட்ட துன்பம் அனைத்தும் போய்விடும். அது போல் பல விளைபொருள்களைத் தந்து உதவும் நிலமானது. புது நலத்துடன் அழகாகக் காட்சியளித்தது என்பதில் புதுமை என்னும் நிலைக்களனைக் கொண்ட மருட்கை என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுளது. (கலித்.28:4) குறிஞ்சிக்கலியில் தலைவனிடம், தோழி வேங்கை மலர்கள் மலர்கின்ற விடியற்காலத்திலேயே வந்து தலைவியின் தந்தையிடம் பெண் கேட்டு விரைவில் மணந்து கொள் எனக் கூறும் போது புதியவனைப் போல நீ வந்து தலைவி வீட்டில் பெண் கேட்கும் இக்காட்சியை நான் காண வேண்டும் என்று கூறுகின்றாள். (கலித்.52:24) மேலும்

**“சீர்த்தக வந்த புதுப்புனல் நின்னைக் கொண்டு” (கலித்.98:25)**

என்பதில் தப்பாத வாள் வீரர்களையும், வீரக்கழல் முழங்கும் காலினையும் உடைய தென்னவனது வையைப் புதுப்புனல் ஆடச் சென்றிருந்ததைத் தெய்வத்தின் மீது ஆணையிட்டாவது தெளிவிப்பேன் என்கிறான் தலைவன். புதுப்புனலில் பரத்தையரோடு சென்று நீராடியப் பின்பு தலைவியிடம் இல்லை எனத் தெய்வத்தின் மீது பொய்ச்சூள்

செய்கின்றான் தலைவன். இவ்விடத்தில் புதுமையான நீர் என்பதில் புதுமை என்னும் மெய்ப்பாடு காணப்படுகிறது.

## பெருமை

மருட்கை தோன்றுவதற்குரிய நிலைக்களன்களுள் இரண்டாவது பெருமையாகும். பெருமை பற்றி இளம்பூரணர், **பண்டு கண்ட பொருள்கள் போலாத பொருள்கள் அவ்அளவிற் பெருத்தன கண்டு வியத்தல். அவை மலையும் யானையும் செல்வமும் முன்பு கண்ட அளவின் மிக்கன கண்ட அளவின் மிக்கன கண்ட வழி வியப்பு வரும்**[73] என்கிறார். பெருமை என்னும் மெய்ப்பாடானது 2 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| பெருமை மெய்ப்பாடு | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை (00)** | - |
| **குறிஞ்சி (00)** | - |
| **மருதம் (00)** | - |
| **முல்லை (00)** | - |
| **நெய்தல் (02)** | கலித்.127:4-5, 137:1-2 |
| **மொத்தம்** | **02** |

தலைவன் மீது கொண்ட ஆசையானது மிகப் பெரியது என்பதை,

**"அரிதே, தோழி! நாண் நிறுப்பாம் என்று உணர்தல்;**

**பெரிதே காமம்; என் உயிர் தவச் சிறிதே" (கலித்.137:1-2)**

என்பதில் தலைவி, தலைவன் மீது கொண்ட காதலோ பெரியது. ஆனால் தலைவியின் உயிரோ சிறியது என்கிறாள். பெருமைப் பொருள் சிறுதொழில் செய்தல் என்பது அரிய செயல்களை நிகழ்த்துதற்குரிய பெருமையுடையவர் சிறியோர் செய்தற்குரிய எளிய செயலைச் செய்தல். அறிவு தரும் ஆற்றல் முதலியவற்றால் பெருமை வாய்ந்த தலைவன் தன் தலைமைக்கு மாறாகத் தன்னை இரந்து

பின்னிற்றலாகிய எளிய செயலைச் செய்தான் எனத் தோழி கூறுவதில் (கலித்.127:4-5) பெருமை என்னும் மெய்ப்பாடு இடம்பெறுகிறது.

## சிறுமை

மருட்கை தோன்றுவதற்குரிய மூன்றாவது நிலைக்களன் சிறுமையாகும். **சிறுமை என்பது கடுகின்கண் பல துளை போலும் மிகவும் நுண்ணியன கண்டு வியத்தல்**[74] என்று இளம்பூரணரும் **இறப்பச் சிறியன கண்டு வியத்தல்**[75] என்று பேராசிரியரும் விளக்கம் தருவர். சிறுமை என்னும் மெய்ப்பாடானது 4 இடங்களில் பயின்று வருகின்றது.

| **சிறுமை மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | - |
| **குறிஞ்சி** | கலித்.65:16-17 |
| **மருதம்** | - |
| **முல்லை** | - |
| **நெய்தல்** | கலித்.137:1-2, 144:17-18, 123:1-2 |
| **மொத்தம்** | **04** |

தலைவனை எண்ணி வருந்தித் தவிக்கும் தலைவியின் உடலில் உள்ள உயிரோ மிகச் சிறியது என்பதில் தன்கண் தோன்றிய சிறுமை பற்றிய வியப்பானது (கலித்.137:2) இடம்பெற்றுள்ளது.

தலைமக்களின் களவு வாழ்வின் ஊடே தலைவியின் இடையினைக் கண்டு அது மிகவும் நுண்ணியதாயுள்ளது என்று கருதுகின்றான். இது பிறர்கண் தோன்றிய சிறுமை பற்றிய வியப்பாகும். மேலும் ஒருநாள் தலைவியைத் தனிமையில் கண்ட வயோதிகன் ஒருவன் சிறுபிள்ளையான நீ என் கையில் வந்து அகப்பட்டுக் கொண்டாய் என்று கூறுவதை,

**“வாய்வாளேன் நிற்ப - கடிது அகன்று கைமாறி,**

**கைப்படுக்கப் பட்டாய் சிறுமி! நீ”(கலித்.65:15-16)**

என்றும் நெய்தல் நிலத்தில் தலைவன் பிரிந்து சென்ற நிலையில் தலைவியானவள் முயலிடம் தலைவனைப் பற்றி வினவும் போது திங்களிலுள்ள குறுமுயலே நீ உலகெல்லாம் பார்த்து வருகின்றாயே என் தலைவன் எங்குள்ளான் என்பதைக் கூறுவாயாக (கலித்.144:18) என்று வினவுகின்றாள். இதில் திங்களுள் உள்ள களங்கத்தை சிறுமுயல் என்று எண்ணி அதனிடம் தலைவி பேசுவதாக உள்ளது. கலித்தொகையில் சிறுமை என்னும் மெய்ப்பாடு அளவில் சிறியது என்ற பொருண்மையிலேயே இடம்பெற்றுள்ளது.

## ஆக்கம்

மருட்கை தோன்றுதற்குரிய நான்காவது நிலைக்களன் ஆக்கமாகும். ஆக்கம் என்பது ஒன்றன் வளர்ச்சி கண்டு வியத்தலாகும். இதனை இளம்பூரணர், **நன்னிலம் சார்பாகத் தோன்றும் மரம் முதலாயினதம் அளவின் மீறி வளர்ந்த வழி வியத்தலும் யாதொன்றும் இல்லாத வறியவன் செல்வனாய வழி அதற்குக் காரணம் உணராதான் வியத்தலும், இளையான் வீரம் கண்டு வியத்தலும் பிறவும் உலகியலில் வியக்கத் தகுவன கண்டு வியத்தலும் போல்வன**[76] என்பர். ஆக்கம் என்னும் மெய்ப்பாடானது 4 இடங்களில் (அட்டவணை-24) பதிவு செய்யப்பட்டுள்ளது.

| ஆக்கம் மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.7:7-8, 34:18-19 |
| குறிஞ்சி | கலித்.38:16-17, 38:20-21 |
| மருதம் | - |
| முல்லை | - |
| நெய்தல் | - |
| மொத்தம் | 04 |

தலைவன் பிரிந்து சென்ற நிலையில் தலைவியின் முகமானது முழுநிலவை மேகம் மறைத்தாற் போல பசலை பாய்ந்துவிட்டது (கலித்.7:8) என்றும் மேலும் உறவினரையெல்லாம் கெடுத்து வாழ்பவனின் சொத்துப் போலப் பொலிவு கெட்டு வளையல்கள் கழன்று வீழும் நிலையிலே அவள் தோள்களும் மெலிந்தன என்பதை,

**“கிளை அழிய வாழ்பவன் ஆக்கம் போல் புல்லென்று” (கலித்.34:18)**

என்ற அடிகள் விளக்குகின்றன. இதில் தலைவனைப் பிரிந்த தலைவியின் மேனி முழுவதும் பசலையாலும் உடலானது மெலிந்து வாடிய நிலையிலும் தோற்றம் மாறியதே ஆக்கம் என்னும் மெய்ப்பாடாகும்.

### அச்சம்

அனைவருக்கும் தோன்றக்கூடிய ஒரு மெய்ப்பாடு அச்சம் ஆகும்.

**“அணங்கே விலங்கே கள்வர் தம்இறை எனப்**

**பிணங்கல் சாலா அச்சம் நான்கே” (தொல்.1202)**

என்கின்றது தொல்காப்பிய நூற்பா. **அச்சம்மென்பது பயம்**[77] என்கிறார் பேராசிரியர்.

**என்னைப் பார்த்தால் அச்சமாக உள்ளது என்ற கூற்றில் உடலையும் உயிரையும் வேறாகக் கருதி, உடலைக் கண்டு அவ்வுடலகத்துள்ள உயிர் அஞ்சுவதாகக் கோடல் வேண்டும் இந்நான்குக் குறிப்பேயன்றிப் புலவி முதலியன பொருளாகவும் அச்சம் பிறக்கும்**[78] என்பர் வே.தி.கோபாலையர்.

| அச்சத்திற்குரிய நிலைக்களன்கள் | எண்ணிக்கை |
|---|---|
| அணங்கு | 17 |
| விலங்கு | 43 |
| கள்வர் | 08 |
| தம்இறை | 42 |
| அச்சம் | 44 |
| மொத்தம் | 154 |

**அணங்கு**

அச்சம் தோன்றுவதற்குரிய நிலைக்களன்களுள் முதலாவது அணங்காகும். அணங்கு என்னும் மெய்ப்பாடானது 17 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| அணங்கு மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.12:2-3, 24:1-2 |
| குறிஞ்சி | கலித்.49:16-17, 52:9-10, 58:15-16, 65:16-17, 56:22-23 |
| மருதம் | கலித்.71:20-21, 77:14-15, 88:20-21, 89:8-9, 94:38-39 |
| முல்லை | கலித்.105:15-16, 105:20-21, 109:21-26 |
| நெய்தல் | கலித்.132:22-23, 144:9-10, 148:14-16 |
| மொத்தம் | **17** |

அணங்கு என்பதற்கு, **பேயும், பூதமும் பாம்பும் ஈறாகிய பதினெண் கணனும் நிரயபாலரும் பிறரும் அணங்குதற் றொழிலராகிய சவந்தின் பெண்டிர் முதலாயினாரும் உருமிசைத் தொடக்கத்தனவு மெனப்படும்**[79] எனப் பேராசிரியரும் **காட்சி அளவில் காரணம் கூற முடியாத இடத்துக் காரணத்தைக் கடவுள் மேல் ஏற்றிக் கூறுவது உலகியல். அம்முறையில் மலையில் உறையும் தெய்வங்கள் தீண்டி வருத்தும் என்ற நம்பிக்கையால் அணங்கு பொருளில் அச்சம் பிறக்கும்.**[80] எனச் சோமசுந்தர பாரதியாரும் விளக்கம் தருகின்றனர்.

இரவுக்குறிக்கண் தலைவியைச் சந்திக்க வரும் தலைவன் மணம் கமழும் மார்புடன் மேகந் தவழும் மலையடுக்குகளின் இடை வழியாக அணங்குகள் சுற்றித்திரியும் பயங்கரமான பாதையைக் கடந்து வருவதை நினைத்தால் தான் அச்சம் ஏற்படுகின்றது எனத் தலைவி கூறுவதை,

**“மணம் கமழ் மார்பினை, மஞ்சுஇவர் அடுக்கம் போழ்ந்து**

**அணங்குடை ஆர் இடை, ஈங்கு நீ வருவதை” (கலித்.49:16-17)**

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். இதில் தலைவன் தலைவியைக் காண வரும் போது இடையில் ஏற்படுகின்ற பல்வேறு துன்பங்களை எண்ணி அச்சப்படுகிறாள். இது பிறர் மாட்டு தான் கொள்ளும் அச்சம் என்னும் மெய்ப்பாடாகும். தன்னைத் தலைவன் பிரியப் போகின்றான் என்பதை அறிந்துகொண்ட நிலையில் தலைவி தன் நெஞ்சம் நடுங்கும்படி, பல நாட்களாக தலைவனின் மாற்றத்தை அறிந்தேன் தற்போது அச்செய்தியைக் கேட்டேன் அஞ்சினேன். அதனால் என் உயிர் பிரிய நேர்ந்தால் அதுவே தலைவனை அணங்காகி வருத்தும் என்றாள் (கலித்.24:1-2). தலைவியின் அழகு ஊரில் உள்ள அனைவரும் கண்டு அஞ்சும் நிலையில் இருப்பதை,

**‘“யார்க்கும் அணங்காதல் சான்றாள்’ என்று, ஊர்ப்பெண்டிர்**
**‘மாங்காய் நறுங்காடி கூட்டுவோம்; யாங்கும்**
**எழுநின் கிளையொடு போக’ என்று தத்தம்**
**கொழுநரைப் போகாமல் காத்து முழுநாளும்,**
**வாயில் அடைப்ப வரும்”  (கலித்.109:21-26)**

என்ற பாடலடிகளின் வாயிலாக அறிய முடிகின்றது. மேலும் தலைவனைப் பிரிந்து வாடும் தலைவியை மாலை நேரமானது அணங்கு போல வந்து வருத்துவதை,

**“நலம்கொண்டு நல்காதார் நனி நீத்த புலம்பின் கண்**
**அலந்தவர்க்கு அணங்கு ஆதல் தக்கதோ, நினக்கு?” (கலித்.148:14-15)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. அணங்கென்பது அனைவருக்கும் காலங்காலமாக அச்சத்தையே தருகின்றது.

## விலங்கு

அச்சம் தோன்றுவதற்குரிய நிலைக்களன்களுன் இரண்டாவதாக அமைவது விலங்கு ஆகும். விலங்கு என்பன, **அரிமா முதலிய அஞ்சத்தக்கன**[81] என்கிறார் பேராசிரியர். பொதுவாய் விலங்குகள் சாதுவானவை. கொடிய விலங்குகளும் உண்டு.

ஆனால் உருவத்தை வைத்து அடையாளம் காண முடியும். அவற்றை அச்சமின்றி எதிர்கொள்ளும் ஆயுத பலமும் அறிவு வளமும் நமக்கு உண்டு.

அதே சமயம், தோற்றத்தைக் கண்டு கண்டுபிடிக்க முடியா வண்ணம் உருவத்தால் மானுடராகவும், அறிவால் விலங்குகளாகவும் உள்ள சிலரின் அச்சம் திடுக்கிடத் தோன்றுவதாகும். கற்றாருக்கும் கல்லாருக்கும் வேறுபாடு தெரியாத நிலையில் கலந்து பழகுகையில் கல்லாதார் தம்மை வெளிப்படுத்திக் கொள்ளும் போது திடுக்கிட வைக்கும் அச்சம் தோன்றும். இவ்விலங்கு என்னும் மெய்ப்பாடானது 43 இடங்களில் பயின்று வந்துள்ளது .

| விலங்கு மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.5:1-2, 4:1-2, 12:4-5, 20:3-4, 23:2-3, 24:10-11, 26:23-24 |
| குறிஞ்சி | கலித்.38:6-7, 40:26-27, 41:1-2, 41:7-8, 42:1-2, 42:6-7, 43:1-2, 43:24-25, 46:5-6, 46:6-7, 48:7-8, 49:1-2, 49:21-22, 52:1-2, 52:18-19, 53:3-4, 56:32-33, 64:4-5, 65:24-25, 65:25-26, 66:3-4, 62:13 |
| மருதம் | கலித்.84:6-7, 86:1-2, 86:10-11, 97:30-31 |
| முல்லை | கலித்.103:56-57, 104:44-45, 106:27-28, 116:6-7 |
| நெய்தல் | கலித்.134:3-4, 140:17-18, 140:22-23, 147:5-6, 149:1-2,131:6-7 |
| மொத்தம் | **43** |

மதம் பிடித்த கொல்லும் தன்மை கொண்ட யானையை நீர்த்துறைக்கு அனுப்புவதற்கு முன் அரசன் பறையறைந்து ஊரார்க்கு அறிவுறுத்த வேண்டும். (கலித்.56:32) என்பதில் மதங்கொண்ட யானையை அழகு மிகுந்த தலைவிக்கு உவமிக்கின்றனர். ஐந்து தலை நாகத்தின் இடைப்பட்டு வருந்துதலில்லாத மாசற்ற முழுமதி போன்ற முகத்தை உடைய காதலியரை திருடிச் செல்வது அறம் என்பதில்

**“ஐ வாய் அரவின் இடைப்பட்டு, நைவாரா?”  (கலித்.62:13)**

என்னும் பாடலடியில் கொடிய அச்சந்தரும் விலங்காகிய ஐந்து தலை நாகம் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. கெடாத வலியும் வளைந்த கோடுகளும் கடுமையான கண்களும் உடைய பெரிய புலியைப் பிடிக்க நினைத்து விரித்த வலையில் ஓர் குள்ள நரி மாட்டிக் கொண்டது(கலித்.65:24) என்றும் ஏறுதழுவுதல் நிகழ்ச்சியின் போது கொடிய புலிக்கூட்டமும் பெருங்களிற்றினமும் மாறி மாறித் தம்முள் புரண்டு புரண்டு போரிட்டதைப் போல ஏறுகளும் பொதுவர்களும் போரிட்டதை,

**'இரும்புலித் தொழுதியும் பெருங்களிற்றினமும்**

**மாறுமாறு உழக்கியாங்கு உழக்கி, பொதுவரும்'' (கலித்.103:56-57)**

என்னும் பாடலடியின் வாயிலாக விலங்கு என்னும் நிலைக்களன்களை உடைய அச்ச மெய்ப்பாடு தோன்றுகின்றது. தன் இனமான மீன்களுள் தன்னை எதிர்த்த அனைத்தையும் மாறுபாடு கெடத் தாக்கி வென்ற சினத்தை உடையது சுறாமீன் என்பதை,

**''இன மீன் இகல்மாற வென்ற சினமீன்**

**எறிசுறா'' (கலித்.131:6-7)**

என்னும் பாடலடிகள் சுறாமீனின் மீது பிற உயிர்கள் கொண்ட அச்சத்தைப் பதிவு செய்துள்ளனர். இன்றும் சில விலங்குகளைக் கண்டால் அஞ்சுதல் என்பது மக்கள் அனைவருக்கும் உரிய பொது மெய்ப்பாடாக உள்ளது.

## கள்வர்

அச்சம் என்னும் மெய்ப்பாடு தோன்றுவதற்குரிய மூன்றாவது நிலைக்களன் கள்வர் ஆகும். கள்வர் என்பவர் **தீத்தொழில் புரிவோர் அலைத்துப் பொருள் வெளவுவார்**[82] என்பர் பேராசிரியர். கள்வர் தம் செயல்பாடு அச்சத்தைத் தருவதாகும். இம்மெய்ப்பாடானது 8 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| கள்வர் மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | - |
| குறிஞ்சி | கலித்.51:14-16, 61:25-26 |
| மருதம் | கலித்.81:23-24, 87:1-2 |
| முல்லை | கலித்.108:49-50 |
| நெய்தல் | கலித்.125:11-12, 144:29-30, 145:36-37 |
| மொத்தம் | **08** |

தலைவன் பொருள் ஈட்டச் செல்லும் வழியில் ஆறலைக் கள்வர்கள் இடையே மறித்து பொருளைப் பறித்துச் செல்வர். பொருள் இல்லையெனில் அவர்களைக் கொலை செய்யவும் அஞ்ச மாட்டார்கள் என்பதைப் பாலைக்கலிப் பாடல்கள் உரைக்கின்றன. தலைவன் தலைவியை நோக்கும் பொழுது கள்ளத்தனமாக இடையிடையே பார்ப்பதும் சிரிப்பதுமாக உள்ளான். அவன் தான் விரும்பிய பொருளைக் கொண்டாலல்லது போகாத பிடிவாத குணம் உடையவன் போலவும் இருக்கின்றான். அதனை,

**“என்னைக் கடைக்கண்ணால் கொல்வான் போல் நோக்கி, நகைக் கூட்டம்**
**செய்தான், அக்கள்வன் மகன்” (கலித்.51:14-16)**

**“இடைஇடைக் கள்வர் போல் நோக்கினும் நோக்கம் குறித்தது” (கலித்.61:25)**

என்னும் அடிகள் விளக்கும்.

கோட்டைக் காவல்காரர்கள் கள்வரைக் காணாத சூழலில் இல்லை எனக் கூறினால் தனக்கு நேரும் இன்னல்களை நினைத்துக் கண்டோம் என்பார்கள் அதுபோலத் தொலைவிலே நின்று கொண்டு நான் செய்யாதனவற்றை எல்லாம் செய்தேன் என்று கூறிச் சினந்து கொள்கிறாய் (கலித்.81:26) என்பதில் தலைவன் செய்யாததைச் செய்தாய் எனக் கூறிச் சினந்து கொள்ளும் தலைவியைப் பற்றிக் கூறும் போது கள்வர்கள் கோட்டைக் காவலர்களைக் கொண்டு உவமை கூறியுள்ளனர்.

## தம்இறை

தம்இறை என்னும் நிலைக்களன் குறித்து **இறையெனப்படுவார் தந்தையும், ஆசிரியரும் அரசரும்** என்றும் **அரசன் தம்மை நிமிர்ந்து பார்க்கும் பார்வைக்கு அஞ்சி குறுநில மன்னர்கள் அவனுடைய திருவடிகளையே நோக்கி இருக்கின்றனர் என்பது தம்இறை பொருளாகிய அச்சம்**[83] என்பர் பேராசிரியர். தம்இறை என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 40 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| **தம்இறை மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | கலித்.8:21-22, 13:1-2, 15:2-3, 17:20-21, 21:10-11, 34:13-14, 35:23-24, 36:1-2 |
| **குறிஞ்சி** | கலித்.38:1-2, 38:3-4, 39:27-28, 40:11-12, 43:10-11 |
| **மருதம்** | கலித்.68:4-5, 70:5-6, 75:8-9, 78:9-10, 93:25-26, 98:30-31, 100:7-8 |
| **முல்லை** | கலித்.103:45-46, 103:78-79, 104:3-7, 104:79-80, 105:48-49, 105:73-74, 106:49-50, 108:1-2, 108:55-56, 108:59-60, 115:8-9, 116:11-12 |
| **நெய்தல்** | கலித்.130:19-20, 131:1-2, 132:4-5, 132:20-21, 143:43-44, 143:59-60, 149:14-15, 141:24-25 |
| **மொத்தம்** | **40** |

தவறு செய்தவர்களுக்கு தாம் செய்யும் தவறுகள் குறித்து அரசன் அறிந்தால் தம்மைத் தண்டிப்பான் என்ற எண்ணம் எழும் போது அவர்களுக்கு அச்சம் ஏற்படும். பொய், கொலை, களவு, கள், காமம் போன்றவற்றைச் செய்பவர்களுக்கு அரசன் என்றால் பயம் ஏற்படுவதால் அரசன் அஞ்சப்படும் பொருள் ஆயினான்.

கலித்தொகையில் ஆயர்கள் குரவைக் கூத்து நிகழ்த்தும் போது தம் அரசனான பாண்டிய மன்னனை வாழ்த்துகின்றனர். அப்போது மன்னனைக் கண்டு பிறநாட்டு

மன்னர்களும் படை வீரர்களும் கண்டு அஞ்சினர் என்று கூறும் போது அச்சம் என்னும் மெய்ப்பாடு சுட்டப்பெற்றுள்ளது (கலித்.104:7; 103:79; 143:59; 149:13)

பாண்டிய மன்னனிடம் போர் செய்வதற்கு அஞ்சிப் பகைவர்கள் திறைப் பொருளைக் கொண்டு வந்து கொடுத்ததை,

**"பொருந்தாதார் போர் வல் வழுதிக்கு அருந்திறை**

**போல கொடுத்தார்" (கலித்.141:24-25)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். இதில் பாண்டிய மன்னன் மீது மற்றவர்களுக்கு உள்ள அச்சம் என்னும் மெய்ப்பாடு வெளிப்பட்டுள்ளது. பாண்டியனின் முரசொலியானது அச்சத்தை தோன்றுவிக்கும் இடியோசையை ஒத்திருந்ததை,

**"ஒல்கா, உரும் உறழ் முரசின் தென்னற்கு" (கலித்.104:79)**

என்னும் பாடலடி விளக்கும். தன்புகழ் எத்திசையிலும் சென்று ஒலிக்குமாறு செய்தவர்களுக்கு எல்லையற்ற துன்பத்தைத் தந்து அவர்களை நடுங்க வைக்கும் மொழிகளைக் கூறும் இயல்புடைய கொடுங்கோல் அரசனை,

**"உரைசெல உயர்ந்து ஓங்கி, சேர்ந்தாரை ஒரு நிலையே**

**வரைநில்லா விழுமம் உறீஇ, நடுக்கு உரைத்து" (கலித்.146:1-2)**

என்னும் பாடலடிகள் விளக்கும். பாண்டிய மன்னனின் வீரம் பிறருக்கு அச்சத்தைத் தோற்றுவிக்கின்றது.

**அச்சம்**

கலித்தொகையில் அச்சம் என்னும் மெய்ப்பாடு 50 இடங்களில் காணப்பெறுகின்றது.

| அச்சம் மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.10:6-7, 10:15-16, 12:8-9, 12:18-19, 13:17-18, 21:7-8, 26:11-12 |
| குறிஞ்சி | கலித்.38:10-11, 39:1-2, 41:5-6, 42:26-27, 48:22-23, 49:11-12, 50:6-7, 53:16-17, 53:18-19, 56:8-9, 56:9-10, 57:3-4, 62:12-13, 65:20-21, 65:22-23 |
| மருதம் | கலித்.75:20-21, 84:36-37, 88:18-19, 96:29-30, 98:21-22 |
| முல்லை | கலித்.101:10-11, 103:64-65, 103:68-69, 104:20-21, 105:45-46, 107:26-27, 110:8-9, 113:27-28, 155:6-7 |
| நெய்தல் | கலித்.120:2-3, 132:9-10, 134:9-10, 136:18-19, 141:17-18, 143:40-41, 144:22-23 |
| **மொத்தம்** | **50** |

தலைவன் செய்யாத ஒன்றைச் செய்ததாகக் கருதி தலைவி கொண்ட புலவி காரணமாகத் தலைவனுக்கு அச்சம் என்னும் மெய்ப்பாடானது தோன்றுகிறது.

**"அச்சு ஆறாக உணரிய வருபவன்**

**பொய்ச்சூள் அஞ்சிப் புலவேன் ஆகுவல்" (கலித்.75:20-21)**

என்ற பாடலடிகள் தலைவன் செய்த பொய்ச்சூளின் காரணமாகத் தலைவிக்கு அச்சம் பிறந்துள்ளதைப் புலப்படுத்துகின்றது.

## பெருமிதம்

பெருமிதம் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 69 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| பெருமிதம் நிலைக்களன்கள் | எண்ணிக்கை |
|---|---|
| கல்வி | 09 |
| தறுகண் | 26 |
| இசை | 25 |
| கொடை | 09 |
| மொத்தம் | 69 |

பெருமிதம் மெய்ப்பாடு குறித்துத் தொல்காப்பியர்,

**"கல்வி தறுகண் இசைமை கொடை எனச்**

**சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே" (தொல்.1203)**

என்கிறார். இம்மெய்ப்பாடு குறித்து **இச்சூத்திரத்துள் வீரத்தினைப் பெருமிதம் என்றெண்ணினான் என்னை? எல்லாரோடும் ஒப்ப நில்லாது பேரெல்லையாக நிற்றல் பெருமிதமெனப்படும் என்றற்கென்பது. கல்வி என்பது தவமுதலாகிய விச்சை. தறுகணென்பது அஞ்சத்தக்கன கண்ட இடத்து அஞ்சாமை. இசைமை என்பது இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் பழியொடு வருவன செய்யாமை. கொடை என்பது உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப் பொருளும் கொடுத்தல்**[84] என்று விளக்கம் தருவர் பேராசிரியர்.

பெருமிதம் **வெறுப்புக்குரிய செருக்கன்று 'வீறு' தருக்கு ஆகும். ஆகவே இது புகழுக்குரிய பெருமையில் பிறக்கும் மகிழ்வாம்**[85] என்று சோமசுந்தர பாரதியார் கூறுகின்றார்.

## கல்வி

பெருமிதம் என்னும் மெய்ப்பாடு தோன்றுதற்குரிய நிலைக்களன்களுள் முதலாவது கல்வியாகும். **கல்வி என்பது தவ முதலாகிய விச்சை**[86] என்பர் பேராசிரியர். கல்வி என்பது நூல் முதலிய பயிறல் ஆகும். இம்மெய்ப்பாடானது 9 இடங்களில் பயின்று வந்துள்ளது.

| கல்வி மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.9:2-3, 36:23-26 |
| குறிஞ்சி | கலித்.40:15-16, 47:3-4 |
| மருதம் | கலித்.68:4-5, 69:1-6, 72:18-19 |
| முல்லை | --- |
| நெய்தல் | கலித்.126:4-5, 141:9-10 |
| மொத்தம் | 09 |

வேதம் பயின்ற அந்தணர்கள் வேள்வி செய்யும் பொழுது வேதம் ஓதுவதை,

**“வாள் இடைப் படுத்த வயங்கு ஈர் ஓதி!”(கலித்.36:23)**

**“கேள்வி அந்தணர் கடவும்**

**வேள்வி ஆவியின் உயிர்க்கும் என் நெஞ்சே” (கலித்.36:25-26)**

**“மாதர் கொள் மான்நோக்கின் மடந்தைதன் துணையாக**

**ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான் போல்” (கலித்.69:4-5)**

**“முக்கோல் கொள் அந்தணர் முதுமொழி நினைவார் போல்” (கலித்.126:4)**

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதில் அந்தணர் தம் கல்வித்திறம் சுட்டப்பெறுகிறது.

தலைவன் வல்லவர்களைப் பின்பற்றிச் சிறந்த அறிவுத் திறங்களை அறிந்தவன் போலச் செருக்குடன் தோன்றுகின்றான் (கலித்.47:3). மன்னருக்கு அவ்வப்போது நுண்மையான அறிவுத் திட்டங்களைக் கூறும் சிறந்த அமைச்சர்களைப் போலப் புலவர்களும் நுண்ணறிவுடன் விளங்கியதை,

**“முது மொழி நீரா, புலன்நா உழவர்” (கலித்.68:4)**

என்ற பாடலடி புலப்படுத்துகின்றது. மேலும் தெளிந்த பேச்சுக்களிலே வல்லவர் சபையிலே சொல்லவல்ல ஒருவனாக இருந்தவன் நான். என்னைச் சாதாரண பிற

மனிதர் முன்னிலையில் அறியாமை உடையவனாக மாற்றிவிட்டாள் தலைவி என்று கூறுகிறான். இதனை,

**“வல்லார் முன் சொல்வல்லேன் என்னைப் பிறர் முன்னர்க்**

**கல்லாமை காட்டியவள்” (கலித்.141:19-20)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். தலைவன் அறிவுத் திறமையுடன் இருந்தான் என்பதில் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது.

## தறுகண்

பெருமிதம் என்னும் மெய்ப்பாடு தோன்றுதற்குரிய நிலைக்களன்களுள் இரண்டாவது தறுகண் ஆகும். **தறுகண் என்பது அஞ்சத்தக்கன கண்ட இடத்து அஞ்சாமை**[87] என்பர் பேராசிரியர். இம்மெய்ப்பாடு 26 இடங்களில் பயின்றுள்ளது.

| தறுகண் மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| **பாலை** | கலித்.8:6-7, 17:5-6, 32:14-15, 11:2 |
| **குறிஞ்சி** | கலித்.64:25-26 |
| **மருதம்** | கலித்.86:13-14 |
| **முல்லை** | கலித்.101:8-9, 101:13-14, 101:16-17, 103:27-55, 104:73-74, 106:9-10, 106:38-39, 113:6-7, 115:18-19, 118:1-2, 105:1-2, 104:1-4, 102:25-27, 105:24-25, 105:47-49, 106:16-29 |
| **நெய்தல்** | கலித்.127:4-5, 133:7-8, 143:8-9, 141:9-10 |
| **மொத்தம்** | **26** |

உன் தந்தை மட்டும் உன்னை எனக்கு மணம் செய்து வைக்க இசைவு தந்தார் எனில் பல நாடுகளைக் கைப்பற்றிய அரசனைப் போல வெற்றிப் பெருமிதம் கொள்வேன் எனத் தலைவன் உரைப்பதை,

**“ஈங்கே தலைப்படுவேன்; உண்டான் தலைப்பெயின்**

**வேந்து கொண்டன்ன பல”  (கலித்.64:25-26)**

என்னும் அடிகள் விளக்கும். இதில் ஒன்றைத் துணிந்து முயற்சித்துச் சாதிக்கும் போது கிடைக்கும் உணர்வு சுட்டப்பெறுகிறது. மேலும் வாழ்விற்குப் பெரிய பகையே வறுமை தான். அந்த வறுமை என்னும் பகையை அஞ்சாமல் வெல்லுவதற்குப் பொருளைத் தேடிச் சென்று சேமிக்க வேண்டும் என்றும் (கலித்.11:2) குருதியுடன் கூடிய குடல்களை தனது கொம்பில் சுற்றியிருந்த ஏற்றிடம் அஞ்சாது சென்று அக்குடலைத் தனது வயிற்றிலே இடுபவன், சிவந்த அந்நூற்கழியை ஒருவன் தன் இரண்டு கையிலும் பிடித்துக் கொள்ள அந்நூலை மூன்று வடமாக நூற்கின்றவனைப் போலத் தோன்றுதல் போன்றவை எருதுக்கு அஞ்சாமல் எதிர்த்து நின்ற தலைவனின் வீரத்தைக் குறிக்கின்றது. மடலேறும் தலைவன் தான் போர்க் களத்திலே வலிய யானை மேல் ஏறிப் போர் செய்ய வல்லவன் எனக் கூறுவது தண்கண் தோன்றிய தறுகண் பற்றிய பெருமிதத்திற்குச் சான்றாகும் (கலித்.141:9-10).

## பாண்டிய மன்னனின் வீரம்

மாற்றரசர்கள் அழிந்து வீழும்படி அவர்களைக் கொன்று வெற்றி பெற்று அந்நாட்டுச் செல்வங்களைக் கவர்ந்து வருகின்றவன் பாண்டிய மன்னன். இதனை,

**“அரைசுபடக் கடந்து அட்டு, ஆற்றின் தந்த -**

**முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்கு” (கலித்.105:1-2)**

என்னும் பாடலடிகள் விளக்கும். கடல்கோளால் பாண்டிய நாடு அழிந்த போதும் தன் மனந் தளராமல் நாட்டை விரிவாக்கப் பகைவர்களை நோக்கிப் படையெடுத்துச் சென்றதில் பாண்டிய மன்னனின் வீரம் குறிப்பிடப்படுகிறது (கலித்.104:1-4) சேரர், சோழர்களை வென்று அந்நாட்டில் தனது மீன் கொடியினை நிலை நாட்டியவன் பாண்டியன் என்பதை,

**“மலிதிரை ஊர்ந்து தன் மண் கடல் வௌவலின்,**

**மெலிவு இன்றி, மேல்சென்று, மேவார் நாடு இடம்பட,**

**புலியொடு வில் நீக்கி, புகழ்பொறித்த கிளர்கெண்டை,**

**வலியனான் வணங்கிய, வாடாச்சீர்த் தென்னவன்” (கலித்.104:1-4)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

## ஆயர்களின் வீரம்

கலித்தொகை முல்லைக்கலியில் ஏறுதழுவலின் போது ஆயர்களின் வீரமானது அழகாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆயர்கள் ஏறுகளுக்கு மார்பைக் காட்டி நின்றனர். ஓர் ஆயன் ஏற்றின் கழுத்தை இறுகத் தழுவி ஏற்றை மிகவும் வருத்தினான். இதைக் கண்ட ஏற்றின் உரிமையாளர்கள் கலங்கியதை,

**“மலர்மலிபுகல் எழ, அலர்மலி மணிபுரை நிமிர் தோள் பிணைஇ**

**எருத்தோடு இமிலிடைத் தோன்றினன்; தோன்றி,**

**வருத்தினான் மன்ற அவ்ஏறு” (கலித்.102:25-27)**

என்னும் பாடலடிகள் விளக்கும். ஏறுதழுவும் தொழுவினுள் ஆயர்களும் எருதுகளும் சண்டையிடுவதைத் தோழி, தலைவியிடம் அழகாக எடுத்துக்கூறிக் காட்சிப்படுத்தியதை,

**“கோட்டொடு சுற்றிக் குடர் வலந்த ஏற்றின் முன்,**

**ஆடி நின்று, அக்குடர் வாங்குவான் பீடு காண்-**

**செந்நூற் கழிஒருவன் கைப்பற்ற, அந்நூலை**

**முந்நூலாக் கொள்வானும் போன்ம்.**

**இகுளை! இ∴து ஒன்று கண்டை; இ∴து ஒத்தன்;**

**கோட்டினத்து ஆயர் மகன் அன்றே - மீட்டுஓரான்-**

**போர் புகல் ஏற்றுப் பிணர் எருத்தில் தத்துபு,**

**தார் போல் தழீஇயவன்?**

**இகுளை! இ∴து ஒன்று கண்டை; இ∴து ஒத்தன்;**

**கோவினத்து ஆயர்மகன் அன்றே - ஓவான்-**

**மறை ஏற்றின் மேல் இருந்து ஆடி, துறை அம்பி**

**ஊர்வான் போல் தோன்றுமவன்?**

**தொழீஇஇ! - காற்றுப் போல் வந்த கதழ்விடைக் காரியை**

**ஊற்றுக் களத்தே அடங்கக்கொண்டு, அட்டு, அதன்**

**மேல் தோன்றி நின்ற பொதுவன் தகைகண்டை -**

**ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடந்து இட்டு,**

**சீற்றமோடு ஆர்உயிர் கொண்ட ஞான்று, இன்னன்கொல்**

**கூற்று என: உட்கிற்று, என் நெஞ்சு.**

**இகுளை! இ∴து ஒன்று கண்டை; இ∴து ஒத்தன்,**

**புல்லினத்து ஆயர்மகன் அன்றே - புள்ளி**

**வெறுத்த வய வெள் ஏற்று அம்புடைத்திங்கள்**

**மறுப்போல் பொருந்தியவன்?**

**ஓவா வேகமோடு உருத்துத் தன்மேல் சென்ற**

**சேஎச் செவிமுதற் கொண்டு, பெயர்த்து ஒற்றும்**

**காயாம்பூங் கண்ணிப் பொதுவன் தகை கண்டை -**

**மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை**

**வாய்பகுத்து இட்டு, புடைத்த ஞான்று, இன்னன் கொல்**

**மாயோன் என்று உட்கிற்று, என் நெஞ்சு" (கலித்.103:28-55)**

என்னும் பாடலடிகள் விளக்கும். ஏறுதழுவலில் அஞ்சாது பாய்ந்து ஏற்றினை அடக்கிய பொதுவனுக்கு மகட்கொடை நேர்ந்தனர் ஆயர்கள். தொழுவினுள் பாய்ந்த பொதுவர் எருதுகளின் கொம்பினைப் பிடித்து மார்பிலே பொருந்தும் படி தழுவினர். சிலர், கழுத்திடத்தே அடங்கிக் கிடந்து குட்டேறு முறியும்படி தழுவினர். சிலர் தோளுக்கு நடுவே கழுத்தைப் புகவிட்டு இறுகப் பற்றிக் கிடந்தனர். சிலர் கொம்புகள் தம்மீது குத்துவதைக் கருத்தில் கொள்ளாது ஏற்றினை அடக்கினர். (கலித்.105:24-23)

ஏறுகளும் பொதுவரும் சண்டையிடும் களமானது இருபெரு வேந்தர்கள் தம்முள் மாறுபட்டு எதிர்ப்பட்ட போர்க்களம் போலக் காட்சியளித்ததை,

**“ஏறும் பொதுவரும் மாறுற்று, மாறா**
**இருபெரு வேந்தரும் இகலிக் கண்ணுற்ற**
**பொருகளம் போலும் தொழூஉ” (கலித்.105:47-49)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். எருதுகள் பொதுவர்களைத் தமது கூரிய கொம்பினால் குத்திக் கிழித்தன. உழலை மரத்தைப் போல் அவர்களின் உடல்களைத் துளைத்துப் புண்ணாக்கின ஏறுகள். அதனை கண்டு அஞ்சிப் பின்வாங்காமல் புண்ணில் இருந்து வடியும் இரத்தத்தால் கைவழுக்குகின்ற நிலையில் மணலை அள்ளிக் கைகளில் தேய்த்துக் கொண்ட பொதுவர்கள் மீண்டும் ஏற்றின் மேல் தாவி ஏறி அடக்கியதை,

**“அவ்ஏற்றை**
**பிரிவு கொண்டு, இடைப்போக்கி, இனத்தோடு புனத்து ஏற்றி,**
**இருதிறனா நீக்கும் பொதுவர்-**
**உருகெழு மா நிலம் இயற்றுவான்,**
**விரிதிரை நீக்குவான், வியன்குறிப்பு- ஒத்தனர்.**
**அவரை, கழல உழக்கி, எதிர் சென்று சாடி,**
**அழல்வாய் மருப்பினால் குத்தி, உழலை**
**மரத்தைப் போல் தொட்டன - ஏறு.**
**தொட்டதம், புண்வார் குருதியால் கைபிசைந்து, மெய்திமிரி,**
**தங்கார் - பொதுவர் - கடலுள் பரதவர்**
**அம்பி ஊர்ந்தாங்கு, ஊர்ந்தார், ஏறு.**
**ஏறுதம், கோலம் செய் மருப்பினால் தோண்டிய வரிக்குடர்**
**ஞாலம் கொண்டு எழூஉம் பருந்தின் வாய் வழீஇ,**
**ஆலும் கடம்பும் அணிமார் விலங்கிட்ட**

**மாலை போல், தூங்கும் சினை.” (கலித்.106:16-29)**

என்னும் பாடலடிகள் விளக்கும். கலித்தொகையில் ஏறுதழுவலின் போது வெளிப்பட்ட ஆயர்களின் வீரம் இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

## இசைமை

பெருமிதம் என்னும் மெய்ப்பாட்டிற்குரிய மூன்றாவது நிலைக்களன் இசைமை ஆகும். **இசைமை என்பது இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் பழியொடு வருவன செய்யாமை**[88] என்பர் பேராசிரியர். இசைமை என்பதைக் களனாகக் கொண்டு 25 இடங்களில் பெருமிதம் என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. இன்பமும் பொருளும் மிகுதியாகக் கிட்டுவன ஆயினும் பழியைத் தரும் செயலைச் செய்யாமை. இதில் ஒருவர் ஓரிடத்தில் இருக்கும் போது அவர்களைப் பற்றி ஒருசிலர் புகழ்ந்து பேசி மகிழ்வித்தும், ஆனால் அவர்களின் அவ்விடம் விட்டு அகன்றதும் அவர்களை இகழ்ந்தும் பேசுசுகின்றனர். இதில் முன் சொன்ன புகழ் என்பது இசைமை என்னும் மெய்ப்பாடே ஆகும் (கலித்.25:15). சிறப்புப் பொருந்திய பாண்டிய நாட்டில் பாயும் வைகை ஆற்றைப் புலவர் புகழ்ந்து உரைத்தல் இம்மெய்ப்பாட்டின் கண் அடங்கும். புகழ் என்னும் மெய்ப்பாடானது மனிதர்களுக்கு மட்டுமின்றி இயற்கைக்கும் உரியதாய் இருத்தல் சுட்டத்தக்கது.

| **இசைமை மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | கலித்.25:25-26, 26:16-17, 25:15, 26:12 |
| **குறிஞ்சி** | கலித்.42:5-6, 44:11-12, 48:8-9, 50:16-17, 52:21-22, 54:17-18 |
| **மருதம்** | கலித்.67:2-3, 72:17-18, 74:7-8, 79:4-5, 98:25-26, 100:8-9 |
| **முல்லை** | கலித்.105:50-51, 112:8-9 |
| **நெய்தல்** | கலித்.119:6-7, 131:4-5, 133:3-4, 135:13-14, 142:11-12, 145:1-2, 146:15-16 |
| **மொத்தம்** | **25** |

பகை நாட்டை வெற்றி கொண்ட அரசன் புதிய நாட்டிலே சென்று வாழும் அரசனிடம் திறை செலுத்தி அவன் நிழலிலே வாழ்பவருக்கு எந்த விதமான துன்பமும் நேராது (கலித்.26:12) என்னும் கூற்றில் நாட்டு மன்னனின் புகழானது கூறப்பட்டுள்ளது.

பாணன் எந்நாளும் தலைவனின் புகழைப் பாடுவதை,

**“நின்புகழ் பலபாடும் பாணனும் ஏமுற்றான்” (கலித்.74:7)**

என்னும் பாடலில் தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையரை நாடிச் சென்ற போதும் பாணன் என்றுமே தலைவனின் புகழைப் பாடிய வண்ணமே இருப்பான் என்பதை அறியமுடிகின்றது.

## கொடை

கலித்தொகையில் கொடையை நிலைக்களனாகக் கொண்ட பெருமிதம் என்னும் மெய்ப்பாடு ஒன்பது இடங்களில் பயின்றுளது. “**கொடை என்பது உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப் பொருளும் கொடுத்தல்**[89] என்பர் பேராசிரியர்.

| கொடை மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.11:1-2, 32:-5, 32:10-11 |
| குறிஞ்சி | கலித்.42:21-22, 43:27-28, 47:5-6, 56:16-17 |
| மருதம் | கலித்.100:12-13 |
| முல்லை | கலித்.104:75-76 |
| நெய்தல் | - |
| மொத்தம் | 09 |

தலைவன் இரவலர்களின் வறுமையைப் போக்க வல்லவன் என்பதை

**“இல்லோர் புண்கண் ஈகையின் தணிக்க, வல்லான்” (கலித்.47:6)**

என்றும் களிறு, தேர், குதிரை என ஆகியவற்றைப் புலவர்களுக்குக் கொடுத்துக் கொடுத்துக் கை ஓயாத வள்ளல் அதனால் உன் கைகள் சிவந்து உள்ளன எனப் பாண்டிய மன்னனை மக்கள் புகழ்வதை,

**“தளியின் சிறந்தனை - வந்த புலவர்க்கு**

**அளியொடு கைதூவலை”                (கலித்.50:16-17)**

என்னும் பாடலடிகள் விளக்கும். உலகமெல்லாம் வாழுமாறு கொடை அளிக்கும் தலைவனைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது (கலித்.104:75-76). அரசர்களும், செல்வந்தர்களும் இரந்தோர்களுக்கு பல செல்வங்களை வாரி வழங்கியுள்ளதைக் இம்மெய்ப்பாட்டின் வழி அறிய முடிகின்றது.

## வெகுளி

வாழ்க்கைப் பாதை என்றுமே நேர்கோட்டில் அமைவதில்லை. அது நெளிந்தும், வளைந்தும், எழுந்தும் செல்லும் இயல்பினது. சறுக்கி விழவும் நேரும் என்பதால் அவ்வண்ணம் சறுக்குவோர்க்குத் தக்க ஊன்றுகோலாய் ஒழுக்கமுடையார் வாய்ச் சொற்ளைக் கொடுக்கின்றன இலக்கியங்கள்.

வாழ்வின் போக்கில் முணுக்கென்று முளைக்கும் கோபம் இயல்பானது. சுரணையுள்ள ஒரு மனிதனுக்குக் கோபம் கூட ஒரு வகையில் நல்ல குணம் தான். அதனால் தான் நீச்சல் பழகுவது போல, வண்டி ஓட்டிப் பழகுவது போல, **‘ரௌத்திரம் பழகு’** என்கிறார் சுப்பிரமணிய பாரதியார்.

ஆனால் அக்கோபம் வரம்பு மீறிச் சினம் ஆகிவிடாமல் காப்பது நல்ஒழுக்கம். சினம் வெகுவாக எழும்போது வெகுளி எனப் பெயர் பெற்று விடுகிறது. மனிதன் வெகுண்டெழும் நிலைக்குத் தள்ளப்படும் போது அழிவுக்கு அடிகோலும் போர்கள் நிகழ்கின்றன. அது தம்மையும் அழித்துப் பிறரையும் அழித்துக் கேடு விளைவிக்கும்.

தொல்காப்பியம் வெகுளி என்னும் மெய்ப்பாட்டை ஏழாம் இடத்தில் வைக்கின்றது. இம்மெய்ப்பாட்டின் தோற்றக் காரணங்களை நான்காகப் பகுத்துக் கூறுகின்றார்.

**“உறுப்பறை குடிகோள் அலைகொலை என்ற**

**வெறுப்ப வந்த வெகுளி நான்கே”** (தொல்.1204)

இம்மெய்ப்பாடுகளுக்கு **உறுப்பறை என்பது கைகுறைத்தலுங் கண் குறைத்தலும் முதலாயின ஆகும். குடிகோள் என்பது தாரமுஞ் சுற்றமுங் குடிபிறப்பும் முதலாயினவற்றுக்கட் கேடு சூழ்தல். அலை என்பது கோல் கொண்டு அலைத்தல் முதலாயின. கொலை என்பது அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல். இவை நான்கின் பொருளாக வெகுளி பிறக்கும்**[90] என்று பேராசிரியர் விளக்கம் தருகின்றார்.

| வெகுளி நிலைக்களன்கள் | எண்ணிக்கை |
|---|---|
| உறுப்பறை | 01 |
| குடிகோள் | 04 |
| அலை | 05 |
| கொலை | 05 |
| சினம் | 45 |
| மொத்தம் | 60 |

**உறுப்புகளைக் குறைத்தல் (அறுத்தல்) தம் கீழ் வாழும் குடிகளைத் துன்புறுத்தல், வைதல், அடித்தல் அறிவாற்றல் புகழ் முதலானவற்றைக் கொன்றுரைத்தல் ஆகிய காரணங்களால் வெறுக்கத்தக்க சினம் தோன்றும் என்கிறார்**[91] ச.வே.சு

## உறுப்பறை

உறுப்பறை என்பது **அங்கமாயினவற்றை அறுத்தல்**[92] என்று இளம்பூரணரும் **கைகுறைத்தலும் கால் குறைத்தலும் கண்ணை நீக்குதலும் முதலாயின**[93] என்று பேராசிரியரும் **சினை சிதைத்தல்; அதாவது அங்க- பங்கம்**[94] என்று சோமசுந்தரபாரதியாரும் கூறுவர்.

வெகுளி என்பது எப்பொழுதும் பிறபொருள் பற்றியே வரும் அகவாழ்வில் தன்னை வெகுண்டான் என்பது கிடையாது. உறுப்பறை என்பது ஒருவர் மேல் மற்றொருவர்க்கு சினம் மிகுந்து தோன்றும் நேரத்தில் அவரின் உடலுறுப்புகளான கை கால்களைக் குறைத்தல் என்பது நிகழும். மன்னர் முறைசெய்தலில், தம்குறை கண்ட போது உறுப்பறை செய்தலைத் தமிழ் இலக்கியங்கள் கூறும். இம்மெய்ப்பாடானது புறநூல்களுக்கு உரியது. யானையின் முறம் போன்ற செவியை மறைப்பாகக் கொண்டு புலியானது யானையைத் தாக்கியதை,

**“முறம் செவி மறைப் பாய்பு, முரண் செய்த புலி” (கலித்.52:1)**

என்னும் பாடலடியில் மட்டுமே உறுப்பறை என்ற மெய்ப்பாடு பதிவு செய்யப்பட்டுள்ளது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஒரே ஒரு இடத்தில் மட்டுமே வருகின்றது. இம்மெய்ப்பாடு தொடர்பான வேறு எந்தச் சான்றும் கிடைக்கவில்லை.

## குடிகோள்

**குடிகோள் என்பது கீழ்வாழ்வாரை நலிதல்**[95] என்று இளம்பூரணரும் **தாரமும் சுற்றமும் குடிப்பிறப்பும் முதலாயினவற்றுக்கண் கேடு சூழ்தல்**[96] என்று பேராசிரியரும் **சுற்ற நலிவு**[97] என்று சோமசுந்தர பாரதியாரும் விளக்கம் தருகின்றனர்.

| குடிகோள் மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| **பாலை** | கலித்.10:5-6, 27:7-8, 13:1, 34:14 |
| **குறிஞ்சி** | - |
| **மருதம்** | - |
| **முல்லை** | - |
| **நெய்தல்** | - |
| **மொத்தம்** | 04 |

குடிகோளானது கலித்தொகையில் நான்கு இடங்களில் இடம்பெற்றுள்ளது. நாட்டு மக்கள் அனைவரும் துயரத்தால் அல்லலுற்றுக் கதறும் பொழுது கொஞ்சமும்

இரக்கமில்லாமல் மக்கள் பாடுபட்டுத் தேடி வைத்த பொருட்களைக் கவர்ந்த அரசு என்பதை பற்றிக் கூறும் பொழுது இம்மெய்ப்பாடு கையாளப்பெற்றுளது.

**"அலவுற்றுக் குடிகூறு, ஆறு இன்றிப் பொருள் வெ.்.கி**

**கொலை அஞ்சா வினைவரால் கோல் கொடியவன் நிழல் உலகு"(கலித்.10:5-6)**

என்பதில் கொலைக்கு அஞ்சாத தீயோரால் செங்கோல் முறைமை திரிய அரசாட்சி செய்யும் அரசனின் நாட்டில் உள்ள மக்களின் வாழ்வு ஒரு வாழ்வாயிருக்குமோ அத்தகைய கொடிய ஆட்சியில் வாழ்வும் வளமும் கெட்டு வாடியிழந்து தான் காணப்படும் என்பதை மெய்ப்பிக்கின்றது. இங்கு அரசனின் ஆட்சிச் செயல்பாட்டை விளக்க குடிகோள் என்னும் மெய்ப்பாடு சுட்டப்பெற்றுள்ளது.

கோல் கோடித் துயர் விளைவிக்கும் அரசு கேட்போர் பேச்சைக் கேட்டு ஆட்சி செய்யும் அரசனைப் போல கேட்போர் பேச்சைக் கேட்டு தலைவனும் என்னை விட்டுப் பிரிந்து பொருள் தேடச் சென்றான் என்று தலைவி உரைத்தல் (கலித்.27:7-8). போர்க் குணம் கொண்ட கட்டுக்கடங்காத சினம் கொண்ட வேந்தன் பகைவரின் நாட்டை நெருப்பிட்டு அழித்தான் (கலித்.13:1) முறை தளர்ந்த மன்னனின் ஆட்சியின் கீழ் குடிமக்கள் கலங்குகின்றனர் (கலித்.34:14) என்பன குடிகோள் என்னும் மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

**அலை**

அலை என்பது **வைதலும் புடைத்தலும்**[98] என்று இளம்பூரணரும் **கோல் கொண்டு அலைத்தல்**[99] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர். அலை என்னும் மெய்ப்பாடானது ஐந்து பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

| அலை மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| **பாலை** | - |
| **குறிஞ்சி** | - |
| **மருதம்** | - |

| | |
|---|---|
| **முல்லை** | கலித்.101:17, 101:41, 103, 105:38-39 |
| **நெய்தல்** | - |
| **மொத்தம்** | 05 |

முல்லைக்கலியில் ஏறுதழுவலின் போது பொதுவன் ஒருவனைக் காரிக் காளையானது குடல் சரியக் குத்திக் குலைத்தது அதைப் பார்க்கும் போது எருமை வாகனத்தை உடையவனான கூற்றுவனின் நெஞ்சைப் பிளந்து குடலைக் கூளிக்குப் பலி கொடுப்பதை போன்று உள்ளதை,

**"காற்று போல் வந்த கதழ் விடைக் கார்" (கலித்.101:17)**

என்னும் அடி விளக்கும். பொதுவன் தன் தோள் மேல் வைத்திருந்த கோலினை அசைத்துக் கொண்டே இருந்ததாகவும் அவன் அருகில் வந்த கொல்லேற்றினை அடக்க முற்படும் போது அக்காளையால் அப்பொதுவன் துன்பத்துக்கு ஆளானதும் பாடப்பெற்றுள்ளது (கலித்.101:41).

தோழியானவள் தலைவி வளர்த்த காளையின் சிறப்பினைக் கூறுமிடத்து, நமது இளங்காரியானது ஒருவனை இடைவிடாது குத்தும் தோற்றத்தைப் பாருங்கள்; என்றும் அக்காளையால் பொதுவன் படுகின்ற துன்பத்தையும் காணுங்கள் என்று கூறுவது அலை என்னும் மெய்ப்பாட்டிற்குரியதாகும். (கலித்.103). தன் அருகே யாரையும் நெருங்க விடாமல் சீறும் செவலைக் காளையானது ஒருவனை நெருங்கும் போது கூற்றம் நெருங்குவதைப் போலுள்ளதை

**"செயிரின் குறை நாளால் பின் சென்று சாடி**
**உயிர் உண்ணும் கூற்றமும் போன்ம்!" (கலித்.105:38-39)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

## கொலை

கொலை என்பதற்கு இளம்பூரணர் **கொல்லுதற்கு ஒருப்படுதல்**[100] என்றும் பேராசிரியர் **அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல்**[101] என்றும் விளக்கம் தருகின்றனர்.

| கொலை மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| **பாலை** | |
| **குறிஞ்சி** | கலித்.52:1-4 |
| **மருதம்** | |
| **முல்லை** | கலித்.101:30-32, 104:65 |
| **நெய்தல்** | |
| **மொத்தம்** | 04 |

கொலை என்னும் மெய்ப்பாடானது 04 இடங்களில் பயின்று வந்துள்ளது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு மகாபாரதக்கதையில் நடந்த கொலையைக் குறிக்க உவமையாக அமைந்துளது. வேட்டை நாய்கள் சூழ்ந்து துரத்திய மானானது அதனிடம் இருந்து தப்பிக்க முயன்று வேட்டையாடும் வேடனிடம் அகப்பட்டு இரையானமை (கலித்.) நூற்றுவனின் தலைவனான துரியோதனனை அவனது தொடையில் அடித்து பீமசேனன் கொன்றதைப் போல பலம் பொருந்திய யானையானது தன்னைத் தாக்கிய புலியின் தொடையிலே தம் கொம்புகளாகிய தந்தங்களைக் கொண்டு குத்திக் கொன்றமை இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும். இதனை,

**"முறம் செவி மறைப் பாய்பு முரண் செய்தபுலி செற்று**
**மறம் தலைக்கொண்ட நூற்றுவர் தலைவனைக்**
**குறங்கு அறுத்திடுவான் போல், கூர் நுதி மடுத்து அதன்**
**நிறம் சாடி முரண் தீர்ந்த நீள் மருப்பு எழில் யானை" (கலித்.52:1-4)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். மேலும் வெள்ளை நிற ஏற்றிற்கு அஞ்சாமல் அதன் மேல் பாய்ந்து அதனைத் துன்புறுத்திய இளைஞனைக் காணும் போது தந்தையைக் கொன்ற அசுவதாமனைப் போன்றிருந்தது என்பதையும் (கலித்.101:30-32) செவலைக் காளையின் ஆற்றலை அழித்தவனின் திறமையைப் பார் எனத் தோழி கூறுவதையும்

**"தன், தாளின் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்" (கலித்.101:31)**

**"சிவலை நிறை அழித்தான்" (கலித்.104:65)**

என்னும் பாடலடிகள் கொலை என்னும் மெய்ப்பாட்டிற்குச் சான்றாக அமைகின்றன. இன்று கொலை என்பது சர்வ சாதாரணமாகிவிட்டது. கோபம் வந்தால் என்ன செய்கிறோம் என்பதை அறியாமல் கையில் கிடைப்பதைக் கொண்டு கொலை செய்வது இன்றைய நிகழ்வாக உள்ளமும் குறிக்கத்தக்கது..

## வெகுளி (சினம்)

வெகுளி என்னும் மெய்ப்பாடு சினம் என்னும் பெயரிலே 45 இடங்களில் பயின்று வந்துள்ளது. சினம் என்பது அனைவருக்கும் பொதுவான மெய்ப்பாடாகும். தாம் செய்கின்ற செயலுக்கு எதிர்பு வரும் போது கோபமானது தோன்றுகின்றது.

| வெகுளி மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.2:3-4, 2:6-7, 2:8-9, 4:3-4, 5:3-4, 8:3-4, 7:12-13, 9:10-11, 10:6-7, 12:1-2, 15:7-8, 16:11-12, 20:1-2, 20:5-6, 23:3-4, 26:3-4 |
| குறிஞ்சி | கலித்.39:22-23, 49:3-4 |
| மருதம் | கலித்.76:13-14, 81:26-28, 87:3-4, 88:1-2, 90:11-12, 91:6-7, 97:1-2, 98:20-22, 98:24-25 |
| முல்லை | கலித்.102:19-20, 103:5-6, 103:40-41, 103:53-54, 104:23-24, 106:12-13, 106:26-27, 115:10-11, 116:6-7 |
| நெய்தல் | கலித்.133:8, 137:5-6, 139:24-25, 140:21-22, 144:60-61 |
| மொத்தம் | **45** |

ஏறுதழுவலின் போது தொழுவினுள் விடப்பட்ட எருதுகள் சினங் கொண்டு எழுந்து பொதுவர்களை நோக்கிப் பாய்ந்ததை,

**“கொலைமலி சிலைசெறி செயிர்அயர் சினம் சிறந்து**

**உருத்து எழுந்து ஓடின்று” (கலித்.102:18-19)**

**“காற்றுப் போல் வந்த கதழ்விடைக் காரியை” (கலித்.103:40)**

**“குரூஉக் கண் கொலை ஏறு கொள்வான்” (கலித்.104:23)**

என்னும் பாடலடிகள் விளக்கும். பொதுவர்களின் சினத்தை,

**“சீர்கெழு சிலை நிலைச் செயிர்இகல் மிகுதியின், சினப்பொதுவர்**

**தூர்பு எழு துதைபுதை துகள் விசும்புஉற எய்த,**

**ஆர்பு, உடன் பாய்ந்தார், அகத்து” (கலித்.105:27-29)**

என்னும் பாடலடிகள் விளக்கும். ஏறுதழுவலின் போது களத்தில் ஏற்படும் சினத்தை பற்றி முல்லைக்கலிப் பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

**உவகை**

எண்வகை மெய்ப்பாடுகளுள் நிறைவாக அமைவது உவகை என்னும் மெய்ப்பாடாகும். இதனை,

**“செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்று**

**அல்லல் நீத்த உவகை நான்கே” (தொல்.1205)**

என்கிறார் தொல்காப்பியர். இம்மெய்ப்பாடு குறித்துப் பேராசிரியர், **இ.்.து ஈற்றுக்கண் வந்த உவகை உணர்த்துதல் நுதலிற்று. செல்வமென்பது நுகர்ச்சி புலனென்பது கல்விப் பயனாகிய அறிவுடைமை, புணர்வென்பது காமப் புணர்ச்சி முதலாயின. விளையாட்டென்பது யாறுங் குளனுங் காவுமாடிப் பதியிகந்து வருதல் முதலாயின. இவை நான்கும் பொருளாக உவகைச் சுவை தோன்றும் உவகை எனினும் மகிழ்ச்சியெனினும் ஒக்கும்**[102] என்று விளக்கம் தருகின்றார்.

| உவகை நிலைக்களன்கள் | எண்ணிக்கை |
|---|---|
| செல்வம் | 16 |
| புலன் | 03 |
| புணர்வு | 34 |
| விளையாட்டு | 17 |
| மொத்தம் | 98 |

**செல்வத்தால் ஏற்படும் நுகர்ச்சியாலும் புலமையாலும் ஏற்படும் அறிவு முதிர்ச்சியாலும் உள்ள இணைப்பாலும் உள்ளம் ஒத்தாரோடு கூடியாடும் விளையாட்டாலும் துன்பம் நீக்கிய மகிழ்ச்சி தோன்றும்**[103] என்கிறார் ச.வே.சு

## செல்வம்

செல்வம் என்பது பற்றி இளம்பூரணர் **செல்வ நுகர்ச்சி**[104] என்றும் **செல்வமாவது மனத்தை மகிழ்விக்கும் பொருள்களுக்குப் பொதுப்பெயர் எக்காலத்தும் பிறரை வருத்திப் பெறும் செல்வம் உவகைப் பொருளாகாது**[105] என்று சோம சுந்தர பாரதியாரும் உரைப்பர்.

செல்வம் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 16 இடங்களில் பயின்று வந்துள்ளது. எத்தகைய பெருஞ்செல்வம் இருப்பினும் மழலைச் செல்வமே மகத்தான செல்வம் என்று கொண்டாடுவது தமிழர்தம் மாண்பு.

| செல்வம் மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.10:1-2, 15:10-11, 16:18-19, 18:1-2, 27:1-2, 35:1-2 |
| குறிஞ்சி | கலித்.50:13-14, 56:11-12, 57:5-6, 58:10-11 |
| மருதம் | கலித்.68:1-2, 68:33-34, 83:1-2 |
| முல்லை | கலித்.105:2-3, 106:4-5, 106:45-46 |
| நெய்தல் | - |
| மொத்தம் | **16** |

ஆலமர் செல்வனாகிய சிவனின் புதல்வன் முருகன் போன்றவன் தன் மகன் என்று மகனைக் கொண்டாடுகின்றான் கலித்தொகைத் தலைவன்.

**“அரி பொலி கிண்கிணி ஆர்ப்பு ஓவா அடி தட்ப,**

**பாலோடு அலர்ந்த முலை மறந்து, முற்றத்துக்**

**கால் வல் தேர் கையின் இயக்கி, நடை பயிற்றா,**

**ஆல் அமர் செல்வன் அணிசால் பெரு விறல்**

**போல, வரும் என் உயிர்!**

**பெரும! விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்,**

**பெருந் தெருவில் கொண்டாடி ஞாயர் பயிற்ற,**

**திருந்துபு நீ கற்ற சொற்கள் யாம் கேட்ப,**

**மருந்து ஓவா நெஞ்சிற்கு அமிழ்தம் அயின்றற்றா,**

**பெருந்தகாய் கூறு, சில**

**எல்லிழாய்!” (கலித்.81:6-16)**

என்னும் பாடலடிகளில் மழலைச் செல்வத்தைக் கொஞ்சும் அழகு புலப்படுகின்றது. அதுபோல ‘அத்தத்தா’ என்று மகன் கூறும் மொழியைக் கேட்டால் இனிமையாக உள்ளது என்ற தலைவியின் கூற்றில் மழலைச் செல்வத்தின் சிறப்பு சுட்டப்பெற்றுற்றது.

நெடுநாள் குழந்தையின்றி வாடிய குடும்பத்தில் பிறந்த ஒரே செல்வ மகள் (கலித்.50:14) என்பதிலும் செல்வம் நிறைந்த உயர்ந்த சிறப்புடைய தந்தையின் உயர்ந்த மாளிகை (கலித்.57:6)என்னும் தலைவி கூற்றிலும் பாலைக்கலியில் தலைவன் பொருள் ஈட்டச் செல்லும் போதும் செல்வம் என்னும் மெய்ப்பாடானது இடம்பெறுகின்றது. தேடுகின்ற பொருளை ஈட்டிய பின்னர் அச்செல்வத்தால் உருவாகும் பொருள் தான் இன்பம் எனத் தலைவன் கூறுவதை,

**“உரனுடை உள்ளத்தை செய்பொருள் முற்றிய**

**வளமையான் ஆகும் பொருள் இதுஎன்பாய்!” (கலித்.12:10-11)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும

**புலன்**

புலன் என்பதற்கு, **உண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலன்களான் நுகர்தல்**[106] என இளம்பூரணரும் **கல்விப் பயனாகிய அறிவின்பம் புலனுவகை**[107] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர். இம்மெய்ப்பாடானது நான்கு பாடல்களில் பயின்று வந்துள்ளது.

| **புலன் மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | - |
| **குறிஞ்சி** | கலித்.47:3, 40:24-25 |
| **மருதம்** | கலித்.68:4 |
| **முல்லை** | - |
| **நெய்தல்** | கலித்.141:19-20 |
| **மொத்தம்** | **04** |

தலைவன் வல்லவர்களைப் பின்பற்றிச் சிறந்த அறிவுத் திறங்களை அறிந்தவன் போலச் செருக்குடன் தோன்றுகின்றான் என்பதில் கல்வியால் தோன்றும் புலனுவகை (கலித்.47:3) சுட்டப்பெறுகிறது. மேலும் மன்னருக்கு அவ்வப்போது நுண்மையான அறிவுத் திட்டங்களைக் கூறும் சிறந்த அமைச்சர்களைப் போலப் புலவர்களும் நுண்ணறிவுடன் விளங்கியதை

**"முதுமொழி நீரா, புலன் நா ஊர"          (கலித்.68:4)**

என்னும் பாடலடி உரைக்கும். தெளிந்த பேச்சுக்களிலே வல்லர்கள் நிறைந்த சபையிலே சொல்லவல்ல ஒருவனாக இருந்தவன் நான் எனத் தலைவன் கூறும் போதும் இம்மெய்ப்பாடு தோன்றியதை

**"வல்லார் முன் சொல் வல்லேன் என்னைப் பிறர் முன்னர்க்**
**கல்லாமை காட்டியவள்"          (கலித்.141:19-20)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.. குறிஞ்சிக்கலியில் ஒவ்வொரு மலரையும் ஆராய்ந்து சென்று அதிலுள்ள தேனைப் பருகும் வண்டினைப் போல தலைவனும்

ஆராய்ந்து பார்க்கின்றான் என்பதில்அறிவுப் பொருளாக உவகை என்னும் மெய்ப்பாடானது தோன்றுகின்றதை,

**“பெண்டிர் நலம் வௌவி, தண்சாரல் தாது உண்ணும்**

**வண்டின் துறப்பான் மலை” (கலித்.40:24-25)**

என்னும் பாடலடிகள் உரைக்கும்.

| புணர்வு மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.4:13-14, 9:7-8, 11:3-4, 19:1-2, 24:6-7, 27:5-6, 35:24-25 |
| குறிஞ்சி | கலித்.39:34-37, 39:49-50, 43:21-22, 45:10-11, 47:22-23, 54:10-11, 54:12-13, 64:28-29 |
| மருதம் | கலித்.66:5-6, 69:16-18, 75:10-11, 75:18-19, 78:13-14, 92:8-9, 92:60-61 |
| முல்லை | கலித்.108:43-44, 114:16-17, 118:18-19 |
| நெய்தல் | கலித்.125:8-9, 135:6-7, 135:8-9, 135:12-13, 136:5-6, 142:1-2, 144:50-51, 147:36-37, 148:17-18 |
| **மொத்தம்** | **34** |

## புணர்வு

புணர்வு என்பதற்கு **மகளிரொடு புணர்தலானும்**[108] என இளம்பூரணரும் **காமப் புணர்ச்சி**[109] எனப் பேராசிரியரும் **அன்பொடு புணர்ந்த இன்பத்தினை ஐந்தில் இருவயின் ஒத்த கற்புறு காதற் கூட்டமாம்**[110] என்று சோமசுந்தர பாரதியாரும் உரைப்பர். இம்மெய்ப்பாடானது 34 பாடல்களில் பயின்று வந்துள்ளது.

மாலைக் காலமானது புணர்ந்து மகிழ்பவருக்கு உற்ற துணையாகவும் பிரிந்தவருக்குத் துன்பம் தருவதாகவும் உள்ளது என்றும் தழுவிய கணவன் என்னைப் புணரும் போது நான் எதுவுமே உணரேன். ஆனால் தலைவன் பிரிந்த நேரத்தில் இரவென்று பகலை வெறுப்பேன் என்று தலைவி உரைப்பதை

**“புணர்ந்தவர்க்குப் புனை ஆகி” (கலித்.148:18)**

**“புல்லிய கேளிர் புணரும் பொழுது உணரேன்**

**எல்லி ஆக, ‘எல்லை’ என்று ஆங்கே, பகல் முனிவேன்;**

**எல்லிய காலை, இரா முனிவேன்;” (கலித்.144:51-53)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவன் பூங்கொத்துகள் நிறைந்த சோலையிலே பரத்தையருடன் வந்து இன்புற்றான் (கலித்.68:17) ஆற்று மணல் குவிந்த துறையிலே சிற்றில் புனைந்த சிறுநுதல் ஆயத்தவர்களிடையே தன் காதலனோடு சேரும் ஒரு மணந்தான் நிகழ வேண்டும் என்று தலைவி கூறுமிடத்தும் (கலித்.114:6) யாழ் நரம்பிலே எழுகின்ற செவ்வழிப் பண்போன்று மொழியின்மை உடையார் பாராட்டும் இடத்தும் அவர்களுடன் புணரும் புணர்ச்சியுள் விளையும் புதுநலன் பற்றிக் கூறும் பொழுதும் (கலித்.118:19) இம்மெய்ப்பாடு வெளிப்படுகின்றது.

நுங்கின் கண்ணில் இருந்து வரும் இளநீர் போன்ற நீருடைய சிறு சுனையிருக்கிறது. அதில் நீராடி செம்முல்லையும் வெண்முல்லையும் பறித்துத் தனியாக அப்பொழிலிலே என்னோடு சிறது நேரம் கூடி இருந்துவிட்டுப் பொழுது சாய்ந்த குளிர்ந்த நேரத்திலே உன் ஊருக்குச் செல்வாயாக என்று தலைவியிடம் தலைவன் கூறும் நிலையில் (கலித்.108:43) புணர்வு என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. மேலும்

**“புரிவுண்ட புணர்ச்சியுள் புல்ஆரா மாத்திரை” (கலித்.142:1)**

என்னும் பாடலடியில் காமத்தின் பயன் கூடிக் கலத்தலேயல்லாமல் பின்னிப்பிணையும் புணர்ச்சியுள் தழுவுதல் மட்டும் இல்லாத நிலையில் ஒருவர்பால் நெருங்கி உறவாடி வந்து ஒடுங்குதல் என்பது நன்மை தராது என்கின்றது. ஒருவரை நெருங்கி காமவயப்படும் நிலை மட்டுமே புணர்ச்சியன்று உள்ளத்தால் ஒருவரை நினைத்து இன்புற்றாலும் அதுவும் புணர்வு மெய்ப்பாட்டில் அடங்கும்.

## விளையாட்டு

உவகை மெய்ப்பாடு தோன்றும் நிலைக்களன்களில் நான்காவது விளையாட்டு ஆகும். விளையாட்டு என்பது **யாறுங் குளனுங் காவு மாடிப் பதியிகந்து வருதன் முதலாயின**[111] எனப் பேராசிரியரும் **விளையாட்டாவது மக்கள் உளம் களித்து ஆடும் தீது அறியாப் பொய்தல். அ∴தாவது ஓரைவகை அனைத்தையும் குறிக்கும். இ∴து ஆண் பெண் இருபாலருக்கும் பொது**[112] எனச் சோமசுந்தர பாரதியாரும் விளக்கம் தருகின்றனர். இம்மெய்ப்பாடானது 17 பாடல்களில் பயின்று வந்துள்ளது.

| **விளையாட்டு மெய்ப்பாடு** | **திணை வாரியாகப் பாடல் எண்கள்** |
|---|---|
| **பாலை** | கலித்.27:19-20,35:14-15 |
| **குறிஞ்சி** | கலித்.39:1-2, 40:2-23, 51:2-3, 59:5-6, 59:16-17 |
| **மருதம்** | கலித்.66:13-14, 69:16-17, 72:15-16, 76:1-2, 83:3-4, 92:65-66, 98:18-19 |
| **முல்லை (03)** | கலித்.102:5-6, 111:5-6, 113:23-24 |
| **நெய்தல் (00)** | --- |
| **மொத்தம்** | **17** |

தலைவியானவள் தோழியர் சூழ ஆற்றிலே நீராடச் சென்றாள். அங்கே ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டாள் அதைக் கண்ட தலைவன் விரைந்து வந்து தலைவியின் உயிரைக் காப்பாற்றினான். இச்செய்தியினைத் தோழி செவிலியிடம் கூறும்பொழுது

**“காமர் கடும்புனல் கலந்து எம்மொடு ஆடுவாள்” (கலித்.39:1)**

என்றுரைப்பர். மகளிர் அனைவரும் பந்தடித்து விளையாடிய களைப்புத் தீர தெய்வ மகளிர் பலரும் மகிழ்ந்து நீராடும் தாழ்ந்த அருவியின் குளிர்ந்த நீரிலே நீராடி மகிழ்ந்தனர். (கலித்.40:23)

தலைவி தோழியிடம் தலைவனைப் பற்றிக் கூறுமிடத்து நாம் சிறு வயதில் தெருவில் மணற்சிற்றில் விளையாடும் போது வந்து அச்சிற்றிலைத் தன் காலால் சிதைத்தானல்லவா ஒருவன். அவனே நாம் தலையிற் சூடியிருந்த கோதையைப் பிய்த்து நம்மை அழவிட்டவன், நாம் விளையாடிய பந்தினைப் பறித்துக் கொண்டு ஓடி நம்மை அழவிட்டவன், அவன் தான் இன்று பகல் பொழுதிலே இல்லத்திற்குத் தேடி வந்தான் என்றுரைப்பள். இதனை,

**“தெருவில் நாம் ஆடும்**

**மணற்சிற்றில் காலின் சிதையா, அடைச்சிய**

**கோதை பரிந்து வரிப்பந்து கொண்டு ஓடி” (கலித்.51:1-3)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இதில் தலைவி தோழிக்கு போது சிறுவயதில் விளையாடிய விளையாட்டுக்கள் அனைத்தையும் கூறுகின்றாள். மேலும் ஆட்டினத்து ஆயர் மகளிரோடு நாம் அனைவரும் சேர்ந்து விளையாடினோம் என்பதிலும் விளையாட்டு என்னும் மெய்ப்பாடு இடம்பெறுகின்றது. (கலித்.111:5-6) மருதக்கலியில் மயில் போன்ற இயல்பினை உடைய பரத்தையருடன் இணைந்து தலைவன் மடுக்களில் நீராடி மகிழ்ந்ததகதை,

**“துயில் இன்றி யாம் நீத்த, தொழுவை அம்புனல் ஆடி,**

**மயில் இயலார் மருவுண்டு, மறந்து அமைகுவான் மன்னோ” (கலித்.30:5-6)**

என்னும் பாடலடிகள் விளக்கும். பெரும்பாலும் தலைவன் பரத்தையருடன் சென்று புதுப்புனலில் நீராடி வந்தமை, தலைவி தலைவனைப் பற்றிக் கூறுமிடத்தும் விளையாட்டு என்னும் மெய்ப்பாடானது பயின்று வருகின்றது.

**உவகை**

உவகை என்னும் பெயரிலேயே வரும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 27 இடங்களில் பயின்று வருகின்றது.

| உவகை மெய்ப்பாடு | திணை வாரியாகப் பாடல் எண்கள் |
|---|---|
| பாலை | கலித்.11:10-11, 17:20-21, 27:17-8, 35:13-14 |
| குறிஞ்சி | கலித்.40:32-33, 49:10-11, 49:13-14 |
| மருதம் | கலித்.66:17-18, 68:21-22, 69:3-4, 70:1-2, 70:4-5, 70:13-14, 72:10-11, 73:15-16, 80:15-16, 85:34-35, 90:5-6, 98:31-32 |
| முல்லை | கலித்.103:75-76, 104:68-69, 105:5-6, 105:62-63, 106:33-34 |
| நெய்தல் | கலித்.122:12-13, 132:3-4, 138:30-31, 148:9-10 |
| **மொத்தம்** | **27** |

பொருள் தேடப் பிரிந்து செல்ல இருந்த தலைவனைப் பலவற்றையும் கூறித் தடுத்ததால் பொருள் தேடப் போவதை விடுத்தான் எனத் தலைவியின் மனம் மகிழும் படித் தோழிக் கூறியதை,

**"பொருந்தியான் தான் வேட்ட பொருள்வயின் நினைந்த சொல்**
**திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய**
**மருந்து போல், மருந்து ஆகி, மனன் உவப்ப-**
**பெரும் பெயர் மீளி - பெயர்ந்தனன் செலவே" (கலித்.17:18-21)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவியும் தோழியும் பாடிய வள்ளைப்பாட்டை கேட்ட தலைவன் மகிழ்ச்சியுடன் பெண் கேட்டு வந்ததை,

**"தன்மலை பாட, நயவந்து கேட்டு அருளி**
**மெய்ம்மலி உவகையன் புகுந்தான் புணர்ந்து ஆரா" (கலித்.40:31-32)**

என்னும் பாடலடிகள் விளக்கும். பரத்தையர் சேரியில் தலைவன் பரத்தையருடன் மகிழ்ந்து துணங்கைக் கூத்து ஆடி மகிழ்ந்தான் (கலித்.66:17-18) காமக்கிழத்தி தலைவன் தன் இல்லம் வரும் போது மகிழ்ந்ததை,

**"மனைவரின் பெற்று உவந்து" (கலித்.68:22)**

என்னும் பாடலடி உரைக்கும். முல்லைநிலத் தலைவியைப் பொதுவனோடு இணைத்து ஊர் மக்கள் அலர் தூற்றியதற்கு அவள் மகிழ்ந்ததை,

**“இன்ன உவகை பிறிது யாது - யாய் என்னைக்**
**கண்ணுடைக் கோலள் அலைத்தற்கு, என்னை**
**மலர் அணி கண்ணிப் பொதுவனோடு எண்ணி,**
**அல் செய்துவிட்டது இவ்ஊர்”       (கலித்.105:62-65)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

# தொகுப்புரை

❖ ஆதிமனிதன் தன் உள்ளத்து உணர்ச்சிகளை தன் உடல் வழி வெளிப்படுத்தினான். உள்ளத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடாகத் தோன்றும் புற உடலசைவுகள் மெய்ப்பாடுகள் ஆகும்.

❖ நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன தொல்காப்பியர் குறிப்பிடும் எண்வகை மெய்ப்பாடுகள் ஆகும்.

❖ கலித்தொகையைப் பொருத்த வரையில் நகை என்னும் மெய்ப்பாடு நகைக்குரிய பொருளில் மட்டுமின்றி கேலிப் பொருளிலும் பயன்பட்டதை அறிய முடிகின்றது. மேலும் நகை என்னும் மெய்ப்பாட்டில் அது பெருநகையாக மாறுகின்ற போது தலைவியின் வருத்தத்தை உட்கொண்டு அமைகின்றது.

❖ தலைவன் பொருள்தேடுவதற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கிறான். இந்நிலையில் இளமையும் காலமும் நிலையாக இருக்காது மூப்பு என்பது வந்தே தீரும் எனத் தோழிக் கூறும் மூப்பு என்னும் மெய்ப்பாடு புலப்படுத்தும் புதைபொருளாக நிலையாமை அமைந்தள்ளது.

❖ உடலில் தோன்றும் நோய் மட்டும் பிணியன்று மக்களின் உள்ளத்தில் தோன்றும் பிரிவினால் ஏற்படும் வருத்தமும் ஏக்கமும் பிணியே ஆகும். தலைவனின் பிரிவினால் தலைவிக்கு உள்ளத்தில் பிணி என்ற நோய் தோன்றுகின்றது.

❖ இரவுக்குறிக்கண் தலைவன் வரும் வழி, தலைவிக்கு அச்சம் என்னும் மெய்ப்பாட்டைத் தோற்றுவிக்கிறது. இம்மெய்ப்பாடு வரைவை நோக்கி தலைவி செல்வதற்கும் தலைவனை வரைவுடன் படச் செய்வதற்கும் பெரிதும் உதவுகிறது.

❖ மன்னனின் கொடை பெருமிதம் என்னும் மெய்ப்பாடு தோன்ற இடமளிக்கிறது.

❖ சினம் வெகுவாக எழும் தன்மையே வெகுளி எனப்படும். மனிதர்களிடம் இம்மெய்ப்பாடு தோன்றும் போது அழிவுக்கு வழிவகுக்கும் போர் உள்ளிட்ட துன்பத்தைத் தரும் சில செயல்கள் நிகழுகின்றன.

❖ உறுப்பறை என்னும் மெய்ப்பாடானது புற இலக்கியத்திற்கே உரிய ஒன்றாகும். ஒருவரின் மேலுள்ள பலநாள்பட்ட சினம் (அ) பகையானது வெளிப்படும் போது அவரின் கை கால்களைத் துண்டாக்குதல் என்ற நிலை ஏற்படுகின்றது.

❖ கலித்தொகையில் ஆண்மக்களுக்கு நிகராக பெண் மக்களின் வீரம் என்னும் மெய்ப்பாடு பேசப்படுகின்றது. கொல் ஏற்றினைக் கண்டு அஞ்சுபவனை மறுக்கும் உரிமையின் வழி இது எனப் புலனாகும்.

❖ தோழியர் சூழத் தலைவி ஆற்றில் நீராடச் செல்கின்றாள். தலைவன் தலைவியை விடுத்து காதற் பரத்தையருடன் சென்று புனல் விளையாட்டில் கலந்து கொள்கின்றான். இதில் தலைமக்கள் இருவருக்கும் விளையாட்டை நிலைக்களனாகக் கொண்டு உவகை என்னும் மெய்ப்பாடு தோன்றுகிறது.

❖ தலைவன் பரத்தையர் இல்லம் சென்று துணங்கைக் கூத்தை ஆடுதல் உவகை என்னும் மெய்ப்பாடு தோன்ற இடமளிக்கிறது.

## சான்றெண் விளக்கம்

1. ஜே.ஜி.என்.தாசன், சிலம்பில் மெய்ப்பாடுகள் ப.1
2. மு.பொன்னுசாமி, சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள், ப.14
3. கு.கோதண்டபாணி பிள்ளை, கம்பரும் மெய்ப்பாட்டியலும் ப.6
4. கு.முருகேசன், ஆய்வுமுகங்கள் பக்.7-8
5. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.110
6. மு.பொன்னுசாமி, சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள், ப.16
7. மேலது ப.9
8. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.5
9. மேலது ப.23
10. தமிழண்ணல், தொல்காப்பிய இலக்கிய கொள்கை ப.21
11. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப.260
12. கு.முருகேசன், ஆய்வுமுகங்கள் ப.13
13. மேலது ப.13
14. மேலது ப.14
15. கு.கோதண்டபாணி பிள்ளை, கம்பரும் மெய்ப்பாட்டியலும் ப.8
16. சிங்காரவேலு முதலியார், அபிதானசிந்தாமணி, ப.1631
17. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ் மொழியகராதி ப.1204
18. சந்தியா நடராஜன் (ப.ஆ) மதுரைத் தமிழ்ப் பேரகராதி ப.469
19. வாழ்வியல் களஞ்சியம் தொகுதி.14 ப.85
20. நா.மம்மது, (ப.ஆ) தமிழிசைப் பேரகராதி ப.423
21. தி.வே.கோபாலையர் தமிழ் இலக்கணப் பேரகராதி பொருள் பக்.70
22. இலக்கியத் திறனாய்வியல் ப.74
23. தா.ஏ.சண்முகம், உளவியல் இரண்டாம் பாகம். ப.59

24. சோமசுந்தர பாரதியார், பொருட் படலம் புத்துரை. ப.18

25. மு.பொன்னுசாமி, சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள், பக்.21-22

26. கு.முருகேசன், ஆய்வுமுகங்கள் ப.13

27. மேலது ப.13

28. மேலது ப.13

29. Kamilzvelebil,1973 p.123

30. சி.வை.தாமோதரம்பிள்ளை, கலித்தொகை முன்னுரை ப.5

31. மு.இராமசாமி, நேற்று இன்று நாளை.ப.11

32. மேலது.ப.15

33. தமிழ் லெக்சிகன்.தொல்.1982.ப.227

34. சொ.சேதுபதி, திருக்குறிளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள்.ப.49

35. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.11

36. மேலது ப.11

37. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.38

38. தமிழண்ணல், தொல்காப்பிய இலக்கிய கொள்கை, ப.21

39. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.13

40. மேலது ப.15

41. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.37

42. மேலது ப.33

43. மேலது ப.35

44. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.102

45. மேலது ப.102

46. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.11

47. மேலது ப.11

48. மேலது ப.11

49. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி பக்.12-13

50. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.17

51. மேலது ப.18

52. மேலது ப.17

53. மேலது ப.18

54. அ.கோபிநாத், தமிழ் காப்பியங்களில் அவலம் ப. 21

55. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.40

56. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.5

57. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.40

58. மேலது ப.42

59. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.26

60. மேலது ப.26

61. மேலது ப.109

62. மேலது ப.90

63. மேலது ப.117

64. மேலது ப.117

65. மேலது ப.117

66. மேலது ப.116

67. மேலது ப.116

68. மேலது ப.116

69. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.26

70. மேலது ப.25

71. மேலது ப.26

72. சொ.சேதுபதி, திருக்குறிளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள்.ப.90

73. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.25

74. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.60

75. மேலது ப.60

76. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.25

77. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.28

78. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி பக்.3-4

79. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.25

80. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.6

81. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.31

82. மேலது ப.31

83. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.69

84. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.33

85. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி ப.97

86. மேலது ப.44

87. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.33

88. மேலது ப.33

89. மேலது ப.33

90. மேலது ப.36

91. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை ப.485

92. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.35

93. மேலது ப.36

94. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.72

95. மேலது ப.69

96. மேலது ப.70

97. மேலது ப.72

98. மேலது ப.69

99. மேலது ப.70

100. மேலது ப.69

101. மேலது ப.70

102. மேலது ப.72

103. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை ப.485

104. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.37

105. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.76

106. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.37

107. மேலது ப.38

108. மேலது ப.37

109. மேலது ப.38

110. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம்-மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.76

111. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம் -மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.37

112. மேலது ப.39

# கலித்தொகையில் களவுக் கால மெய்ப்பாடுகள்

ஐந்திணை என்பது உளமொத்த காதலாகும். இக்காதல் உருவாகும் போது கூடலும் பிரிதலும் ஊடலும் இருத்தலும் இரங்கலும் நிகழக் கூடியனவாகும். தலைவனும் தலைவியும் காதலில் பிணைந்து கூடுதலைக் குறிஞ்சி என்றும், கூடிப் பின் பிரிதலைப் பாலை என்றும் தலைவன் பிரிந்த காலத்தில் தலைவன் மீது பொருந்தாதனவற்றைச் சாற்றி ஊடியிருத்தலை மருதம் என்றும் ஊடினாலும் உலகியலை நினைத்து தலைவன் வரும் வரை ஆற்றியிருத்தலை முல்லை என்றும் நாளாக நாளாக ஆற்றாமை மிகுந்து தலைவனை நினைத்து இரங்குதலை நெய்தல் என்றும் அழைத்தனர். வயது வந்த ஆணும் பெண்ணும் தம்முள் நட்புக் கொண்டு ஒழுகிக் காதல் செய்வதையும் அதனைப் பிறர் அறியாமல் நிகழ்த்துதலையும் களவு என அழைத்தனர். அத்தகைய களவு வாழ்க்கையின் போது தலைமக்களிடையே பலவகையான உணர்வுகள் தோன்றுகின்றன. இவ்வுணர்வுகள் கலித்தொகையில் மெய்ப்பாடுகளாக இடம்பெற்றுள்ள முறை குறித்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## களவுக்கால மெய்ப்பாடுகள்

புகுமுகம் புரிதல் முதலாகக் கையறவுரைத்தல் ஈறாக இருபத்து நான்கு மெய்ப்பாடுகளைக் களவுக் கால மெய்ப்பாடுகளாகத் தொல்காப்பியர் கூறுகின்றார். இவை களவு காலத்தில் தலைமக்களிடம் தோன்றுகின்ற மெய்ப்பாடுகள் ஆகும்.

1. **காட்சி முதல் புணர்ச்சி வரை நிகழ்வன**

   (புகுமுகம் புரிதல் முதல் இருகையுமெடுத்தல் வரை பன்னிரெண்டு மெய்ப்பாடுகள்)

2. **புணர்ச்சிக்குப் பின் களவு வெளிப்படும் வரை நிகழ்வன**

   (பாராட்டெடுத்தல் முதல் கையறவுரைத்தல் வரை பன்னிரெண்டு மெய்ப்பாடுகள்)

## காட்சி என்னும் முதல் நிலைக்கண் நிகழும் மெய்ப்பாடுகள்

தலைவனும் தலைவியும் முதன்முதலாகச் சந்திக்கும் போது அவர்களிடம் காதல் தோன்றுகின்றது. அந்தக் காதல் உணர்ச்சியின் வெளிப்பாடாகத் தலைவியிடம் புகுமுகம்புரிதல், பொறிநுதல் வியர்த்தல், நகுநயம் மறைத்தல், சிதைவு பிறர்க்கின்மை என்னும் நான்கு மெய்ப்பாடுகள் தோன்றும் என்பதை,

**"புகுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல்,**
**நகுநயம் மறைத்தல், சிதைவு பிறர்க்கு இன்மையொடு**
**தகுமுறை நான்கே ஒன்றென மொழிப" (தொல்.நூ.1207)**

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் கூறுகின்றார். தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் கண்களால் கண்டு காதலுற்ற நிலையில் தலைவியிடம் இம்மெய்ப்பாடுகள் தோன்றுவதால் இவை காட்சி என்னும் முதல் நிலைக்கண் நிகழும் மெய்ப்பாடுகளாகும்.

## புகுமுகம் புரிதல்

இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவியிடம் இம்மெய்ப்பாடானது தோன்றுகின்றது. புகுமுகம் புரிதல் என்பதற்கு, **தலைமகன் புணர்ச்சிக் குறிப்பினனாய்ப் புகுது முகத்தினை மாறுபடாது பொருந்துதல்**[1] என இளம்பூரணரும் **ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழித் தன்னை அவன் நோக்குதற்கண் விரும்பும் உள்ள நிகழ்ச்சி; புகுதலென்பது, தலைமகன் நோக்கிய நோக்கெதிர் தான் சென்று புகுதல். முகமென்பது அங்ஙனந் தான் புகுதற்கிடமாகிய நோக்கு; நோக்கெதிர் நோக்குதலை முகநோக்குதல் என்பவாகலின் இந்நோக்கினை முகமென்றா னென்பது புரிதலென்பது, மேவுதல் என்றவாறு; அ·.தாவது, தலைமகன் காண்டலைத் தலைமகள் வேட்டல் என்றவாறாம். மற்றிது தலைமகற்கு உரித்தன்றோவெனின், அவன் தான் காண்பினல்லது தற்காண்டலை நயவான்; அது தலைமையன் றாகலினென்பது**[2] எனப் பேராசிரியரும் உரைப்பர்.

முதன் முதலில் தலைமக்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் சூழ்நிலை ஏற்படும். அவ்வாறு சந்திக்கும் போது தலைவனின் எண்ணத்திற்குத் தலைவி உடன்பட்டு அவனின் பார்வைக்கு தனது மனவிருப்பத்தை மலரும் முகத்தால் வெளிப்படுத்துதலே புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடாகும்.

இருவர் சந்திப்பின் ஆரம்பமே புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடாகும். இருவர் பார்த்துக் கொள்ளும் நேரம் தலைவன் தலைவியின் மனதை அறிய முற்படுவான். அப்போது அவளின் காதல் உணர்ச்சியானது முறுவலாக வெளிப்படுகின்றது. இதுவே தலைவியின் மனதை தலைவன் அறிந்து கொள்ள ஏதுவாகின்றது. இக்காதல் மெய்ப்பாட்டில் கண்களும் இதயமும் முதன்மை பெறுகின்றன.

**கண்களாலும் இதயத்தாலும் தோன்றும் காதல் என்பது உண்மையான அன்புப் பிணைப்பாகும். அது கண்களில் மலர்ந்து இதயத்தில் கனிய வைக்கப்படுகின்றது**[3] என்னும் மெர்சி வேலன்சியின் கூற்று இங்கு சுட்டத்தக்கது.

தலைவன், தலைவியின் உள்ளம் ஒன்றுபடுவதற்கு அவர்கள் பரிமாறிக் கொண்ட பார்வை தான் காரணம் என்பதைத் தொல்காப்பியர்,

**“நாட்டம் இரண்டும் அறிவு உடம்படுத்தற்குக்**

**கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்” (தொல்.நூ.1042)**

என்னும் நூற்பாவில் கூறுகின்றார்.

கலித்தொகையில் இம்மெய்ப்பாடானது நான்கு பாடல்களில் (கலித். 37:2-5, 102:5-8, 105:50-52, 105:66-68) இடம்பெற்றுள்ளது. தலைவன் ஒருவன் தினமும் வயமான் அடியைத் தேடுவது போல வந்து தலைவியைப் பார்த்துக் கொண்டே செல்வதை,

**“கயமலர் உண்கண்ணாய்! காணாய்; ஒருவன்**

**வயமான் அடித்தேர்வான் போல, தொடை மாண்ட**

**கண்ணியன் வில்லன், வரும் என்னை நோக்குபு,**

**முன்னத்திற் காட்டுதல் அல்லது தான் உற்ற**

**நோய் உரைக் கல்லான் பெயரும்மன் பல்நாளும்” (கலித்.37:1-5)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். இதில் தலைமக்கள் இருவரும் ஒருவரை ஒருவர் தினமும் பார்த்துக் கொள்வதால் இங்கு புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடானது தோன்றுகின்றது.

இருவரும் ஒருவரை ஒருவர் சந்திக்காமல் ஒருவர் மட்டும் மற்றவரைப் பார்த்த சூழலிலும் இம்மெய்ப்பாடு தோன்றியுள்ளது. முதன்முதலாகத் தலைவியைக் கண்ட தலைவன் அவளைப் பற்றிப் பாங்கனிடம் கூறுவதாக ஒரு பாடல் (கலித்.102:5-8) அமைந்துள்ளது. இப்பாடலில் தலைவி தன் தோழிகளுடன் விளையாடிக் கொண்டுள்ளாள். அவ்வழியே செல்லும் தலைவன் அவளைக் கண்டு என் உடலோடும் என் உயிர்க்குள்ளும் கலந்தவள் ஆகிய இவள் யார் எனப் பாங்கனிடம் வினவுகின்றான். இதில் தலைவன், தலைவியைக் கண்ட விடத்து அவனிடம் புன்னகை தோன்றுகின்றது.

இதே போன்று தலைவனைக் கண்டவுடன் தலைவிக்குப் புன்னகை அரும்பியதை,

**“வெல்புகழ் உயர்நிலைத் தொல் இயல் துதைபுதை துளங்கு இமில்**

**நல்லேறு கொண்ட, பொதுவன் முகன் நோக்கி,**

**பாடுஇல ஆயமகள் கண்” (கலித்.105:50-52)**

என்னும் பாடலடிகள் விளக்கும். பொதுவாக ஒருவரைக் கண்டு மற்றொருவர் புன்னகை புரிதல் என்பது இயல்பான ஒரு மெய்ப்பாடாகும். இதுவே காதலர்களுக்கிடையே நிகழ்கின்ற பொழுது அது காதலுக்குரிய நுழைவாயிலாக

அமைகின்றது. கலித்தொகையில் தலைமக்கள் இருவரும் புகுமுகம் புரிதல், தலைவன் மட்டும் புகுமுகம் புரிதல், தலைவி மட்டும் புகுமுகம் புரிதல் என்னும் மூன்று நிலையில் இம்மெய்ப்பாடு காணப்பெறுகின்றது.

## பொறிநுதல் வியர்த்தல்

பொறிநுதல் வியர்த்தல் என்பதற்கு, **அவ்வழி முகம்புக்கு அவனைப் பொருந்திய தலைமகள் உட்கும் நாணும் வந்துழி வரும் நுதல் வியர்ப்பு**[4] என இளம்பூரணரும் **தலைமகன் தன்னை நோக்கியவழி உட்கும் நாணும் ஒருங்கு வந்தடைதலின் வியர்பொறித்த நுதலளாதலும்**[5] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

தலைவி தன் உள்ள விருப்பத்தை தலைவனின் முகம் கண்டு புன்னகைத்து வெளிப்படுத்துகின்றாள். இதன்மூலம் தலைவியும் தன்னை விரும்புகின்றாள் என்பதை அறிந்த தலைவன் மகிழ்ச்சியில் திளைப்பான். அதனைக் கண்ட தலைவியின் உள்ளத்தில் காதல் வெள்ளம் கரைபுரண்டு ஓடும். தலைவனின் பார்வைக்கு எதிர் பார்வை பார்த்த தலைவிக்கு நாணம் ஏற்படுகின்றது. அவளது உள்ளம் காதலால் போராட நெற்றியில் வியர்வைத் துளிகள் தோன்றுகின்றன. இதுவே பொறிநுதல் வியர்த்தல் என்னும் மெய்ப்பாடாகும்.

இம்மெய்ப்பாடானது கலித்தொகையில் ஒருபாடலில் மட்டுமே காணப்பெறுகின்றது. பாலைக்கலியில் தலைவன் ஒருவன் தலைவியைப் பார்த்துக் கொண்டே இருந்தான். அவனின் காதல் பார்வையின் வீச்சைத் தாங்காமல் தலைவியின் நெற்றியில் வியர்வை அரும்ப, தலைவன் அதைத் துடைத்தமை பாடப் பெற்றுள்ளது. (கலித்.4:18-19)

## நகுநய மறைத்தல்

நகுநய மறைத்தல் என்பதற்கு, **அதன் பின்னர்த் தலைமகன் கூறுவன கேட்டு நகை வந்துழி நயத்தலாகிய விருப்பத்தினைப் புலனாகாமை மறைத்தல்**[6] என இளம்பூரணரும் **அதன் பின்னர்த் தலைமகன்கட்டோன்றிய குறிப்புகளான்**

**அதற்கேதுவாகிய நயனுடைமை மனத்திற் பிறந்தவழியும் நகாது நிற்றலும்**[7] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

தலைவனைக் கண்டு புகுமுகம் புக்கு, பொறிநுதல் வியர்க்க நின்ற தலைவி அவன் கூறுவன கேட்டோ, அவன்பால் தோன்றும் காதல் குறிப்பினை அறிந்தோ தன் உள்ளக் குறிப்பைப் புலப்படுத்த நகை வந்துழி அதனை அவனுக்குப் புலனாகாமல் மறைப்பாள். சிரிக்காதவள் போல் காட்டிக் கொள்வாள். இதுவே நகுநய மறைத்தல் என்னும் மெய்ப்பாடாகும். இது உள்ள மகிழ்ச்சியின் வெளிப்பாடு எனலாம். காதலின் முதல் நிலையில் உள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்துவது சங்க காலத் தலைவிக்கு இயல்பானது அல்ல.

தலைவி ஒருத்தி தோழிகளுடன் ஒரு சேரக் கூடி விளையாடும் போது பல்லின் நுனி தோன்றாதவாறு முறுவல் செய்ததையும் அதனைப் பிறர் அறியா வண்ணம் மறைத்ததையும்,

**“ஒள்நுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்,**
**முள்நுனை தோன்றாமை முறுவல் கொண்டு அடக்கி, தன்**
**கண்ணினும் முகத்தினும் நகுபவள்” (கலித்.142:6-8)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இவ்வூரிடம் தவிர பிற பாடல்களில் தலைவி நகுதலை மறைத்தற்கான மெய்ப்பாடு காணப்பெறவில்லை.

## சிதைவு பிறர்க்கின்மை

சிதைவு பிறர்க்கின்மை என்பதற்கு, **தன் மனனழிவு பிறர்க்குப் புலனாகாமை நிற்றல்**[8] என இளம்பூரணரும் **அங்ஙனம் நகுநயம் மறைத்தவழியும் உள்ளஞ் சிதைந்து நிறையழியுமாகலின் அச்சிதைவு புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினை நிறுத்தலும்**[9] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

புகுமுகம் புக்கு, பொறிநுதல் வியர்த்து, நகுநயம் மறைத்த தலைவி தன் காதல் வேட்கையால் உள்ளம் சிதைவாள், நிறையழிவாள். எனினும் தன் உள்ளச்

சிதைவைப் பிறர்க்கு வெளிப்படுத்தாமல் மறைக்க முயல்வாள். இத்தகு சிதைவு பிறர்க்கின்மை என்னும் மெய்ப்பாடு கலித்தொகையில் இடம்பெறவில்லை.

## வேட்கை என்னும் இரண்டாம் நிலைக்கண் நிகழும் மெய்ப்பாடுகள்

இயற்கைப் புணர்ச்சியால் தலைவன் உள்ளத்தில் தலைவியும் தலைவியின் உள்ளத்தில் தலைவனும் இடம்பெறுகின்றனர். ஒருவர் உள்ளத்தை மற்றொருவர் அவாவுகின்றனர். கண்களால் காதல் உணர்வுகளைப் பரிமாறிக் கொண்ட பின் தலைவனை அடைய வேண்டும் என்ற வேட்கை தலைவிக்கு எழுகின்றது. ஆனால் அவ்வேட்கை மிகுதியினை வாய்விட்டுத் தலைவனிடம் ஒரு நாளும் கூறாத தலைவி அதனை மெய்ப்பாடுகளின் வழித் தலைவன் அறியுமாறு புலப்படுத்துவாள். அதனால் தலைவியிடம்,

**“கூழை விரித்தல், காதொன்று களைதல்,**
**ஊழணி தைவரல், உடைபெயர்த்து உடுத்தலொடு**
**கெழீஇய நான்கே இரண்டென மொழிப”  (தொல்.நூ.1208)**

என்னும் நான்கு மெய்ப்பாடுகள் தோன்றுமெனத் தொல்காப்பியர் கூறுகின்றார்.

### கூழைவிரித்தல்

கூழை விரித்தல் என்பதற்கு, **மேல் நகுநய மறைத்தாள் காதன்மேல் வேட்கை செல்லுமாயின் வாளாது நிற்றலாற்றாது மயிரினைக் குலைத்தல்**[10] என இளம்பூரணரும் **மெய்யு மெய்யுந் தீண்டியவழி மெல்லியன் மகளிருக்கு வரும் வேறுபாடு நான்கனுள் முதற்கண்ண தெனப்படும்; என்னை? தன்னுள்ளத்தில் நிகழ்ந்த வேறுபாட்டினை அக்காலத்துத் தலைமகள் நிறையுடையளாகலாற் கரந்தொழுகுதற்பாலல்லளே; அங்ஙனங் கரங்குங்கால் தன்வயத்ததாகிய உடம்புபற்றி வரும் வேறுபாட்டினைத் தாங்கும்; அங்ஙனந் தாங்குங்கால் உடம்பொடு தொடர்புடையவாகி வேறுபட்ட தலைமயிரினது முடி உள்ள நெகிழ்ச்சியானே தன்வயத்த தன்றி நெகிழும் ஆகலின் இது முற்கூறப்பட்டது. பிற சுவை பற்றியும் உலகினுண் மயிர்க்கு வந்த**

**வேறுபாட்டினைக் கூறுப; என்னை? ஒன்றன் மதுரச்சுவைக்கு அதிசயங் கூறுவார் மயிரினை செவ்வனின்றன வென்பது போலக் கொள்க. அக்கூழை விரித்தற்கு ஏதுவாயினாள் இவளாகலின் அதனைச் சினைவினையானன்றி முதல்வினையாற் கூறினானென்பது**[11] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

இதன்வழி தலைவனைக் கண்டு காதல் கொண்ட தலைவியின் உள்ளத்தில் தலைவனை அடைய வேண்டும் என்னும் வேட்கை எழுகின்றது. அவ்வுள்ள வேட்கையைப் புலப்படுத்தும் மெய்ப்பாடுகளுள் ஒன்று தான் கூழை விரித்தல் என்னும் மெய்ப்பாடு என்பது புலனாகும்.

கூந்தலின் மயிர்க்கால்கள் உணர்வு மிக்கனவாகும். காதல் வேட்கையால் தலைவியின் உள்ளம் நெகிழ்வடைகின்றது. வேட்கை மிகுதியாலும் உள்ள நெகிழ்வாலும் உணர்வுமிக்க மயிர்க் கால்கள் கொண்ட தலைவியின் கூந்தல் நெகிழ்வு அடைகின்றது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடானது நான்கு பாடல்களில் (கலித்.27:4-6, 54:5-6, 71:19-20, 92:42-44) இடம்பெற்றுள்ளது. புணர்ச்சிக் களிப்பிலே திளைத்த மகளிரின் கூந்தல் விரிந்து கிடந்ததைப் போல ஆற்றங்கரை மணலானது இருக்கின்றது என்பதன் வழி இம்மெய்ப்பாடு சுட்டப்பெறுகிறது. இதனை,

**“காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப்போல், கழல்குபு**
**தாதொடும் தளிரொடும், தண் அறல் தகைபெற”** **(கலித்.27:5-6)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மேலும் புணர்ச்சியின் போது பொன்னால் செய்த மகரமீன் வாயினது வடிவிலான தலைக் கோலம் அணிந்த பூவின் மணம் நாறும் கரிய கூந்தலை விரிக்காதவாறு தலைவன் பற்றியமை (கலித்.54:5-8) அடர்ந்த கூந்தலையுடைய மகளிருடன் புணர்ச்சியால் குழைந்து வீழ்ந்த கூந்தலில் தலைவன் தூங்கியமை தலைவனைத் தலைவி நிந்திக்கும் போது (கலித்.71:19-20) என்னும் இடங்களில் கூழைவிரித்தல் என்னும் மெய்ப்பாடானது சுட்டப்பெற்றுள்ளது.

## காதொன்று களைதல்

காதொன்று களைதல் என்பதற்கு, **காதிலணிந்த தொன்றை விழப்பண்ணி யதனைத் தேடுகின்றார் போல நிற்றல்**[12] என இளம்பூரணரும் **உறுப்பிடைப் பூட்டுறப் புனையாது பெய்து வைத்தனவாதலால் தோடு முதலாயின எளிதின் வீழ்வனவாயின; மற்றவை வீழ்தற்கு ஏதுவாய் நெகிழ்ச்சி நிரம்பத் தோன்றாது இடைநிகர்த்ததாகலின் ஒன்று நிற்ப வொன்று வீழ்தலென்றானென்பது. இது கூழைபோலாது ஊறுணர்வுடைய உறுப்பாகலின் காதின் வேறுபாட்டினைக் கூழை வேறுபாட்டின்பின் வைத்தான்; என்னை? கூழையிற் காது தனக்கு உறவுடைமையின்**[13] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர்.

தலைவி தான் அணிந்திருக்கும் காது அணிகளுள் ஒன்றைக் கைகளால் கழற்றுவது போல முற்படுவாள். தன்னை அறியாமல் கைகளால் நிகழும் இச்செயலால் தலைவியின் வேட்கை மிகுதியினைத் தலைவன் அறிந்து கொள்வான். இதுவே காதொன்று களைதல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் காதொன்று களைதல் என்னும் மெய்ப்பாடு இடம்பெறவில்லை.

## ஊழணி தைவரல்

ஊழணி தைவரல் என்பதற்கு, **முறைமுறையாக அணிந்தவணியைத் தைவருதல் என்றவாறு**[14] என இளம்பூரணரும் **அக்கூழையுந் தோடும் போலப் பெய்யப்படு முறைமையவாகிய வளைகளை முன்கைமேல் இறுகச் செறித்தலும் விரற் செறியினைத் திருத்தலும் முதலாயின. இவை தோடு போலச் செறிவில்லன அன்மையின் அவற்றுப்பின் வைத்தான்**[15] எனப் பேராசிரியரும் விளக்குகின்றனர்.

தன் உள்ளத்து வேட்கையினைத் தலைவனுக்கு உணர்த்த வேண்டி தலைவியிடம் ஊழணி தைவரல் என்னும் மெய்ப்பாடு தோன்றுவதுண்டு. தலைவி தான் அணிந்துள்ள செறிவளை முதலியவற்றைத் தலைவன் முன்னிலையில் நழுவாது செறிப்பது போலத் தழுவுதல் செய்வாள். இதன்மூலம் தலைவியின் உள்ளத்து

வேட்கையினைத் தலைவன் அறிந்து கொள்வான். இவ்வூழணி தைவரல் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் இடம்பெறவில்லை.

## உடைபெயர்த்து உடுத்தல்

உடைபெயர்த்து உடுத்தல் என்பதற்கு, **ஆடையைக் குலைத்துடுத்தல்**[16] என இளம்பூரணரும் **உடுத்த உடையினைப் பலகாலும் அழித்துடுத்தல்; அது கழறொடி போலாது செறிவுடைமையின் அவ்வுடை நெகிழ்ச்சியைத் தொடி நெகிழ்ச்சிக்குப் பின் வைத்தானென்பது**[17] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

தலைவனை விரும்பும் தலைவி தன் உள்ளத்து வேட்கையால் உடுத்த உடையினைச் சரிசெய்வதும் கலைத்து மீண்டும் உடுத்துவதும் உடைபெயர்த்து உடுத்தல் என்னும் மெய்ப்பாடாகும். **'நெடிது நிமிர்ந்தன துகிலும் பன்முறை' என்னும் இலக்கண விளக்க பழம்பாடலடியை இம்மெய்ப்பாட்டிற்குச் சான்று காட்டுவர் உரையாசிரியர்கள்"**[18] என்பர் மு.பொன்னுச்சாமி. கலித்தொகையில் உடைபெயர்த்து உடுத்தல் என்னும் மெய்ப்பாடு பற்றிய குறிப்புக் காணப்பெறவில்லை.

## உணர்ச்சி விருப்பத்தைப் புலப்படுத்தும் மெய்ப்பாடுகள்

வேட்கை மிக்குற்ற தலைமக்கள் தனியிடத்தில் சந்திக்கின்றனர். கரைபுரண்டோடும் காதல் வெள்ளத்தில் திளைக்கும் காதலர்கள் இரவென்றும் பகலென்றும் பாராது குறியிடத்தில் சந்திக்கின்றனர். அந்நிலையில் புணர்ச்சிக் குறிப்பினளாய தலைவிக்கு,

**"அல்குல் தைவரல், அணிந்தவை திருத்தல்**
**இல்வலி யுறுத்தல் இருகையும் எடுத்தலொடு**
**சொல்லிய நான்கே மூன்றென மொழிப" (தொல்.நூ.1209)**

என நான்கு மெய்ப்பாடுகள் தோன்றும் என்கிறார் தொல்காப்பியர்.

## அல்குல் தைவரல்

காமத்தால் துடிக்கும் தலைவியிடம் தோன்றுவதே அல்குல் தைவரல் என்னும் மெய்ப்பாடாகும். தன் உள்ளத்துப் புணர்வு வேட்கையைத் தலைவனுக்குப் புலப்படுத்த வேண்டி இம்மெய்ப்பாடானது தலைவியிடம் தோன்றுகின்றது. இம்மெய்ப்பாடானது கலித்தொகையில் காணப்பெறவில்லை.

## அணிந்தவை திருத்தல்

அணிந்தவை திருத்தல் என்னும் மெய்ப்பாடு பற்றி, **அணிகலன்களை அதனைப் பேணும் மதிப்பு உள்வழித் திருத்துதல்**[19] என இளம்பூரணரும் **கடி சூத்திர முதலாயின திருத்தல் அ∴து உடைஞெகிழ்ச்சி போலப் போற்றிச் செய்தாகலான் அதனை அல்குல் தைவரலின் பின் வைத்தான்**[20] எனப் பேராசிரியரும் உரைப்பர்.

கலித்தொகையில் ஒரு பாடலில் மட்டுமே (கலித்.4:13-15) இம்மெய்ப்பாடு காணப்பெறுகிறது. புணர்வு வேட்கைமிக்க தலைவன் தலைவியின் அருகில் நெருங்கி நின்று அவளது வளையலையும் பிற அணிகலன்களையும் இட்டும் தொட்டும் இன்னபிற செய்து கொண்டும் இருப்பான். இச்செயல்களைக் கண்டு மனதில் உவகைப் பெருக்கடையும் தலைவி, அவன் செயல்களை விரும்பாதவள் போன்று தன் அணிகளை அடிக்கடி சரிசெய்து கொள்வாள். இதுவே அணிந்தவை திருத்தல் என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடு,

**"முள்உறழ் முளைஎயிற்று அமிழ்து ஊறும் தீ நீரைக்**
**கள்ளினும் மகிழ் செய்யும் என உரைத்தும் அமையார், என்**
**ஒள் இழை திருத்துவர், காதலர்"        (கலித்.4:13-15)**

என்று பாலைக்கலியில் பெருங்கடுங்கோவினால் பாடப்பெற்றுள்ளது.

## இல்வலியுறுத்தல்

இல்வலியுறுத்தல் என்பதற்கு, **புணர்ச்சியை வேண்டாதாள் போல்வதோர் வன்மை படைத்துக் கொண்டு செய்தல்; என்னை? இல்லாத வலியை மிகுத்தலென்றமையின்**

**அப்பொருட்டாயிற்று. அல்குல் தைவரலும் அணிந்தவை திருத்தலுங் தன் வலியின்மை காட்டவும் வலிதோற்றிக் கொண்டு செல்வதாகலின் அதனை இல்வலியுறுத்தலென்று மூன்றா முறைமைக்கண் வைத்தானென்பது; இனி, இற்பித்தலான தன் வலி தோற்றுவதெனவுஞ் சொல்லுப; அஃதாவது முற்பிறந்தவற்றிற்கு முன்னே கூறினென்பது**[21] எனப் பேராசிரியர் பொருளுரைப்பர்.

புணர்வு வேட்கையால் தளரும் தன்உளநிலையைத் தலைவன் அறியாதவாறு புணர்ச்சியை விரும்பாதவள் போல் தலைவி கூறுதல் இல்வலியுறுத்தல் எனும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இல்வலியுறுத்தல் என்னும் மெய்ப்பாடானது ஆறு இடங்களில் (கலித்.108:8-9, 108:45-51, 110:20-23, 112:1-4, 113:8-10, 116:13-16) இடம்பெற்றுள்ளது.

தலைவனும் தலைவியும் உள்ளத்தால் ஒன்றுபட்டவர்கள், அன்புடைய நெஞ்சம் உடையவர்கள், இருவரும் ஒருவரையொருவர் நெருங்கி இன்பம் துய்க்க வேண்டும் என்னும் ஆசை உடையவர்கள். புணர்ச்சி வேட்கையால் தலைவியின் உள்ளம் நிறைந்தாலும் நாணும் மடனும் உடைய அவள் விருப்பத்தை வெளியே கூறமாட்டாள். எனவே அவள் சொல்லளவில் மாறுபட்டு புணர்ச்சியை விரும்பாதவள் போலப் பேசுவாள். அவ்வாறு பேசினாலும் உள்ளத்தில் புணர்ச்சி எண்ணம் அலைமோதிக் கொண்டிருத்தலை,

> **"யார் இவன், என்னை விலக்குவான்; நீர்உளர்**
> **பூந் தாமரைப் போது தந்த விரவுத் தார்க்**
> **கல்லாப் பொதுவனை; நீ மாறு; நின்னொடு**
> **சொல்லல் ஓம்பு என்றார், எமர்"** **(கலித்.112:1-4)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவனோடு உண்டான தொடர்பையறிந்த தலைவியின் சுற்றத்தார் எச்சரித்திருந்தனர். அதனால் தலைவனிடம் இல்வலியுறுத்திக் கூறுகின்றாள் தலைவி. ஆனால் இறுதியாக தலைவனோடு கூட்டத்திற்கு

உடன்படுகின்றாள். சுற்றத்தாரை முன்னிறுத்தி தலைவி மறுத்துக் கூறினாலும் அவளது உள்ளம் காமத்தின் கொள்கலமாக இருப்பதாலேயே இறுதியில் தலைவனோடு புணர்வின்பம் துய்க்க உடன்படுகின்றாள்.

முல்லைக்கலியில் தலைவனின் புறத்தொழுக்கம் காரணமாக ஊடல் கொண்டாள் தலைவி. தலைவன் வரும் போது அவனை விரும்பாதவள் போல அளைமாறித் திரிகின்றது எங்கள் குலத்திற்குத் தீதாகும். எனது சுற்றத்தார்கள் ஆயர்கள் ஆனால் காயாம்பூவையும் துவரூட்டின கரிய ஆடையும் உடைய நீ ஆயனல்லன். எனவே என்னிடம் பேசாதே எனத் தலைவி கூறுகின்றாள் (கலித்.108:8-9) ஆனால் தலைவன் தொடர்ந்து உரையாடும் போது

**“மா மருண்டன்ன மழைக்கண் சிற்றாய்த்தியர்**
**நீ மருட்டும் சொற்கண் மருள்வார்க்கு உரை, அவை;**
**ஆ முனியா ஏறு போல், வைகல் பதின்மரைக்**
**காமுற்றுச் செல்வாய்; ஓர் கட்குத்திக் கள்வனை;**
**நீ எவன் செய்தி, பிறர்க்கு?”                (கலித்.108:46-50)**

என்றுரைக்கின்றாள். தலைவனை வெறுப்பவள் போல தலைவி கூறினாலும் அதில் இல்வலியுறுத்தல் காணப்பெறுகின்றது.

வெண்ணெய் விற்கச் செல்லும் தலைவியைத் தலைவன் வழியிடைக் கண்டு நிறுத்துகிறான். அதற்குத் தலைவி என்னோடு பேசும் போது தொட்டுப் பேசினாய் இதனால் புணர்ச்சிக்கு எளியவள் என்று நினைத்தாயோ என்றவள். உன்னுடன் உரையாடுவதைச் சுற்றத்தார்கள் காண நேரிடும். எனவே நாளை கன்றுடன் நான் மேய்ச்சலுக்கு வருவேன் எனவே அவ்விடம் வா எனக் கூறிச் செல்வது (கலித்.110.3-6) இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

இல்வலியுறுத்தல் என்னும் மெய்ப்பாடானது முல்லைநில மகளிரிடமே காணப்பெறுகிறது. களவுக் காலத்தில் ஏற்படுகின்ற சிறு சிறு ஊடலின் போதும்

தலைவனோடு கொண்ட உறவை அறிந்த சுற்றத்தார் தலைவியைக் கண்டிக்கும் போதும் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது.

## இருகையுமெடுத்தல்

இருகையுமெடுத்தல் என்பதற்கு, **அவ்வழி மறுத்த வாய்ப்பாட்டாற் கூறினும் இரண்டு கையினையும் பிறிதோர் காரணம் பற்றிக் கிளர்த்தல். தலைமக்கள் முன்னர்ப் பெண்டிர் கைகிளர்த்தாராதலாற் புணர்ச்சிக் கொருப்பட்ட வுள்ளத்தாள் கிளர்ந்துமென்க இதனாற் பயன் நாண்நீங்கல்**[22] என இளம்பூரணரும் **அங்ஙனம் படைத்துக்கொண்ட வலியானுந் தடுக்கப்படாது நிறையழிதலிற் கைகள் தாமே முயங்கல் விருப்பத்தான் எழுவன போல்வதோர் குறிப்பு. இந்நான்கும் மேலனவுமெனப் பன்னிரண்டு பகுதியும் புணர்ச்சிக்கு முன் நிகழ்வனவாகும்**[23] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

புணர்ச்சி வேட்கையை உடைய தலைவி தன் இரு கைகளாலும் தலைவனைத் தழுவவோ அல்லது அணைத்துக் கொள்ளவோ செய்வாள். அது இரு கையுமெடுத்தல் என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடானது நான்கு இடங்களில் (கலித். 39:3-5, 128:10-13, 33:7-8, 92:39-41) இடம்பெற்றுள்ளது. இம்மெய்ப்பாடு குறித்துச் சோமசுந்தர பாரதியார் தன் மெய்தொட்டுப் பயிலும் தலைவன் தழுவக் குழைபவளுக்கு, முன் தான் கரந்த காதல் கைம்மிக, உடல் சிந்தை வசமாவதால், அவள் கருதாமலே கைகள் தாமே அவனைத் தழுவுவதியல்பு என விளக்கமளிக்கின்றார். கலித்தொகையில் தலைவியின் கைகள் தானாக அனைத்துக் கொள்ள எழுந்ததாக எந்தக் குறிப்பும் காணப்பெறவில்லை. ஆனால் கருத்து வேறுபாடு கொண்ட தலைவி தலைவனுடன் ஊடியிருந்தாள். அப்போது வண்டினம் மொய்க்க அதைக் கண்டு கலங்கியவள் அவ்வூடலை மறந்து தானே சென்று தலைவனை அணைத்துக் கொண்டதை,

**“ஒருத்தி, புலவியால் புல்லாதிருந்தாள், அலவுற்று**

**வண்டினம் ஆர்ப்ப, இடைவிட்டுக் காதலன்**

**தண்தார் அகலம் புகும்” (கலித்.92:39-41)**

என்னும் மருதக்கலிப்பாடல் குறிப்பிடுகின்றது. இளவேனில் காலமானது வந்தற்கு அறிகுறியாக குளங்களிலே நீரானது நிரம்பக் காணப்படுகின்றது. குளங்களிலே புதுமலர்களின் நிழல் நீரினுள்ளே தோன்றிற்று. அதனை மலர் என எண்ணிய வண்டுகள் நீரைச் சுற்றி ஆரவாரம் செய்தன. மரங்கள் எல்லாம் மலர்களால் நிரம்பிக் காணப்பட்டன. அத்தகைய சூழலில் காதலரைக் கூடியிருக்கும் மகளிர் அணைத்த கையினை நெகிழ விடாமல் பிண்ணிக் கிடந்ததை,

**“மணிபோல அரும்பு ஊழ்த்து மரம் எல்லாம் மலர் வேய,**

**காதலர்ப் புணர்ந்தவர் கவவுக் கை நெகிழாது,**

**தாது அவிழ் வேனிலோ வந்தன்று” (கலித்.33:6-8)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மேலும் உன்னைப் பிரிய மாட்டேன் எனக் கூறிய தலைவனிடம் எனது நலத்தை திரும்ப என்னிடமே தந்துவிடு எனத் தலைவி தலைவனை வளைத்துப் பிடித்துக் கொண்டாள் (கலித்.128:10-13) என்பதும் இம்மெய்ப்பாட்டிற்குரியதே. தொல்காப்பியரால் களவுக்குரியதாகச் சொல்லப்பட்ட இம்மெய்ப்பாடு கற்புக்குரிய மெய்ப்பாடாகக் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளமை சுட்டத்தக்கது.

## புணர்ச்சிக்குப் பின் களவு வெளிப்படும் போது நிகழும் மெய்ப்பாடுகள்

அகத்துறையில் காதல் இன்பத்தைத் துய்ப்பதில் களவு கற்பு என்ற இருவேறு நிலைகள் உள்ளன. தலைவனும் தலைவியும் விதியின் வசத்தால் முன்பின் அறியாதவர்களாக இருந்தாலும் ஓரிடத்தில் சந்தித்துக் காதல் கொண்டு கலந்து இன்பம் துய்க்கின்றனர். இதுவே களவு வாழ்க்கை ஆகும். புணர்ச்சிக்குப் பின் களவு

வெளிப்படும் போது நிகழும் மெய்ப்பாடுகளே தொல்காப்பியர் சுட்டும் நான்காம் நிலை அவத்தைகளாகும்.

தலைவன், தலைவியரிடையே நிகழும் புணர்ச்சிக்குப் பின் களவுக் காதல் பெற்றோருக்கும் உற்றாருக்கும் ஊராருக்கும் வெளிப்படும் போது தோன்றும் மெய்ப்பாடுகளைத் தொல்காப்பியர்,

**"பாராட்டெடுத்தல், மடந்தப உரைத்தல்**
**ஈரமில் கூற்றம் ஏற்று அலர் நாணல்,**
**கொடுப்பவை கோடல், உளப்படத் தொகைஇ**
**எடுத்த நான்கே நான்கென மொழிப"** **(தொல்.நூ.1210)**

என்று குறிப்பிடுவர். தன் உள்ளத்தில் பெருகும் உணர்ச்சி வேட்கையைத் தலைமகள் மெய்ப்பாட்டின் வாயிலாகத் தலைவனுக்குப் புலப்படுத்துவாள். இதனால் தலைவியிடம் தோன்றும் இந்நான்கு மெய்ப்பாடுகளும் சிறப்பிடம் பெறுகின்றன.

## பாராட்டெடுத்தல்

பாராட்டெடுத்தல் என்பதற்கு, **தலைமகன் நின்ற நிலையுங் கூறிய கூற்றையும் தனித்த வழியும் எடுத்து மொழிதல்**[24] என இளம்பூரணரும் **புணர்ச்சி நிகழ்ந்த பின்னர்த் தலைமகனை இயற்பட நினைவுங் குறிப்பும்; இது பாராட்டென்னாது எடுத்தலென்றதனால் அதனை உள்ளமெடுத்தன் மேற்கொள்க இது தலைமகற்கும் ஒக்கும்**[25] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

புணர்ச்சிக்குப் பின் தலைமக்களுள் தலைவன் தலைவியையோ, தலைவி தலைவனையோ உள்ளம் மகிழ்ந்து பாராட்டுதல் இயல்பான ஒன்றாகும். தலைமக்களின் அழகும் அன்பின் பெருமையும் நல்லியல்புகளும் பாராட்டுதலுக்குக் காரணமாகின்றன. காதல் வயப்பட்ட நிலையில் தோன்றும் காதலரின் பாராட்டு மொழிகள் அவர்தம் அன்பின் பெருமையைப் புலப்படுத்துவதோடு மனமகிழ்ச்சியையும் கொடுக்கின்றன.

கலித்தொகையில் தலைவியைவிடத் தலைவன், தலைவியைப் பாராட்டிக் கூறும் இடங்களே மிகுதியாக உள்ளன.




## தலைவன் தலைவியைப் பாராட்டுதல்

தலைவன் தலைவியின் கண், நுதல், பல், தோள், கூந்தல், முலை, அல்குல் என்பன போன்ற உறுப்பு நலன்களைப் பாராட்டுகின்றான். இதில் தோள் பெரிதும் பாராட்டப்பெறுகிறது. மூங்கிலை ஒத்த மென்மையான தோள்கள் என்றும் மூங்கில் போன்ற திரண்ட தோள்கள் என்றும் தலைவன் பாராட்டுவதை,

**‘‘முல்லை முகையும் முருந்தும் நிரைத்தன்ன**
**பல்லும், பணைத் தோளும், பேர் அமர் உண்கண்ணும்” (கலித்.108.15-16)**

**“வார்உறு வணர் ஐம்பால், வணங்குஇறை நெடுமென்தோள்” (கலித்.58.1)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

தலைவியின் கண்களைத் தலைவன் அழகான கருநீல மலரைப் போன்ற மைதீட்டிய கண் எனவும் அகன்ற கண் எனவும் மான் போன்ற மருண்ட பார்வையை உடையவள் எனவும் பலவாறாகப் பாராட்டுகின்றான். இதனை,

**“துணைமலர் எழில் நீலத்து ஏந்துஎழில் மலர் உண்கண்’’ (கலித்.14:2)**

**“புரிஅவிழ் நறுநீலம், புகை உண்கண்’’ (கலித்.15:20)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

தலைவியின் பற்கள் முல்லை மொட்டுப் போன்று ஒழுங்கான வரிசையுடையன என்றும் இதழ்களிடையே அமிழ்தத்தைப் போன்று வாயூறும் பல்வரிசையினை உடையவள் எனவும் தலைவன் பாராட்டுவதை,

**"மணைமௌவல் முகைஅன்ன மாவீழ் வார் நிரைவெண்பல்" (கலித்.14:3)**

**"நறுமுல்லை நேர்முகை ஒப்ப நிரைத்த**

**செறி முறை பாராட்டினாய்" (கலித்.22:9-10)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

தலைவியின் நெற்றியினை ஒளிவீசும் பிறையுடன் ஒப்பிட்ட தலைவன் சிறிய நுதலை,

**"மணம்நாறு நறுநுதல்" (கலித்.14:4)**

**"சுடர் கொண்ட நறுநுதல்" (கலித்.60:1)**

என்று வருணிக்கின்றான். ஐந்துவகையாகப் பிரித்துப் பின்னிய மணம் கமழும் கரியது எனக் கூந்தலும் அகன்ற அல்குலும் தலைவனால் பாராட்டப்படுவதை,

**"நெய்இடை நீவி மணிஒளி விட்டன்ன**

**ஐவகை பாராட்டினாய்" (கலித்.22:12-13)**

**"மாரி வீழ் இருங்கூந்தல்" (கலித்.14:4)**

**"அகன்ற அல்குல்" (கலித்.14:5)**

**"கோடு உயர் அகல் அல்குல்,**

**கொடி புரை நுசப்பினாள்" (கலித்.1:6-7)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். தலைவியின் பேச்சிற்குக் கிளியின் மொழியினையும் அவளின் சாயலுக்கு மயிலின் சாயலையும் நிறத்திற்கு மாந்தளிரினையும் அவளது இளைய முலைகளுக்கு தாமரை மொட்டினையும்

தலைவியின் உடலுக்கு மெல்லிய கொத்து நீங்காத கொடியையும் உவமித்துப் பாராட்டுகின்றான். இதனை,

**“மயில் எருத்து வண்ணத்து மாயோய்!” (கலித்.108:38)**

**“கொய் தளிர் மேனி” (கலித்.108:53-54)**

**“அலர் முலை ஆகத்து” (கலித்.14:5)**

**“பின்னொடு கெழீஇய தடஅரவு அல்குல்” (கலித்.125:17)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

## தலைவனைத் தலைவி பாராட்டுதல்

தலைவி தலைவனின் குணநலன், வீரம், பண்பு ஆகியவற்றைப் பாராட்டும் நிலையில் இம்மெய்ப்பாடு வெளிப்படுகின்றது. தலைவன் போரிலே பகை அரசனைக் கொன்று அவன் நாட்டைக் கைப்பற்றி களிற்றின் மேலேறி அமர்ந்து வரும் அழகையும், பகை நாட்டை வென்று குதிரையின் மேலமர்ந்து வரும் அழகையும், பகையை வென்று திறையைப் பெற்றுப் பாய்ந்து வரும் தேர் மேலேறி வரும் தலைமைச் சிறப்புடைய வீரத்தால் பிறந்த அழகையும் பாராட்டுகின்றாள். மேலும்

**“மாறுகொண்டு ஆற்றார் எனினும், பிறர்குற்றம்**
**கூறுதல் தேற்றாதோன் குன்று” (கலித்.43.18-19)**

என்னும் பாடலடிகளில் வறுமையால் வாடியோர் வந்து தன் இல்லாமையை தலைவனிடம் கூறினால் அவர்தம் இல்லாமையைப் போக்கி நிறைவுடையவராக ஆக்குபவன் எனத் தலைவி புகழ்வதை அறியமுடிகின்றது.

இன்றைய காலகட்டத்தில் ஒரு சிறிய முயற்சிக்குக் கூடப் பாராட்டுதல் என்பது இன்றியமையாத ஒன்றாக மாறிவிட்டது. யார், யாரை வேண்டுமானாலும் அவர்களின் செயலையோ, அழகையோ, நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ பாராட்டலாம் என்பது இன்றைய நிலையாகும்.

## மடந்தப உரைத்தல்

மடந்தப உரைத்தல் என்பதற்கு, **பெண்டிரது இயல்பாகிய மடப்பங் கெடச் சில கூறுதல். அது தலைமகன் கூற்று நிகழும்வழி யதற்கு மாற்றங் கொடுத்தலன்றித் தன் வேட்கை தோன்றக் கூறுஞ் சொல்**[26] என இளம்பூரணரும் **விளையாடும் பருவத்து நிகழ்ந்த அறிமட நீங்கக் காமப் பொருட்கண்ணே சிறிது அறிவு தோன்றுதலும்; உரைத்தலென்றதனால் அக்காலத்துப் பாங்கிக்குச் சில கூற்றுமொழி கூறவும் பெறுமென்பது கொள்க. அவை மேலை யோத்துகளுட் கூறப்பட்டன. மடந்தப உரைத்தற்கு ஏதுவாகிய கருத்து ஈண்டு மெய்ப்பாடெனப்படும்**[27] எனப் பேராசிரியரும் விளக்கம் உரைப்பர்.

தலைவி தன் உள்ளத்து வேட்கையைத் தலைவனிடமோ அல்லது தோழியிடமோ மடம் கெடக் கூறுதலே மடந்தப உரைத்தல் என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடானது கலித்தொகையில் பதினொரு இடங்களில் (கலித். 18:1-3, 23:9-13, 27:11-12, 27:17-18, 28:16-17, 34:10-11, 122:21-22, 131:19-20, 131:29-30, 134:19-22, 137:1-4) பயின்று வந்துள்ளது. தலைவன் தன்னைப் பிரிந்ததால் தன்னிடம் ஏற்பட்ட உணர்வுகளைத் தலைவி,

**“வையினர் நலன் உண்டார் வாராமை நினைத்தலின்,**
**கையறு நெஞ்சினேன் கலக்கத்துள் ஆழ்ந்து, ஆங்கே,**
**மையல்கொள் நெஞ்சொடு மயக்கத்தால், மரன் நோக்கி,**
**எவ்வத்தால் இயன்ற போல், இலை கூம்ப” (கலித்.134.19-22)**

என வெளிப்பட உரைப்பதால் இது மடந்தப உரைத்தலாகிறது. தலைவி தன்னை அன்பினால் பிணித்துக்கொண்டவர் பிரிந்து சென்றுவிட்டார். அவர் வருவேன் எனக் கூறிச் சென்ற காலமும் வந்துவிட்டது. ஆனால் அவர் வரவில்லை எனத் தனது மடமைத் தன்மை நீங்க வாய்விட்டுப் புலம்புவதை,

**“அரிதே, தோழி! நாண் நிறுப்பாம் என்று உணர்தல்;**

**பெரிதே காமம்; என் உயிர் தவச் சிறிதே;**

**பலவே யாமம்; பையுளும் உடைய;**

**சிலவே, நம்மோடு உசாவும் அன்றில்”    (கலித்.137.1-4)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

## ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல்

ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல் என்பதற்கு, **ஊராருஞ் சேரியாருங் கூறும் அருளில்லாத கூற்றைக் கேட்டு அலர் ஆயிற்றென நாணுதல்**[28] என இளம்பூரணரும். **அங்ஙனம் அறிமடங்கெடச் சொற்பிறந்தவழி இன்றளவுந் தமராற் கூறப்படாத கடுஞ்சொல் உளவாமன்றே, அவற்றை முனியாது ஏற்றுக்கொண்டு புறத்தார்க்கு இது புலனாங்கொலென்று நாணுதலும்**[29] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

தலைவியைக் கண்ட ஊரார் அவளின் மனதைப் பற்றிய கவலையில்லாமல் ஈரமில்லாத சொற்களைக் கூறுகின்றனர். அதை கேட்ட தலைவி அதற்கு நாணுதல் என்பதே ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல் என்னும் மெய்ப்பாடு இருபத்தியாறு இடங்களில் (கலித். 3:1, 24:15-17, 27:13-14, 33:13-14, 38:20-21, 39:47-49, 44:8-10, 44:11-13, 44:14-16, 47:15-16, 48:14-15, 48:17-19, 52:21, 53:9-10, 53:14-15, 60:28-29, 61:22-25, 76:3-4, 77:16-17, 105:63-65, 118:22-23, 124:5-6, 124:9-10, 124:13-14, 132:23-24, 136:18-19) பயின்று வந்துள்ளது.

ஐந்திணை இலக்கியத்திற்கு அழகு செய்பவர்கள் உள்ளத்திற்கு உரியவராகப் படைத்துள்ள பெண்டுகளாவர். தமிழ்ச் சான்றோர்கள் ஊராரையும் அகத்திணை இலக்கியத்துள் படைத்துள்ளனர். களவு, கற்பு இரண்டிலும் ஊராருக்கு இடமுண்டு அவர்களின் முக்கிய பங்கு அலர் தூற்றுதல் என்றே கூறலாம். இது குறித்து, **ஊரார் என்பது ஆண், பெண் என இருபாலருக்கும் பொதுச் சொல்லாயினும் அகத்திணையில்**

**பெண்டிரையே குறிக்கும் வீட்டகத்துச் செய்திகளை அடுக்களைப் புகை போல நுழைந்து காணும் ஆசையும், கூடியிருந்து முணுமுணுத்துப் பேசும் துணிவும் எப்படியோ பெண் சமுதாயத்திற்குப் புறஞ்சொல் கூறல் என்பது பிறவிக் குணம் போல் அமைந்துவிட்டன**[30] என்கிறார் வ.சுப.மாணிக்கனார்.

ஒரு பெண்ணின் களவொழுக்கம் பற்றி ஊர்மக்கள் வாய்க்குள் பேசிக் கொள்வது அம்பல், வெளிப்படையாகப் பலர் அறியப் பேசுவது அலர் ஆகும்.

தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து சென்று திரும்பி வராத சூழலில் தலைவியின் நலனே ஊரார் அலர் தூற்றக் காரணமாகின்றது. தலைவனது செயலை வெளியே கூறினால் அவனது அருளில்லாத செயலைக் கேட்டு பிறர் தலைவனைப் பழி கூறுதலை ஏற்க முடியாமல் நாணி அதனைத் தலைவி மறைத்தலை,

**"தன் எவ்வம் கூறினும், நீ செய்த அருள் இன்மை**
**என்னையும் மறைத்தாள், என் தோழி அதுகேட்டு,**
**நின்னையான் பிறர் முன்னர்ப் பழி கூறல் தான் நாணி"(கலித்.44.8-10)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

**"இனையள் என்று எடுத்து அரற்றும் அயல் முன்னர், நின் சுனைக்**
**கனைபெயல் நீலம் போல்" (கலித்.48.14-15)**

என்பதில் தலைவி களவு ஒழுக்கம் உடையவள் என ஊரார் அலர் கூறுதல் இடம்பெற்றுள்ளது. மேலும் ஒரு தாய் தன் மகளைச் சிறிது கடிந்துரைக்கின்றாள். அதைக் கண்ட முல்லை நிலப் பெண்கள் இப்பெண்ணுக்கு இத்தலைவனோடு தொடர்பு உண்டு என அலர் தூற்றினர். இதனைக் கேட்ட தலைவி வருத்தப்படவில்லை. மாறாக அலர் தூற்றத் தூற்ற அவளுக்குப் பெரு மகிழ்ச்சியாக இருந்தது. ஊராரின் பேச்சைக் கேட்டு தனது பெற்றோர் அத்தலைவனுக்கே தன்னை மணம் செய்து வைப்பர் என்றும் இதனால் தனது கற்புக்குக் களங்கம் நேராது எனவும் தலைவி கூறுவதை,

**“கண்ணுடைக் கோலள் அலைத்ததற்கு, என்னை**

**மலர் அணி கண்ணிப் பொதுவனோடு எண்ணி,**

**அலர் செய்துவிட்டது இவ் ஊர்” (கலித்.105.63-65)**

என்னும் பாடலடிகள் உரைக்கும்.

இனி அலரைத் தடுக்க முடியாது என்றும் ஊரில் உள்ளோரின் பேச்சினைத் தடை செய்யத் திருமணம் செய்வதே சிறந்தது என்ற எண்ணம் தலைவியிடம் மேலோங்குகிறது. ஆனால் திருமணம் உறுதி செய்தால் களவொழுக்கம் இனி இருக்காது என்பதே தலைவனின் வரைவு நீட்டிப்பிற்கான காரணமாகிறது. ஆனால் தலைவன் ஊர் தூற்றும் அலருக்கு அஞ்சாமல் இருப்பதை,

**“மாணா ஊர்அம்பல் அலரின் அலர்க என,**

**நாணும் நிறையும் நயப்பு இல் பிறப்பு இலி” (கலித்.60.28-29)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மேலும் தலைவியானவள் ஊரார் தனது நிலையை அறியாமல் பழித்துப் பேசுவரே என்ற நாணத்தால் குன்றிப் போகின்றாள்.

சங்ககாலச் சூழலில் தலைவன் தலைவியின் களவு வாழ்க்கையை வெளிக்கொணர அலர் தூற்றல் என்னும் மெய்ப்பாடு பெரிதும் பயன்பட்டது. ஆனால் இன்று ஒருவரின் வளர்ச்சியையோ, முகமலர்ச்சியையோ, வருத்தத்தையோ, கண்டவர்கள் அதைப்பற்றி புறங்கூறுவது என்ற நிலையில் அனைவருக்கும் பொதுவான மெய்ப்பாடாகப் பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளது.

## கொடுப்பவை கோடல்

கொடுப்பவை கோடல் என்பதற்கு, **கண்ணியாயினுந் தழையாயினும் பிறவாயினும் தலைமகன் கொடுத்தவற்றைக் கோடல் மனத்தினான் உரிமை பூண்டானல்லது பிறன் பொருள் வாங்காமையின் இதுவுமோர் மெய்ப்பாடாக ஓதப்பட்டது**[31] என இளம்பூரணரும் **தலைமகனாற் கொடுக்கப்பட்ட தழையுங் கோதையுந் தாருங் கண்ணியுந் தோண் மாலையு முதலாயின கொண்டு கையுறை பாராட்டுதலும்**

**உளப்படத் தொகைஇ எடுத்த நான்கே நான்கென மொழிப - கொடுப்பவை கோடலகப்படத் தொகுத்தோதிய நான்கும் நான்காவது என்றவாறு**[32] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

உள்ளத்தால் ஒன்றிய காதலர்களின் அன்பு வெளிப்பாட்டைப் புலப்படுத்துவது கொடுப்பவை கோடல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் தன் மனம் கவர்ந்த தலைவியைச் சந்திக்கும் போது கையுறையாகத் தருவனவற்றைத் தலைவி உள மகிழ்வோடு ஏற்றுக் கொள்வாள். தனக்கும், தலைவனுக்கும் உள்ள உறவை உலகோர் அறிந்து ஏதேனும் கூறுவர் என்பதைக் கருதாமல் தலைவனோடு தனக்குள்ள அன்பின் ஆழத்தைப் புலப்படுத்த வேண்டி தலைவனின் பரிசை ஏற்றுக்கொள்வாள். முல்லைக்கலியில் தலைவன் தலைவிக்கு பூ கொடுத்ததாக மூன்று இடங்களில் குறிப்புகள் காணப்படுகின்றன.

கலித்தொகையில் முல்லைத் திணையில் மட்டுமே கொடுப்பவை கோடல் என்ற மெய்ப்பாடு மூன்று இடங்களில் (கலித்.105:53-55, 107:6-9, 115:4-6) இடம்பெறுகின்றது. தலைவியின் கூந்தலில் எண்ணெய் மணம் வருவதற்குப் பதிலாக முல்லைப்பூவின் மணம் வந்ததை அறிந்த சுற்றத்தார் கோபம் கொள்கின்றனர். இதில் இரவுக் குறியில் தலைவிக்குத் தலைவன் முல்லைப்பூவினைக் கொடுக்க அதனைத் தலைவி தன் கூந்தலில் சூடிக் கொண்டாள் என்ற குறிப்பு காணப்படுகிறது. மேலும் ஆட்டினத்து ஆயனான தலைவன் முல்லைப் பூவினைச் சூடித் தலைவியைக் காண வருகிறான். அவன் சூடியிருந்த பூவினைப் பெற்று தலைவி தன் கூந்தலில் சூடிக்கொள்வதை,

**“புல்லினத்து ஆயர்மகன் சூடி வந்தது ஓர்**
**முல்லை ஒரு காழும் கண்ணியும், மெல்லியால்!**
**கூந்தலுள் பெய்து முடிந்தேன் மன்”** **(கலித்.115.4-6)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். ஏறுதழுவுதலின் போது தலைவன் சூடியிருந்த முல்லைப் பூவினை ஏறானது தன் கொம்பினாலே எடுத்து வீசியது. அப்பூவானது

தலைவியின் தலையிலே வந்து வீழ்ந்தது. அதைத் தலைவன் தனக்குக் கொடுத்ததாகக் கருதி தலைவி இன்புறுகின்றாள். (கலித்.107.6-9)

கொடுப்பவை கோடல் என்னும் மெய்ப்பாடானது இன்று நாம் யாரேனும் ஒருவரைச் சந்திக்கச் செல்லும் போதோ, ஒருவரின் வீட்டிற்குச் செல்லும் போதோ ஏதேனும் பழங்களோ, இனிப்பு வகைகளோ அல்லது அந்நபருக்கு பிடித்தமான ஒன்றையோ பரிசுப் பொருளாக வாங்கிச் செல்வது என்னும் நிலையில் நமது மரபாக உருப்பெற்றுவிட்டமை குறிப்பிடத்தக்கது.

## இற்செறிக்கப்பட்ட தலைவிபால் நிகழும் மெய்ப்பாடுகள்

களவொழுக்கத்தில் திளைக்கும் காதலர் ஊர் மக்கள் தமது ஒழுக்கத்தை அறிந்து பேசும் அலர் மொழிகளுக்கு அஞ்சமாட்டார்கள். இன்னவளுக்கு இன்னானோடு உறவுண்டு என்று பிறரறியப் பேசும் மொழிகள் பெற்றொருக்கும் ஊராருக்கும் தெரியப்படுத்தும் உறவின் பிணைப்பு மொழிகளேயன்றி பிரிப்பு மொழிகளல்ல. களவின் மேன்மையை ஊராருக்கு அம்பலப்படுத்தும் நன்னோக்கு மொழிகளே அலராவது. ஊரறிந்த உறவிற்கு பெற்றோர்கள் உடன்படுவர். ஆனால் எல்லாப் பெற்றோரும் மகளின் காதலுக்கு இசைவு நல்க மாட்டார்கள். காதலர் தம் இளமைத் துடிப்பால் குடிக்குப் பழி ஏற்படுத்தி விடுவாரோ எனத் தாய் விளிப்புடனேயே இருப்பாள். ஊராரும் சேரியாரும் மூலை முடுக்கெல்லாம் கூடி மகளைப் பற்றிச் சாடையாகவும் நேராகவும் பேசுவதைக் கேட்கும் அன்னையின் உள்ளம் சினத்தால் அனல் கக்குகுகின்றது. ஊரார் கூறுவது உண்மையே என்று நம்பும் தாய் தன்குடிப் பெருமைக்குத் தன் மகள் இழுக்குத் தேடித் தந்தாளே எனக் கொதிக்கின்றாள். வீட்டை விட்டு வெளியே செல்லக் கூடாது எனத் தடுத்து மகளை வீட்டுக் காவலில் வைக்கின்றாள். இதுவே இற்செறிப்பு என்பதாகும்.

வாய்ப்புக் கிட்டிய போதெல்லாம் இரவென்றும் பகலென்றும் பாராது தலைவனைச் சந்தித்த தலைவி அன்னையின் இற்செறிப்புச் செயலால் தனிமையில்

உறைகின்றாள். தலைவனோடு கூட்டம் பெறாமையால் இற்செறிப்புற்ற நிலையில் தலைவியிடம் தோன்றும் மெய்ப்பாடுகளைத்,

**"தெரிந்து உடம்படுதல், திளைப்பு வினைமறுத்தல்,**

**கரந்திடத்து ஒழிதல், கண்டவழி உவத்தலொடு**

**பொருந்திய நான்கே ஐந்தென மொழிப" (தொல்.நூ.1211)**

எனக் கூறுவர் தொல்காப்பியர்.

## தெரிந்துடம்படுதல்

தெரிந்துடம்படுதல் என்பதற்கு, **தலைமகன் கொடுப்பவை கொண்ட தலைமகள் ஆராய்ந்து உடம்படுதல் என்றவாறு. ஆற்றாமை பெருகுகின்ற காதலின் இத்துணையும் மறுத்தவள் உடம்படுதல் என்றார். அவ்வழியுந் தெரிந்துடம்படுதல் என்றமையால் ஆராய்ந்தல்லது புணர்ச்சிக்கு உடன்படாமை கொள்க**[33] என இளம்பூரணரும் **தலைமகனைத் தலைமகள் இவ்வொழுகலாறு நிகழ்ந்தவாற்றைப் பட்டாங் குணராதார் தலைமை செய்தனளிவளெனவுந் தகாத வொழுக்கின ளிவளெனவும் பல்லாற்றானும் இவள் கண்ணே ஏதமிட்டுத் துணிந்துந் துணியாதும் உரைப்பாராகலான், அதற்கு நாணி, இனி யாதுகொல்லோ செயற்பாலதென்று ஆராய்ந்து இவ்வொழுகலாற்றினை அறிவிப் பேங்கொல் அறிவியேங்கொ லெனத் தடுமாறிப் பின்னொரு வகையான் ஆராய்ந்து முழுவதூஉஞ் சொல்லாது தன் குலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பெண்டன்மைக்கும் ஏற்றவகையான் வேண்டுவன தெரிந்து கொண்டு இன்னவாறு பட்டதென்று தோழிக்கு உடம்படுதலுந் தோழியாற் செவிலிக்கு உடம்படுதலுமென இன்னோரன்ன குறிப்பினைத் தெரிந்து உடன்படுதலும்**[34] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

சிவலிங்கனார், **தலைவனால் தழை முதலியன கொடுப்பக் கொண்ட தலைவி அவற்றை ஏற்றுப் புணர்ச்சிக்குப் பலவகையிலும் ஆராய்ந்து உடன்படுவாள் இப்புணர்ச்சி தோழியர் கூட்டம் முதலியவற்றால் நிகழ்வது**[35] என விளக்கம் தருகின்றார்.

கலித்தொகையில் ஐந்து பாடல்களில் இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. (கலித். 108:59-64, 112:21-25, 116:10-17, 62:16-19, 64:27) தலைவன் கூறுவனவற்றை ஆராய்ந்து அவற்றிற்கு உடன்படுதலும் உடன்போக்கு ஒருப்படுதலும் தெரிந்துடம்படுதல் என்னும் மெய்ப்பாடாகும். காதல் கொண்ட நிலையில் தலைவனுடைய பேச்சுகளும் எண்ண அலைகளும் ஒரே மாதிரி இருக்காது. எனவே அவனது கூற்றுகளை நன்கு ஆராய்ந்த பிறகே உடன்படுவாள், அவனது சொற்படி நடக்கவும் செய்வாள்.

## அறத்தொடு நிற்க உடன்படுதல்

தோழி அறத்தொடு நின்று தலைமகளின் களவினை வெளிப்படுத்துவாள். தோழி மட்டுமல்லாது தலைவி தனது களவுக் காதலைப் பற்றி தோழிக்குக் கூறி பின்னர் அறத்தொடு நிற்றலும் உண்டு. தோழிக்கு உரியதாக அறத்தொடு நிற்றலையும் அதனைக் கேட்பாராகத் தாயும் இருப்பதை,

**“முன்னிலை அறன் எனப் படுதல் இருவகைப்**

**புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்” (தொல்.நூ.112:41-42)**

என்பர் தொல்காப்பியர். கலித்தொகையில் தலைவி தோழியிடம் அறத்தொடு நிற்கும் பாடல்களாக 41, 54, 76, 107, 111, 114 என ஆறு பாடல்கள் அமைந்துள்ளன.

தலைவனிடம் தான் கொண்ட அன்பைத் தோழிக்குக் கூறித் தானுற்ற துயர் களையும் படி கேட்கின்றாள் முல்லைக்கலித் தலைவி. இதனை,

**“சொல்லிய ஆறு எல்லாம் மாறுமாறு யான் பெயர்ப்ப**

**அல்லாந்தான் போலப் பெயர்ந்தான்; அவனை நீ**

**ஆயர் மகளிர் இயல்பு உரைத்து, எந்தையும்**

**யாயும் அறிய உரைத்தீயின், யான் உற்ற**

**நோயும் களைகுவை மன்” (கலித்.111:20-24)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இதில் தலைவி தோழியிடம் அறத்தொடு நிற்க விழைதலையும் அதன் மூலம் தலைவனை மணக்க முயற்சிப்பதும் புலனாகும். தோழி

செவிலியிடம் அறத்தொடு நிற்கும் பாடல் அமைந்துள்ளது. இதில் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றதையும், செவிலி தாய் தந்தைக்கு அறத்தொடு நின்றதையும் அவர் முதலில் சினந்து பின் மகட்கொடை நேரச் சம்மதித்ததையும் காண முடிகின்றது. (கலித்.54:19-20) தலைவி ஒருத்தி தலைவனின் பேச்சினை ஆரம்பத்தில் மறுத்தும் பின்னர் அவனுடன் கூட்டத்திற்கு உடன்படுதலை,

**"வேந்து ஊட்டு அரவத்து, நின்பெண்டிர் காணாமை,**
**காஞ்சித் தாது உக்கன்ன தாது எருமன்றத்துத்**
**தூங்கும் குரவையுள் நின்பெண்டிர் கேளாமை**
**ஆம்பற் குழலால் பயிர்பயிர் - எம் படைப்பைக்**
**காஞ்சிக் கீழ் செய்தேம் குறி"** **(கலித்.108:59-63)**

**"மாயப் பொதுவன் உரைத்த உரை எல்லாம்**
**வாய் ஆவது ஆயின், தலைப்பட்டாம்; பொய் ஆயின்**
**சாயல்இன் மார்பில் கமழ்தார் குழைத்த நின்**
**ஆய்இதழ் உண்கண் பசப்ப, தடமென் தோள்**
**சாயினும், ஏஎர் உடைத்து"** **(கலித்.112:21-25)**

என்னும் பாடலடிகள் விளக்கும். கலித்தொகையில் முல்லைக்கலியில் மட்டுமே தெரிந்துடம்படுதல் என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

## திளைப்புவினை மறுத்தல்

திளைப்புவினை மறுத்தல் என்பதற்கு, **விளையாட்டாயமொடு திரிவாள் வேட்கை நலிதலான் அவ்விளையாட்டு வினையை மறுத்தல்**[36] என இளம்பூரணரும் **அங்ஙனந் தமர்க்குத் தானுடம் பட்டதன் பின்னர்த் தலைமகனோடு பகலுமிரவும் பண்டு திளைத்தவாறு திளைத்தலை அச்சமு நாணு மடனுங் காரணமாக மறுத்தலும்; உடம்பாட்டின் பின்னர் மறுக்குமாதலின் அதனைத் திளைப்புவினை மறுத்தலென்று இரண்டாவது வைத்தானென்பது**[37] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

சிவலிங்கனார் **கூட்டத்தை விரும்பியவளாய்த் தன் தோழியர் கூட்டத்துடன் கூடி விளையாடுதலை நீங்குவாள்**[38] எனவும் கூறுகின்றார்.

தலைவனோடு காதல் கொள்வதற்கு முன்பு ஏதும் அறியாத தலைவி மனத்திற்கு மகிழ்ச்சியை அளிக்கும் பாவை விளையாட்டு, பந்து விளையாட்டு போன்ற விளையாட்டுகளில் ஈடுபடுவாள். காதல் வந்த பின்பு தலைவனைப் பிரிந்த நிலையில் தலைவி ஆற்றாத தனிமையில் உள்ளம் அழிகின்றாள். அவளது எண்ணங்கள் அனைத்தும் தலைவனைப் பற்றியதாகவே இருக்கும். எனவே முன்பு இன்பம் தந்த செயல்கள் அனைத்தையும் இப்போது வெறுப்பாள். இதுவே திளைப்பு வினை மறுத்தல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் திளைப்புவினை மறுத்தல் என்னும் மெய்ப்பாடானது இடம்பெறவில்லை.

## கரந்திடத் தொழிதல்

கரந்திடத் தொழிதல் என்பதற்கு, **தலைமகனைக் காண்டல் வேட்கையால் ஒளித்துப் படத்தினின்று மொழிதல்**[39] என இளம்பூரணரும் **அக்காலத்து இற்செறிக்கப்படுதலால் தான் அவனை மறுத்த ஏதத்திற்கு நாணியும் அஞ்சியும் அவற்கு வெளிப்படா தொழுகுதலை உடையளாதலும்**[40] எனப் பேராசிரியரும் **தலைவனைக் காணும் விருப்பினால் தான் அவன் காணாதவாறு மனையகத்து மறைந்திருந்த விடத்தினின்றும் நீங்கி வருதல் இது கரந்தவிடத்தினின்றும் ஒழிதல்**[41] எனச் சிவலிங்கனாரும் விளக்கம் தருகின்றனர்.

ஊராரும் சேரியாரும் கூறும் அலரால் தலைவியின் களவொழுக்கம் பெற்றோரால் அறியப்படுகின்றது. தலைவி இற்செறிக்கப்படுகின்றாள். அந்நிலையில் காதல் நினைவே மிக்கு எழுந்த தலைவி தனிமையில் வினையெல்லாம் ஒழிவாள். தலைவனைக் காணாத நிலையில் சில பேசவும் செய்வாள். இதுவே கரந்திடத்து ஒழிதல் என்னும் மெய்ப்பாடாகக் கலித்தொகையில் இரண்டு பாடல்களில் (கலித்.123:6-11, 141:9-14) இடம்பெற்றுள்ளது.

ஆற்றாமை அடைந்த நிலையில் கரந்திடத்துத் தலைவிதன் நெஞ்சினை நோக்கிக் கூறவும் செய்கின்றாள். கடற்கரையிலே கொல்லேறு போன்ற சுறாவினங்கள் வழிமறிக்கும் மாலைநேரத்திலே நமக்கு நோய் செய்த தலைவனிடம் சென்றாயே அவனைக் கண்டாயோ எனத் தலைவி தன் நெஞ்சிடம் கூறுகின்றாள் (கலித்.123:9-11) மேலும் தலைவி தன் நெஞ்சிடம் வினவுவதை,

**“காணாமை இருள் பரப்பி, கையற்ற கங்குலான்,**

**மாணா நோய் செய்தான் கண் சென்றாய்; மற்று அவனைநீ**

**காணவும் பெற்றாயோ? காணாயோ? - மடநெஞ்சே!”** **(கலித்.123:6-8)**

என்னும் பாடலடிகள் தலைவியின் ஆற்றாமையை நெஞ்சத்திடம் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

## கண்டவழி உவத்தல்

கண்டவழி உவத்தல் என்பதற்கு, **தலைமகனைக் கண்டவழி மகிழ்தல்**[42] என இளம்பூரணரும் **அங்ஙனம் கரந்தொழுகுங் காலத்து அவனை ஒருஞான்று கண்டவழிக் கழியுவகை மீதூர்தலும்; இது தலைமகற்கும் உரித்து**[43] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

பிரிந்திருந்த தலைவி தலைவனைக் கண்டவுடன் மகிழ்தலே இம்மெய்ப்பாடு ஆகும். கலித்தொகையில் களவுப் பாடல்களில் ஆறு இடங்களில் (கலித்.38:10-16, 38:18-20, 120:20-25, 130:18-21, 134:24-27, 148:21-24) இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

தலைவி நீர் அற்ற நிலம் போல பொழிவு இழந்து நின்று தலைவனைக் கண்டதும் மழை பெய்ததால் பொலிவு பெற்ற அந்நிலத்துப் பயிர் போல அழகுபெறத் திகழ்தல். பொருளில்லான் இளமைபோல் புல்லென்றிருந்தவள் வைகறையில் தலைவனைக் கண்டவுடன் அருள் வல்லான் ஆக்கம் போல் அணிபெற்றுத் திகழ்தல். (கலித்.38:10-16)

துன்பமும் துயரமும் தீரக் காதலர் விரைந்து வந்ததால் உயிர் வாழ இடமின்றி வருந்திக் கொடுமை செய்த மாலைக் காலமானது ஆற்றலிழந்து இருளிடையே சென்று மறைந்து கொண்டது. கொடிய பகையை உடனே நீங்கித் தயங்காமல் காத்து உதவும் மன்னவன் போல என் கணவர் வந்ததும் மாலைக் காலமானது கண்காணாமல் சென்று ஒளிந்து கொண்டது (கலித்.120:20-25) குடிகளைப் பாதுகாத்துப் பேணும் பாண்டிய மன்னனைக் கண்டதும் பகைவர்கள் ஓடி மறைவதைப் போல தலைவனை கண்டதும் காமநோயானது நீங்கியதை,

**"படுசுடர் மாலையொடு பைதல்நோய் உழப்பாளை,**

**குடி புறங்காத்து ஓம்பும் செங்கோலான் வியன் தானை**

**விடுவழி விடுவழிச் சென்றாங்கு, அவர்**

**தொடுவழித் தொடுவழி நீங்கின்றாள் பசப்பே" (கலித்.130:18-21)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். நடுகடலிலே கப்பல் உடைந்து சிக்கித் தவிக்கும் போது திரையானது மரக்கட்டையைக் கொண்டு தர அதனைக் கொண்டு உயிர் பிழைத்ததைப் போல காம நோயில் தத்தளிக்கும் போது தலைவனின் வரவே தலைவிக்குத் துயரத்தைப் போக்கியமை (கலித்.134:24-27) போன்றவை இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

இன்று காதலர்களுக்கு மட்டுமின்றி நண்பர்களுக்கும் உறவு முறைகளுக்கும் இம்மெய்ப்பாடு பொருந்துவதை நம்மால் உணர முடிகின்றது.

## ஆறாவது நிலையாகத் தோன்றும் மெய்ப்பாடுகள்

இயற்கைப் புணர்ச்சியால் மனம் ஒன்றிய தலைமக்கள் இற்செறிப்பு முதலியவற்றால் பிரிகின்றனர். தலைவனோடு கூட்டம் நிகழாமையால் தலைவி தனிமையில் பொலிவிழந்து புலம்பித் தோன்றுவாள். மனம் துயரத்தால் கலங்கிக் கூறவும் செய்வாள். இற்செறிப்பால் தனிமையில் உறையும் தலைவியிடம் புறஞ்செயச்

சிதைத்தல், புலம்பித் தோன்றல், கலங்கி மொழிதல், கையறவுரைத்தல் என்னும் நான்கு மெய்ப்பாடுகள் தோன்றும் என்பதை,

**“புறஞ்செயச் சிதைத்தல், புலம்பித் தோன்றல்**
**கலங்கி மொழிதல், கையற உரைத்தலொடு**
**புலம்பிய நான்கே ஆறென மொழிப”   (தொல்.நூ.1212)**

என்பர் தொல்காப்பியர்.

## புறஞ்செயச் சிதைத்தல்

புறஞ்செயச் சிதைத்தல் என்னும் மெய்ப்பாட்டிற்கு, **தலைமகன் கோலஞ் செய்யும்வழி யதற்கு மகிழ்ச்சியின்றிச் சிதைவடையளாதல்**[44] என இளம்பூரணரும் **பூவுஞ் சாந்தும் பூணுந் துகிலும் முதலாயின கொண்டு புறத்தே கோலஞ் செய்ய அகத்தே சிதைவுண்டாதலும் மேல்நின்றது கண்டவழி உவத்தலாகலானும் இது காணாத வழி நிகழ்கின்றதாகலானும் அதற்கினமின்றியும் அதன்வழித் தோன்றியதெனப் படுமாகலான் இதனை இச்சூத்திரத்தின் முன்வைத்தானென்பது**[45] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

களவில் தலைவனைச் சந்திக்க முடியாத தலைவி, அவனது நினைவால் பெரிதும் துயருற்ற நிலையில் இருப்பாள். பிரிவு ஏக்கம் அவள் உள்ளத்தைத் தாக்கி வாட்டிக் கொண்டிருக்கும். உடனிருக்கும் தோழியர் தலைவியின் உளநிலையறியாது புறத்தே அழகுபடுத்துவர். ஆனால் அந்தச் சூழலில் தலைவியின் நினைவு முழுவதும் தலைவனிடமே இருப்பதால் அவளது உள்ளம் சிதைவடையும் இத்தகைய மெய்ப்பாடானது கலித்தொகையில் மூன்று இடங்களில் (கலித். 142:44-46, 143:1-6, 146:5-7) இடம்பெற்றுள்ளது.

முன்புஅன்னத்தின் தூவியிலும் மென்மையான மலரணையிலும் கலங்கமில்லாமல் பேரின்பம் அளித்தவன் தலைவன். அவன் பிரிந்து சென்ற நிலையில் தலைவனது நினைவிலே வாடும் தலைவி அணிகலன்களை வெறுத்து அணியாமல் இருக்கின்றாள்.

நாணமும் நிறையும் உணர்ந்து நடக்கும் அவள் இப்போது எதையும் அறியாமல் நடக்கின்றாள். மனச்சிதைவு காரணமாக அவளது கண்களில் இருந்து வரும் கண்ணீரானது பல்லிற்கு இடையே வழிந்து மார்பின் மீது விழுகின்றது எனத் தலைவியைக் கண்டவர்கள் கூறுகின்றனர். (கலித்.146:5-7)

முழுமதி போல் இருந்த தலைவி, தலைவனின் பிரிவால் நெற்றித் திலகத்தை இழந்தும் உடல் முழுதும் பசலையால் உண்ணப்பட்டும் தன் நெஞ்சிற்கு இனியவையான அனைத்தையும் மறந்து தலைவனின் நினைவிலேயே உழலுகின்றதை,

**"அகல் ஆங்கண், இருள் நீக்கி, அணிநிலாத் திகழ்ந்தபின்,**
**பகல் ஆங்கண் பையென்ற மதியம் போல், நகல் இன்று**
**நல்லுதல் நீத்த தில கத்தள், மின்னிப்**
**மணிபொரு பசும்பொன் கொல்? மா ஈன்ற தளிரின் மேல்,**
**கணிதாரம் கொட்கும் கொல்? என்றாங்கு அணி செல,**
**மேனி மறைத்த பசலையள்" (கலித்.143:1-6)**

என்னும் நெய்தற்கலிப் பாடலடிகள் விளக்கும்.

மனிதர்களுக்கு புற அழகைக் காட்டிலும் அக அழகே இன்றியமையாததாகும். மனமானது மகிழ்ச்சியாக இருந்தால் முகம் பிரகாசமாகவும் மனமானது துயரத்தில் இருக்கும் போது முகம் களையிழந்தும் காணப்படும். துன்பத்தில் இருக்கும் போது மனிதர்கள் வெளியே எவ்வளவு ஒப்பனைகள் செய்து கொண்டாலும் அகத்தில் உள்ள துன்பமானது கண்களின் வழியே காட்டிக் கொடுத்துவிடும் என்பது நிதர்சன உண்மை.

## புலம்பித்தோன்றல்

புலம்பித் தோன்றல் எனும் மெய்ப்பாட்டிற்கு, **பொலிவழிந்து தோன்றல்**[46] என இளம்பூரணரும் **அங்ஙனம் புனைந்த கோலந் துணையொடு கழியப் பெறாமையின் புல்லென்றழிந்த நெஞ்சினளாகலான் எல்லாச் சுற்றத்தார்க்கும் இடைநின்றேயுந் தனியளென்பது அறிவியாநிற்றலும்**[47] எனப் பேராசிரியரும் **அடிக்கடி தலைவனைக்**

**காணாமையாலும் வரைவு வேண்டியும் தான் தனிமையுணர் வுடையாளாய்த் தோன்றல்**[48] எனச் சிவலிங்கனாரும் உரை செய்துள்ளனர்.

தலைவன் பிரிவால் வாடும் தலைவியைத் தோழியர் அழகுபடுத்தவும் தலைவனோடு கூட்டமின்மையால் மனமழிந்த தலைவி பொலிவிழந்து காணப்படுவாள். சுற்றத்தார் சூழ்ந்து இருந்தக்காலும் தலைவனின்மையால் தான் தனியாள் என்பது படக் கூறவும் செய்வாள். இதுவே புலம்பித் தோன்றல் என்னும் மெய்ப்பாடாகும்.

கலித்தொகையில் புலம்பித் தோன்றல் என்னும் மெய்ப்பாடானது ஆறு பாடல்களில் (கலித்.60:15-22, 119:6-16, 120:1-8, 130:15-16, 137:13-17, 149:13-15) காணப்பெறுகின்றது. தலைவனது செயல்பாடுகளை, அருள் முழுவதும் அற்றுப் போனது போன்ற தோற்றமுடையவன்; அறனை ஏறெடுத்தும் நோக்கியறியாதவன்; நல்லது எதையும் செய்யாதவன்; பலரும் கண்டும் அஞ்சுமாறு செயல்களைச் செய்தவன்; என்னைப் புலம்ப விட்டுச் சென்றான் என்று தலைவி உரைப்பது புலம்பித்தோன்றல் என்னும் மெய்ப்பாட்டிற்குரியதாகும். இதனை,

**“அருள்தீர்ந்த காட்சியான், அறன்நோக்கான், நயம் செய்யான்,**
**வெருவுற உய்த்தவன் நெஞ்சம் போல், பைபய**
**இருள் தூர்பு, புலம்பு ஊர, கனை சுடர்கல் சேர,-**
**உரவுத் தகை மழுங்கித் தன் இடும்பையால் ஒருவனை**
**இரப்பவன் நெஞ்சம் போல், புல்லென்று புறம் மாறிக்**
**கரப்பவன் நெஞ்சம் போல், மரம் எல்லாம், இலை கூம்ப,**
**தோற்றம் சால் செக்கருள் பிறைநுதி எயிறாக,**
**நால் திசையும் நடுக்குறூஉம் மடங்கல் காலை” (கலித்.120:1-8)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மேலும் கோவலர்களின் தீங்குழல்களிலே எழும் இனிய ஓசையும் துன்ப நாதமாகக் கேட்கின்றது. எனது கண்கள் வருத்தம் கொள்ள என் நெஞ்சம் சோக கீதம் வாசிக்கின்றதே எனப் புலம்புகின்றாள். (கலித்.130:15-16)

சினம் கொண்ட வேந்தன் ஒருவன் வந்து கோட்டையை முற்றுகையிட்டிருந்தால் கோட்டைக்குள் இருப்பவன் எவ்வளவு வேதனைப் படுவானோ அத்தகைய வேதனையைத் தலைவியும் அனுபவிப்பதை,

**"சினைஇய வேந்தன் எயிற்புறத்து இறுத்த**

**வினைவரு பருவரல் போல,**

**துணைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே" (கலித்.149:13-15)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இன்றும் பலர் துன்ப வேளையில் புலம்புவதைக் காணமுடிகின்றது.

## கலங்கி மொழிதல்

கலங்கி மொழிதல் என்பதற்கு, **கூறுங் கூற்றுக் கலக்கமுற்றுக் கூறுதல்**[49] என இளம்பூரணரும் **கையொடுபட்ட கள்வரைப் போலச் சொல்லுவனவற்றைத் தடுமாற்றந் தோன்றச் சொல்லுதலும்; அஃதாவது, தன்மனத்து நிகழாநின்றன தன்னையறியாமற் சில புலப்படச் சொல்லுதலாயிற்று**[50] எனப் பேராசிரியரும் உரைப்பர்

தலைவி குழப்பத்தில் தடுமாறி இன்னது தான் கூறுகின்றோம் என்பதை அறியாது மனம் தடுமாற்றம் அடைந்து கூறுவதே கலங்கி மொழிதல் என்னும் மெய்ப்பாடாகும்.

கலித்தொகையில் ஏழு பாடல்களில் (கலித்.42:29-32, 120:16-18, 129:8-10, 129:12-15, 129:16-18, 134:19-20, 143:36-41) இம்மெய்ப்பாடு காணப்பெறுகிறது. வள்ளைப் பாட்டு பாடும் போது இயற்பட பாடுகின்ற தலைவி தான் முன்பு பாடும் போது தலைவன் சிறைப்புறமாக இருந்து கேட்டதால் தன் மேனியில் உள்ள பசலையானது சூரியனைக் கண்ட இருள் போல மறைந்ததாகவும் இன்று வள்ளைப்பாட்டைப் பாடுகின்ற போது அவன் வரவில்லை அதனால் தன்மேனியில் ஏற்பட்ட பசப்பானது போகாமல் தன்னிடமே தங்கிவிட்டது எனவும் கலங்கி மொழிகின்றமையைக் காணலாம். (கலித்.42:29-32) மேலும்

**“நினையும் என் உள்ளம் போல், நெடுங் கழி மலர் கூம்ப;**

**இனையும் என் நெஞ்சம் போல், இனம் காப்பார் குழல் தோன்ற;**

**சாய என் கிளவிபோல், செவ்வழி யாழ் இசை நிற்ப;**

**போய என் ஒளியே போல், ஒரு நிலையே பகல்மாய;**

**காலன் போல் வந்த கலக்கத்தோடு என்தலை**

**மாலையும் வந்தன்று”** **(கலித்.143:36-41)**

என்னும் பாடலடிகளில் தலைவி தலைவனை நினைத்துக் கலங்கி மொழிவதைக் காணமுடிகின்றது.

தலைவனைப் பிரிந்து வாடும் தலைவி மாலைப் பொழுது வந்த போது அதனிடம் தகுதியுடையவர் வந்து அருள் செய்யாத போது நீ வந்து துன்பத்தைத் தருகின்றாயே வெந்த புண்ணிலே வேலைக் கொண்டு நுழைக்கின்றாயே எனவும் பிரிவில் வாடுவோரை கலக்கம் அடையச் செய்கின்றாயே எனவும் மாலைக் காலத்திடம் புலம்புகின்றாள் (கலித்.12016-18) கடலிடமும் அன்றிலிடமும் குழலிடமும் தனித்து இருப்பவர்களின் துயரைக் கண்டு வருத்தம் கொள்கின்றாயா எனக் கலங்கி மொழிவதை,

**“மன்று இரும் பெண்ணை மடல்சேர் அன்றில்!**

**‘நன்று அறை கொன்றனர், அவர்’ எனக் கலங்கி**

**என்துயர் அறிந்தனை நரறியோ? எம்போல**

**இன் துணைப் பிரிந்தாரை உடையையோ?”** **(கலித்.129:12-15)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவனைப் பிரிந்து கலங்கி நிற்கும் தலைவி தனது மனதில் உள்ளதை மற்றவர்கள் அறிந்தால் எள்ளி நகையாடுவர் என்பதால் அ∴றிணை உயிர்களிடம் கலங்கிக் கூறுகின்றாள்.

## கையறவுரைத்தல்

கையறவரைத்தல் என்பதற்கு, **செயலறவு தோன்றக் கூறுதல்**[51] என இளம்பூரணரும் **கலங்காது சொல்லுங்காற் செயலறவு தோன்றச் சொல்லுதலும்; அஃதாவது, வன்புறை யெதிரழிந்து சொல்லுவன போல்வன. கையறவுரைத்த லென்பதனை ஈற்றுக்கண் வைத்தான் களவொழுக்கத்தினுள் இதனினூங்கு மெய்ப்பாடு கூறப்படாதென்றற்கு; என்னை காரணமெனின், கையறவுரை தோன்றியதற் பின்னர் நிகழ்வன கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் மெய்ப்பாடாவதன்றி நற்காமத்துக்கு ஆகாவென்பது கருத்து; என்னை? கையறவுரைத்தலென்பது 'சொல்லா மரபினவற்றொடு கெழீஇச், செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்குதலை' (196) எல்லையாக வுடைமையின் அதனினும் இறப்பத் தோன்றுவன மன்றத்திருந்த சான்றவரறியத் தன் துணைவன் பெயரும் பெற்றியுங் கூறி அழுதும் அரற்றியும் பொழுதோடு புலம்பியும் புள்ளொடு சொல்லியுந் நிகழும் மெய்ப்பாடாகலான், அவை 'நடுவணைந்திணை' எனப்பட்ட நற்காமத்திற்கு இலக்கண வகையான் ஏலாவாகலினென்பது. கையறவு உரைத்த லென்றதனான் இம்மெய்ப்பாடு மனத்தளவேயன்றி மாற்றத்தானும் பிறர்க்குப் புலனாக வெளிப்படுமென்பது கொள்க**[52] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

பெற்றோர்கள் தம் குடிப்பெருமை கருதி கடமை உணர்ச்சியால் உந்தப்பட்டு தலைவியை வீட்டுக் காவலில் வைப்பர். தனிமையில் வாடும் தலைவியின் எண்ணங்கள் அனைத்தும் தலைவனைப் பற்றியதாகவே இருக்க கலங்கி மொழிவாள், சில சமயங்களில் செயலறவு தோன்றக் கூறவும் செய்வாள். இதுவே கையறவுரைத்தல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் களவுப் பாடல்களில் இம்மெய்ப்பாடானது நான்கு பாடல்களில் (கலித்.120:10-12, 122:8-11, 126:6-17, 134:11-12) காணப்பெறுகிறது.

தலைவன் பிரிந்த சென்ற நிலையில் தலைவி தன் மனத் துயரத்தை அஃறிணை உயிர்களைக் கொண்டு ஒப்புமைப்படுத்திக் கூறுகின்றாள். வெள்ளத்தில் அகப்பட்டுத் தவிக்கும் மானைக் கண்டு இரக்கம் கொள்ளாமல் அதனைக் கொல்லக் கணை

எடுத்துத் தொடுத்து விடும் கொடியவனைப் போல மாலைக் காலமானது என்னைத் துன்புறுத்துகின்றது (கலித்.120:10-12) என்கிறாள் தலைவி.

**“மாண் எழில் மாதர் மகளிரோடு அமைந்து, அவன்**

**காணும் பண்புஇலன் ஆதல் அறிவேன்மன்; அறியினும்,**

**பேணி அவன் சிறிது அளித்தக்கால், என்**

**நாண் இல், நெஞ்சம் நெகிழ்தலும் காண்பல்” (கலித்.122:8-11)**

என்பதில் தலைவன் பண்பில்லாதவன்; அவன் எத்தகைய செயல்கள் செய்தாலும் அவனிடமே தன் நெஞ்சமானது செல்கின்றது எனத் தன் செயலற்ற தன்மையைத் தலைவி கூறுகின்றாள்.

## களவில் பிரிவுக் கால மெய்ப்பாடுகள்

பிரிவுக்கால மெய்ப்பாடுகள் களவிலும் கற்பிலும் வருவனவாகும். பிரிவுத் துயரில் காதலர்கள் அளவில்லாத காதலை அடைகின்றனர். அவர்கள் பிரிந்த நிலையில் அவர்கள் படும் துன்பமானது ஒருவர் மேல் மற்றொருவர் வைத்துள்ள காதலின் அளவைக் காட்டுவதாக அமைகின்றது. காதலர்களின் உணர்ச்சிகளைச் சிறப்புற எடுத்துக் கூறும் அகப்பாடல்களில் பிரிவால் தோன்றும் துயரத்தைக் காட்டும் பாடல்களே பெரும்பான்மையன. இப்பாடல்களில் காதலை எல்லையாக மட்டும் காட்டும் பாடல்களில் சாதல் காட்டப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதனை,

**பிரிந்த காதலர் வரவை எண்ணி எண்ணி ஏங்கும் இள நெஞ்சத்தில் நிறைந்துள்ள துன்பச் சுமையைத் தாங்கி வரும் பாடல்கள் பல உள ஆயின் அது துன்ப முடிவாக அமையவில்லை. தற்காலிகத் துன்பமேயாகும். அத்துன்பமும் ஏக்கமும் பெருகப் பெருக இறுதியில் அடையும் இன்பமும் பெருகக் காணலாம், எனவே துன்ப உணர்ச்சிகள் சங்கப் பாடல்களில் பாடப்பட்டாலும் துன்ப முடிவுகள் கூறப்படவில்லை எனலாம்[53].** என்னும் நா.செயராமனின் கூற்றும் நன்கு உணர்த்தும்.

**“இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல்**

**எதிர்பெய்து பரிதல், ஏதம் ஆய்தல்**

**பசியட நிற்றல், பசலை பாய்தல்,**

**உண்டியிற் குறைதல், உடம்பு நனிசுருங்கல்,**

**கண்துயில் மறத்தல், கனவொடு மயங்கல்,**

**பொய்யாக் கோடல், மெய்யே என்றல்,**

**ஐயம் செய்தல், அவன்தமர் உவத்தல்,**

**அறன் அழித்துரைத்தல், ஆங்கு நெஞ்சழிதல்,**

**எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்,**

**ஒப்புவழி உவத்தல், உறுபெயர் கேட்டல்**

**நலத்தக நாடின் கலக்கமும் அதுவே” (தொல்.நூ.1216)**

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் களவு மற்றும் கற்பு வாழ்க்கையில் பிரிவின் போது தோன்றும் மெய்ப்பாடுகளைச் சுட்டியுள்ளார்.

## இன்பத்தை வெறுத்தல்

இன்பத்தை வெறுத்தல் என்பதற்கு, **கோலஞ் செய்தல் முதலியனவற்றை வெறுத்தலும் தென்றலும் நிலவு முதலாயினவற்றை வெறுத்தலும். இவ்வாறு களவின்கண் வரிற் பிறர்க்கும் புலனாம். கற்பின்கண் வரிற் பிறர் இயல்வழி மயங்கல் இன்றாம்**[54] என இளம்பூரணரும் **யாழுங்குழலும் பூவுஞ்சாந்தும் முதலாகிய இன்பத்திற் கேதுவாகிய பொருள் கண்டவழி அவற்றின்மேல் வெறுப்புத் தோன்றுதல்**[55] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

தலைவனோடு சேர்ந்து வாழும் காலத்தில் ஏற்படும் துன்பம் கூடத் தலைவிக்கு இன்பமாகத் தோன்றும். ஆனால் பிரிந்து வாழும் சூழ்நிலையில் எத்தகைய இன்பம் தரக்கூடியவையாக இருந்தாலும் அது துன்பமாகவே உணர வைக்கும். இதுவே இன்பத்தை வெறுத்தல் என்னும் மெய்ப்பாடாகும். யாழ், குழல், நிலவு, மலர் முதலான

இன்பம் தரக்கூடிய அனைத்தையும் வெறுத்தல் என்பது உளவியல் ரீதியிலும் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

களவில் இன்பத்தை வெறுத்தல் என்னும் மெய்ப்பாடானது ஒன்பது இடங்களில் (கலித்.118:13-14, 118:17-18, 119:13-15, 120:7-9, 129:6-7, 130:15-16, 134:9-13, 118:9-10, 148:1-7) இடம்பெற்றுளது.

தலைவன் இல்லாத இளவேனில் காலத்தைத் தலைவி வெறுப்பதையும் மாலைக் காலத்தை மருள் மாலை எனக் கூறுவதையும் அறிய முடிகின்றது. கோவலர்கள் ஊதும் இனிய குழலோசையானது தலைவியின் துயரை மிகுதிப்படுத்தியமையை,

**"மாலைநீ - தையெனக் கோவலர் தனிக்குழல் இசைகேட்டு,**

**மையென்ற நெஞ்சத்தேம் பக்கம் பாராட்டுவாய்" (கலித்.118:13-14)**

**"கோவலர் தீம் குழல் இனைய, அரோ, என்**

**பூ எழில் உண்கண் புலம்பு கொண்டு இனையும்!" (கலித்.130:15-16)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். இன்றும் காதலர்களுக்குள் பிரிவு ஏற்படும் போது தமக்கு பிடித்தவையும் இன்பந் தரக்கூடியவற்றையும் வெறுத்தல் என்பது நடைமுறையில் உள்ளது.

## துன்பத்துப் புலம்பல்

துன்பத்துப் புலம்பல் என்பதற்கு, **துன்பத்தின்கண்ணே புலம்புறுதல்**[56] என இளம்பூரணரும் **பிரிவாற்றாது துன்புறுங்காலை அவ்வாற்றாமை தலைமகற்கின்றித் தானே துன்புறுகின்றாளகச் சொல்லுதல் அவை கூட்டத்தை வெறுத்த குறிப்பாயினும் அக்கூட்டத்திற்கே நிமித்தமாகும் ஆராய்ந்துணரி னென்றவாறு**[57] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

காதலர்கள் பிரிவின் போது ஏற்படும் துன்பத்தை வாய்விட்டுக் கூறிப் புலம்புதல் துன்பத்துப் புலம்பல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் பதினொரு

பாடல்களில் (கலித்.120:10-12, 120:13-15, 120:16-18, 121:17-18, 126:8-9, 129:1-7, 134:11-13, 137:5-7, 148:17-19, 148:13-15, 148:9-11) இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

### வரைவு நீட்டிப்பால் துன்பத்துப் புலம்பல்

தலைவன் திருமணம் செய்து கொள்ளாமல் களவு வாழ்வை நீட்டித்தவிடத்து தலைவி தன் துயரை வாய்விட்டுக் கூறிப் புலம்புகின்றாள்.

**'"நீயலேன்' என்று என்னை அன்பினால் பிணித்து நம்**
**சாயலின் சுடுதல் அல்லது, அவர் நம்மைப்**
**பாய் இருள் அறநீக்கும் நோய்தபு நெடுஞ் சுடர்த்**
**தீயினால் சுடுதலோ இலர்மன்; ஆயிழை!**
**தீயினும் கடிது, அவர் சாயலின் கனலும் நோய்" (கலித்.137:18-22)**

என்பதில் தலைவன் பிரியேன் எனக் கூறிவிட்டுப் பிரிந்து சென்றுவிட்டான். அதைத் தாங்க முடியாத தலைவி துன்பம் மீதூற புலம்புவதைக் காணமுடிகின்றது.

தலைவன் பொருள் தேடப் பிரிந்து போக உள்ளதை அறிந்த தோழி,

**"கல்லெனக் கவின்பெற்ற விழவு ஆற்றுப்படுத்த பின்,**
**புல்லென்ற களம் போலப் புலம்புகொண்டு அமைவாளோ?" (கலித்.5:10-11)**

என்கிறாள். மேலும் வாழ்க்கை எனும் கடலின் நடுவே பயணித்துக் கொண்டு இருக்கும் போது புயல் எனும் பொருள்வயின் பிரிவால் கொடிய துயரத்திற்கு ஆளாகின்றேன் எனத் தலைவி புலம்புகின்றதைச் சுட்டுகின்றாள். தலைவன் வரைவு நீட்டித்தவிடத்து பிரிவுத் துயர் தாங்காத தலைவி புலம்புவதை நெய்தற்கலியில் நல்லந்துவனார் பத்துப் பாடல்களில் (கலித்.124, 125, 126, 127, 128, 131, 132, 133, 134, 135) பதிவு செய்துள்ளார்.

### எதிர்பெய்து பரிதல்

எதிர்பெய்து பரிதல் என்பதற்கு, **தலைமகன் முன்னின்றி அவனின்றாகப் பெய்து கொண்டு வருந்துதல்**[58] என இளம்பூரணரும் **உருவு வெளிப்பாடு; அது, தலைமகனையும்**

**அவன் தேர் முதலாயினவற்றையுந் தன்னெதிர் பெய்து கொண்டு பரிந்து கையறுதல்**[59] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

செம்புலப் பெயல் நீர் போன்றுடைய அன்புடைய நெஞ்சங்கள் பிரிவு வருங்காலத்தில் பெரிய துன்பத்திற்கு ஆளாகின்றன. தலைவன் தன் பிரிவுக் காலத்தில் தலைவியை தன் மனக்கண்முன் நிறுத்தி இரங்குகின்றான். தலைவியும் தலைவனைத் தன் மனக் கண்ணில் நிறுத்தி இரங்குகின்றாள். இவ்வாறு பிரிந்து சென்ற தலைமக்கள் ஒருவரையொருவர் மனக் கண்முன் நிறுத்தி இரங்குகின்றனர். இதனால் பிரிவிலும் அவர்களால் ஆறுதலைடைய முடிகின்றது. இதனால் நேரில் கண்டது போல அவர்கள் திருப்தியடைகின்றனர்.

பிரிவுக் காலத்தில் தலைவி, தலைவனது உருவெளித் தோற்றங் கண்டும், தலைவன் தலைவியின் உருவெளித் தோற்றங் கண்டும் இரங்குதலே எதிர்பெய்து பரிதல் என்னும் மெய்ப்பாடாகும்.

கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இரண்டு இடங்களில் (கலித்.126:6-7, 126:10-11) இடம்பெற்றுள்ளது. தலைவனைப் பிரிந்து இருக்கும் தலைவி அவனையே எண்ணித் தூங்கியிருந்த போது தலைவன் தன் தோள் மேல் தழுவிக் கிடப்பதாக நினைத்ததை,

**“நீர் நீவிக் கஞன்ற பூக் கமழுங்கால், நின் மார்பில்**

**தார் நாற்றம் என இவள் மதிக்கும்மன்; மதித்தாங்கே” (கலித்.126:10-11)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மேலும் அழகிய சிறகுகளை உடைய குருகினங்கள் ஒலிக்கும் ஒலியைக் கேட்டு தலைவனின் தேரிலிருந்து வரும் மணிக்குரலின் ஒலியே என எண்ணித் தலைவன் வந்துவிட்டான் என மகிழ்ந்து வந்து காணும் போது அது கானற் பறவைகள் எழுப்பிய ஒலி என அறிந்து தலைவி புலம்புகின்றாள். தலைவனையே எண்ணியிருக்கும் போது எழுந்த பறவையின் ஒலியானது தேரின் மணியோசையாக தலைவிக்குக் கேட்கிறது. தாம் நேசித்த ஒருவரைப் பிரிந்து

இருக்கும் போது அவர்களின் உருவம் அருகே இருப்பது போலத் தோன்றும் பிரமையே இம்மெய்ப்பாடாக அமைகின்றது.

## ஏதமாய்தல்

ஏதமாய்தல் என்பதற்கு, **குற்றமாராய்தல்**[60] என இளம்பூரணரும் **கூட்டத்திற்கு வரும் இடையூறு உண்டென்று பலவும் ஆராய்தல்; அது, நொதுமலர் வரையக் கருதுவர் கொல்லெனவும், பிரிந்தோர் மறந்து இனி வாரார் கொல் எனவுந் தோன்றும் உள்ள நிகழ்ச்சி**[61] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

களவுக் காலத்தில் தலைவனும் தலைவியும் விழையும் கூட்டத்திற்கு இடையூறுகள் பல நேரிடும். அவ்வாறு வரும் இடையூறுகளை ஆராய்தலே ஏதமாய்தல் என்னும் மெய்ப்பாடாகும். களவொழுக்கத் தலைவன் இரவென்றும் பகலென்றும் பாராமல் தலைவியைச் சந்திக்க வருவான். காதல் மொழிகளைப் பேசுவான். திருமணம் செய்து கொள்ளாமல் வந்து செல்லும் தலைவனைப் பற்றித் தலைவி ஆராய்வாள். கலித்தொகையில் நான்கு இடங்களில் (கலித். 47:15-19, 52:7-14, 52:15-18 117:13-15) இம்மெய்ப்பாடானது பதிவு செய்யப்பட்டுள்ளது.

இரவுக்குறியில் வந்து செல்லும் தலைவனுக்கு விலங்குகளால் ஏதம் நேரிடுமோ கொடுமையான வழியை எப்படிக் கடந்து வருவாரோ எனப் பலவாறாக ஆராயுமிடத்து ஏதமாய்தல் என்னும் மெய்ப்பாடு தோன்றுகின்றது. தலைவன் இரவுக்குறிக்கண் வந்து செல்கிறான். அவ்வாறு வந்து செல்லும் வழியில் ஏற்படும் துன்பம் குறித்து ஆராய்ந்து தோழி கூறுவதை,

**"ஈரந் தண் ஆடையை, எல்லி மாலையை,**
**சோர்ந்து வீழ் கதுப்பினாள் செய்குறி நீவரின்**
**ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர், வில்லர்**
**'களிறு' என ஆர்ப்பவர், ஏனல் காவலரே"** **(கலித்.52:11-14)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். இரவில் தலைவன் வரும் வழியில் அணங்கு, புலி, களிறு ஆகியவற்றால் தலைவனுக்குத் துன்பம் வரும் என அஞ்சும் நிலையில் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது.

## பசலை பாய்தல்

தலைவன் பிரிவால் தலைவியின் மேனியில் ஏற்படும் நிறவேறுபாடு பசலை பாய்தல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் பிரிவால் தலைவி எய்தும் பசலை பற்றியும் அவன் வந்தபோது அது மறைவது குறித்தும் கலித்தொகைப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

பசலையால் தலைவியின் தொல்கவின் அழியும் தன்மையை,

**“அணிநலம் போர்ப்பது போலும் பசப்பு” (கலித்.33:15)**

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. பிரிவு உணர்ச்சி மிகுதியால் தாக்குண்ட தலைவியின் அகநோய் மிகுதியையும் அதனால் தலைவியிடம் தோன்றிய பசலை பாய்தல், கண் கலுழ்தல் ஆகிய மெய்ப்பாடுகள் வெளிப்படுவதையும் உய்த்துணர முடிகின்றது.

இப்பசலை குறித்து, **களவு, கற்பு என்ற இருநிலை வாழ்விலும் நேரும் பிரிவால் ஆற்றாத் துயருறும் தலைவியின் மேனியில் தோலில் தோன்றும் நிற வேறுபாடே பசலை பாய்தல் என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடு பசலை எனவும், பசலை பரத்தல் எனவும் பசலை பாய்தல் எனவும் பசலை நோய் எனவும் வழங்கப்படும்** எனவும் **பிரிவுத் துயருணர்ச்சி உள்ளக்கிளர்ச்சியாகி உடல் உள்ளுறுப்புகளில் மாற்றங்களை உண்டாக்குகின்றது. இம்மாற்றங்கள் புறஉடலில் மெய்ப்பாடுகளாகத் தோன்றுகின்றன. துயர மெய்ப்பாடுகளுள் பசலை பாய்தலும் ஒன்று. இதனை தோலின் மின் தன்மைகள் என உளவியலார் கூறும் உடல் மாறுபாட்டுத் தன்மையைச் சார்ந்ததாகும். சங்கப் புலவரின் உளநூல் அறிவு இக்கால உளவியலாரின் கூறுவதைக் காணமுடிகின்றது**[62] என்பர் மு.பொன்னுச்சாமி.

கலித்தொகையில் இருபத்தொரு இடங்களில் (கலித்.36:12-13, 39:48-49, 42:31-32, 45:9-10, 45:18-19, 48:16-17, 52:14-15, 99:9-10, 100:17-18, 112:24-25, 124:7-8, 124:11-12, 125:23-24, 127:16-17, 130:20-21, 132:10-11, 142:22-23, 143:4-6, 143:48-51, 144:71-73, 143:48-49) பசலைபாய்தல் என்னும் மெய்ப்பாடு பசந்த, பசந்து, பசந்தவர், பசந்தன்று, பசந்தன, பசப்ப, பசலை, பசலையள், பசப்பு, திதலை, மாமை என்ற பெயர்களில் சுட்டப்பெற்றுள்ளன.

அகத்திணை மெய்ப்பாடுகளுள் பெரும்பான்மையாகச் சங்கப் புலவரால் அதிகமாகப் பதிவு செய்யப்பட்டது பசலை பாய்தலாகும். தலைவியின் மேனி, முகம், நுதல், கண், தோள், அல்குல், முலை அகியவை பசத்தல் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் பேசப்படுகின்றன. பசலை பாயும் உறுப்புகளுள் முகம், நுதல், கண் என்பன மிகுதியாக சங்கப் புலவர்களால் பாடப்பட்டுள்ளன.

## பசலையின் தோற்றம்

பசலையைப் பற்றித் தொல்காப்பியர்,

**“வண்ணம் பசந்து புலம்புறு காலை” (தொல்.நூ.1148:1)**

எனக் கூறுவர்.

பசலையால் தலைவியின் மேனி, கண், தோள், நுதல் முகம் ஆகிய உறுப்புகள் நலம் இழந்தமை கலித்தொகையில் ஆறு பாடல்களில் காணக்கிடக்கின்றது.

**“பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று, நுதல்;**
**சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன, தோள்” (கலித்.36:12-13)**

என்னும் பாடலடிகளில் தலைவியின் நுதலில் பசலை படர்ந்திருந்ததை அறியமுடிகிறது.

## பசலையின் இயல்பு

தலைவனின் பிரிவால் தலைவி எய்தும் பசலை பற்றியும் அவன் வந்தவுடன் அது மாய்வது குறித்தும் புலவர்கள் கூறியுள்ளனர். தலைவனைப் பிரியாது

உடனுறைதலே தலைவியின் பசலை நீங்க வழி. எனவே மணம் புரிவதே சிறந்த வழி என்பதை,

**"விடுவழி விடுவழிச் சென்றாங்கு, அவர்**

**தொடுவழித் தொடுவழி நீங்கின்றால் பசப்பே" (கலித்.130:20-21)**

**"இறை வரை நில்லா வளையல், இவட்கு, இனிப்**

**பிறை ஏர் சுடர் நுதற் பசலை**

**மறையச் செல்லும், நீர் மணந்தனை விடினே" (கலித்.125:23-24)**

என்னும் நல்லந்துவனார் பாடல் உரைக்கும். முக ஒளியானது பாம்பு சேர் மதி போலவும் (கலித்.7:7-8) மேகம்மறைத்த நிலவு போலவும் (கலித்.15:16-17) தெளிவில்லாமல் பசலையால் உண்ணப்பட்டு மேனியின் நிறம் மங்கியுள்ளமை புலவர்களால் பாடப் பெற்றுள்ளது.

**"மணிபொரு பசும்பொன்கொல்? மா ஈன்ற தளிரின் மேல்,**

**கணிகாரம் கொட்கும் கொல்? என்றாங்கு அணி செல,**

**மேனி மறைந்த பசலையள்" (கலித்.143:4-6)**

என்னும் பாடலடிகளில் தலைவியின் முகமும் மேனியும் பசலையால் உண்ணப்பட்டமை சுட்டப்பெற்றுளது. தலைவியின் நெய்தற் மலர் போன்ற கண்கள் பசந்ததையும் (கலித்.142:22-23) கண்கள் பசலையால் உண்ணப்பட்ட போது பீர்க்கம் பூவைப் போல் இருந்தமையும் (கலித்.143:48-51) சுட்டப்பெற்றுள்ளது.

தலைவன் இனி உன்னைப் பிரிய மாட்டேன் என்று கூறும் கூற்றானது பொய்யாக இருந்தால் மீண்டும் என் கண்களும் பசலையால் நிறைந்து விடும்; தோள்களும் தளரும் எனத் தலைவி தன் நெஞ்சிடம் கூறுவது தலைவியின் உள்ளத்துணர்வை வெளிப்படுத்தும் மெய்ப்பாடாக அமைகின்றது. (கலித்.112:24-25)

## உண்டியிற் குறைதல்

உண்டியிற் குறைதல் என்பதற்கு, **உணவு சுருங்குதல்**[63] என இளம்பூரணரும் **பசியட நிற்றலே யன்றிச் சிறிது உண்டி யூட்டியவழிப் பண்டு போலாது கழியவுஞ் சிறிதுண்டல்**[64] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

பிரிவுத் துயரில் உள்ள தலைவி வேண்டா வெறுப்புடன் உண்ணும் உணவில் சிறிதளவு உண்ணல் உண்டியிற் குறைதல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இடம்பெறவில்லை.

## உடம்புநனி சுருங்கல்

உடம்பு நனி சுருங்கல் என்பதற்கு, **உண்ணாமை காரணமாகத் தன்னுடம்பு மிகச் சுருக்கமுறுதல்**[65] என இளம்பூரணரும் **அவ்வுண்ணாமை உயிரிற் செல்லாது உடம்பிற் காட்டுதல்**[66] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர். பிரிவாற்றாமையால் காதலர்கள் உணவு உட்கொள்ளாமல் இருப்பதனால் அவர்களின் உடல் மெலிவு ஏற்படும். பிரிவுத் துயரே உண்டியிற் குறைதலுக்கும் உடம்பு நனி சுருங்கலுக்கும் அடிப்படைக் காரணமாகும்.

தலைவிக்கு இம்மெய்ப்பாடு தோன்றியமையை வளை நெகிழ, இழை நெகிழ, தொடி நெகிழ என்னும் தொடர்கள் புலப்படுத்தும். தலைவியின் மேனி வாடி இருப்பதை எழில் மேனி தகை வாட, வாடிய மேனி, அல்குல் அவ்வரி வாட, என்னும் தொடர்களால் அறியலாம்.

களவில் இம்மெய்ப்பாடானது பதினொரு இடங்களில் (கலித்.37:13-18, 41:26-27, 48:8-9, 121:20-22, 123:13-14, 124:11-12, 125:21-22, 127:19-20, 132:14-15, 135:6-7, 127:12-13) காணப்பெறுகிறது. களவில் துன்ப உணர்ச்சி அதிகமாகத் தோன்றுவது இம்மெய்ப்பாடு தோன்றக் காரணமாகின்றது. தலைவனைக் காணாமல் அவனை நினைத்து நினைத்தே என் தோள்கள் மெலிந்து துயர் கொண்டன எனத் தலைவி கூறுகின்றாள் (கலித்.37:13-18) தலைவனின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்

தலைவியின் கைவளையல்கள் கழன்று ஓடியதையும் (கலித்.41:26-27) தாயின் கடுமையான காவலில் இருக்கும் தலைவி தலைவனை நினைத்து வருந்தியதை,

**“வீழ்பெயற் கங்குலின் விளி ஓர்த்த ஓடுக்கத்தால்,**

**வாழும் நாள் சிறந்தவள் வருந்துதோள் தவறு உண்டோ -**

**தாழ்செறி கடுங்காப்பின் தாய் முன்னர், நின் சாரல்,**

**ஊழ் உறு கோடல் போல், எல்வளை உகுபவால்” (கலித்.48:8-11)**

என்னும் பாடலடிகளும் விளக்கும். மேலும் தலைவனைப் பிரிந்த தலைவி தன் நெஞ்சத்திடம் பறவைகள் தங்குமிடம் சேர்கின்ற மாலை வேளையில் கைவளைகளை நெகிழச் செய்தவனைத் தேடிச் சென்றாயே கண்டாயா என வினவுவது இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும் (கலித்.123:13-14).

**“அறிவு அஞர் உழந்து ஏங்கி, ஆய் நலம் வறிதாக,**

**செறிவளை தோள் ஊர, இவளை நீ துறந்ததை?” (கலித்.127:12-13)**

என்னும் பாடலடிகள் பிரிவால் தலைவியின் தோள் மெலிந்ததைச் சுட்டுகின்றது தலைவியின் தோள் நலம் கைவளை நெகிழ்தல் போன்றவற்றிற்கு தலைவனின் பிரிவே காரணம். தலைவனை மீண்டும் தலைவி காண்பாளேயானால் அவள் நலமானது மீட்டெடுக்கப்படும். இக்காலத்திலும் பிரிவுத் துயரில் வாடும் பெண்களிடம் இம்மெய்ப்பாடு தோன்றுதல் ஈண்டு சுட்டத்தக்கது.

## கண்துயில் மறத்தல்

கண்துயில் மறத்தல் என்பதற்கு, **உறங்காமை**[67] என இளம்பூரணரும் **இரவும் பகலுந் துஞ்சாமை**[68] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். பிரிவுத் துயரால் காதலர் உறக்கம் கொள்ளாமையே கண்துயில் மறத்தல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகை களவுப் பாடல்களில் இம்மெய்ப்பாடு நான்கு இடங்களில் (கலித்.45:18-19, 48:14-15, 122:21-22, 123:16-17) காணப்பெறுகிறது.

காமநோய் மிகுதியாக உள்ள தலைவி நடுஇரவிலும் தூங்காமல் தலைவனை நினைத்து வாடுகின்றதைக் காணமுடிகின்றது. (கலித்.45:18-19) மேலும் ஊரார் அலர் தூற்றினாலும் கண் கலங்கி நிற்கும் தலைவி இத்தகைய இருளில் தான் தன்னை காண வந்தான் என எண்ணி ஏங்கி தலைவன் வரவை நினைத்து உறங்காமல் காத்திருத்தலை,

**“நினைதுயர் உழப்பவள் பாடுஇல் கண்பழி உண்டோ -**

**‘இனையள்’ என்று எடுத்து அரற்றும் அயல் முன்னர்” (கலித்.48:13-14)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவன் மீது கொண்ட அளவுக்கு அதிகமான காதலால் இரவில் தூக்கம் இல்லாமல் இருப்பதையும் (கலித்.122:21-22) பகலும் இரவும் உறக்கத்தைக் கைவிட்டு காமநோயைச் செய்தவனிடம் தன் நெஞ்சம் சென்று சேர்கின்றது எனத் தலைவி கூறுவதும் இம்மெய்ப்பாட்டிற்கு உரியன. இம்மெய்ப்பாடு இன்றும் பொருந்தி வருதல் கண்கூடாகக் காணமுடிகின்றது.

## கனவொடு மயங்கல்

கனவொடு மயங்கல் என்பதற்கு, **கனவை நனவென மயங்குதல்**[69] என இளம்பூரணரும் **அரிதினில் துயில்லெய்தியவழித் தலைமகனைக் கனவிற் கண்டு பின்னர் அவனன்மையின் மயங்கும் மயக்கம்**[70] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர். பிரிவின் கண்ணே நனவில் தோன்றும் இடையறாத நினைவால் கனவில் காதலரைக் கண்டு விழித்தபின் கனவுக்கும் நனவுக்கும் வேறுபாடு அறியாது மயங்குவதே கனவொடு மயங்கல் என்னும் மெய்ப்பாடாகும். காதல் உணர்வு அதிகமாக இருக்கும் போது மனதில் தலைவனை நினைத்துக் கொண்டு இருப்பதே கனவு தோன்றக் காரணமாகின்றது.

**கனவொடு மயங்கல் என்னும் மெய்ப்பாடு பெரிதும் காம இச்சையை அடிப்படையாகக் கொண்டே தலைவன், தலைவியிடம் நிகழ்கின்றது. நனவிலி உள்ளத்தில் அடைக்கப்பட்டிருக்கும் இச்சைகளை முதன்மையாகக் காம இச்சையைக்**

**கனவுகள் குறிப்பன எனப் பிராய்டு கூறும் கருத்து ஈண்டுக் கருதத்தக்கது**[71] என்பர் தா.ஏ.சண்முகம்.

தொல்காப்பியர், உறங்கும் போது கனவில் அரற்றுவதை,

**"காதல் கைம்மிகக் கனவில் அரற்றலும்**

**தோழியை வினவலும்" (தொல்.நூ.1061)**

என்ற நூற்பாவில் உரைப்பர். கனவு கண்டு தலைவி அரற்றுவதும் அதன்பின் விழித்தவுடன் நிகழும் மாற்றங்களும் கனவொடு மயங்கல் என்னும் மெய்ப்பாடு ஆகும். கலித்தொகையில் கனவொடுமயங்கல் என்னும் மெய்ப்பாடானது ஏழு இடங்களில் (கலித்.128:23-25, 126:10-17, 39:33-36, 49:3-4, 53:18-19, 92:21-22, 128:1-9) பயின்றுவந்துள்ளது.

**"ஓர்த்தது இசைக்கும் பறை போல், நின் நெஞ்சத்து**

**வேட்டத்தே கண்டாய் கனா" (கலித்.92:21-22)**

என்னும் பாடலடியில் இதே போன்று மற்றொரு தலைவியும் கனவில் தலைவனை அணைக்க முற்படும் போது தான் கண்டது கனவு என அறிந்து கலங்குகிறாள் (கலித்.126:10-17)

கனவில் வந்த தலைவன் நேரில் வருவான் எனத் தலைவி எண்ணுவதை

**"கனவினால் கண்டேன் - தோழி- 'காண்தகக்**

**கனவில் வந்த கானல் அம் சேர்ப்பன்**

**நனவில் வருதலும் உண்டு'" (கலித்.128:23-25)**

என்ற பாடலடிகள் விளக்கும்.

## பொய்யாக் கோடல்

பொய்யாக் கோடல் என்பதற்கு, **தலைவன் கூற்றுத் தன்னைப் பொய்யாக் கோடல்**[72] என இளம்பூரணரும் **மெய்யைப் பொய்யாக் கோடல்**[73] எனப் பேராசிரியரும்

விளக்கம் தருகின்றனர். தலைவன் கூறும் உண்மையைக் காதல் மிகையால் தலைவி பொய்யாகக் கொள்ளுதல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் மூன்று இடங்களில் (கலித்.41:19-20, 112:15, 113:19-21) இம்மெய்ப்பாடு காணப்பெறுகிறது.

தலைவன் தலைவியிடம் காதல் மொழிகளைப் பேசும் போது இனி உன்னைப் பிரியமாட்டேன் எனச் சத்தியம் செய்து கொடுத்தான். ஆனால் தான் கொடுத்த வாக்கைப் பொய்த்துவிட்டான். எனவே தலைவி அவனின் சூளுறவை பொய்யாகக் கொள்ளுதலை,

**"இலங்கு அருவித்து; இலங்கும் அருவித்தே;**
**வானின் இலங்கும் அருவித்தே - தானுற்ற**
**சூள்பேணான் பொய்த்தான் மலை" (கலித்.41:18-20)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். தலைவனின் புறத்தொழுக்கமே தலைவியிடம் பொய்யாக் கோடல் என்னும் மெய்ப்பாடு தோன்றக் காரணமாகின்றது. தலைவன் தான் கூறிய மொழிகளைப் பொய்த்தான். எனவே இனிக் கூறுவனவும் உண்மையாக இருந்தாலும் பொய்யாகவே தலைவியால் கொள்ளப்படும். தலைமக்களிடையே நடைபெற்ற உரையாடலில் தலைவி கூறியதை பொய்யாக எடுத்துக் கொண்டவனிடம் தலைவி வினவியதை,

**"'நெஞ்சு ஏவல் செய்யாது' என நின்றாய்க்கு, 'எஞ்சிய**
**காதல் கொள் காமம் கலக்குற' ஏதிலார்**
**பொய்ம் மொழி தேறுவது ஏன்?" (கலித்.113:19-21)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

## மெய்யே என்றல்

மெய்யே என்றல் என்பதற்கு, **உரைத்த மாற்றத்தை மெய் எனக் கூறுதல்** [74] என இளம்பூரணரும் **பொய்யை மெய்யென்று துணிதல்** [75] எனப் பேராசிரியரும் விளக்கம் தருவர். தலைவன் பொய் கூறினாலும் அவன் சொல்வதை மெய்தான் எனத் துணிந்து

கூறுததே மெய்யே என்றல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு (கலித்.113:19-21, 112:21-23, 124:18-19, 137:18-22, 124:17-18, 132:8-9, 132:16-17, 41:19-20) ஏழு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

உன்னைப் பிரிந்து செல்ல மாட்டேன் எனச் சத்தியம் செய்கிறான் தலைவன். அதை உண்மை என்றே தலைவியும் நம்புகிறாள் (கலித்.124:17-18) மேலும்

**"புன்னைய நறும்பொழில் புணர்ந்தனை இருந்தக்கால்,**

**'நன்னுதால்! அஞ்சல் ஓம்பு' என்றதன் பயன் அன்றோ" (கலித்.132:8-9)**

என்னும் பாடலடியில் விரைவில் வந்துவிடுவேன் நீ அஞ்சாமல் இரு எனக் கூறிய தலைவனின் கூற்றை உண்மை என்று நம்பிய தலைவியிடம் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது. தலைவன் கூறிய வார்த்தைகளை எல்லாம் உண்மை என நம்புதலே மெய்யே என்றல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவனும் நான் உன்னை விட்டுப் பிரியேன் எனக் கூறுகின்றான். அதையும் தலைவி கேட்டு உண்மை என நம்புவதை,

**"மாயப் பொதுவன் உரைத்த உரை எல்லாம்**

**வாய் ஆவது ஆயின், தலைப்பட்டாம்; பொய் ஆயின்,**

**சாயல்இன் மார்பில் கமழ்தார் குழைத்த நின்" (கலித்.112:21-23)**

என்னும் பாடலடிகளின் வாயிலாக அறிய முடிகின்றது. மேலும் தலைவியின் கூற்றை தொடக்கத்தில் பொய் எனக் கூறி பின் மெய் தான் கூறினாய் என்பதை நான் உணர்ந்து கொண்டேன் எனத் தலைவன் கூறுவதிலும் (கலித்.113:22) மெய்யே என்றல் என்னும் மெய்ப்பாடு தோன்றுகின்றது.

## ஐயஞ் செய்தல்

ஐயஞ் செய்தல் என்பதற்கு, **தலைவன் குறிப்புக் கண்டு ஐயப்படுதல்**[76] என இளம்பூரணர் பொருள் தருகின்றார். இன்னதென ஒன்றைத் துணிய இயலாத, மயக்கத்திற்கு உள்ளான மனநிலையின் வெளிப்பாடுதான் ஐயஞ்செய்தல் என்னும் மெய்ப்பாடாகும்.

ஐயஞ் செய்தல் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் பன்னிரெண்டு இடங்களில் (கலித். 4:16, 4:22, 33:24-25, 36:18-19, 56:6-9, 108:10-13, 109:10-11, 123:12-14, 129:9-11, 129:13-15, 123:17-19, 150:8-10) காணப்பெறுகிறது. தலைவியைக் கண்ட தலைவன் பாவையோ? சித்திரமோ? கூற்றமோ? என ஐயுறுதலை,

**“ஈங்கே வருவாள் இவள் யார் கொல்? ஆங்கே, ஓர்**
**வல்லவன் தைஇய பாவை கொல்? நல்லார்**
**உறுப்பு எலாம் கொண்டு, இயற்றியாள் கொல்? வெறுப்பினால்**
**வேண்டு உருவம் கொண்டதோர் கூற்றம் கொல்?” (கலித்.56:6-9)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மேலும் ஆயர் குலப் பெண்ணுக்கு உடம்பு முழுதும் கண்கள் இருக்குமோ எனவும் (கலித்.109:10-11) தலைவன் சந்தேகமாக வினவுவதும் இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

## அறனழிந்து உரைத்தல்

அறனழிந்து உரைத்தல் என்பதற்கு, **அறத்தினை அழித்துக் கூறுதல்**[77] என இளம்பூரணரும் **அறக்கிழவனை அன்பு செய்தல்**[78] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். அறத்தினை அழித்து வெறுத்துக் கூறுதல் அறனழித்துரைத்தல் என்னும் மெய்ப்பாடாகும். விரும்பிய தலைவனுக்குத் தன்னை மணம் முடித்துக் கொடுத்தலே அறம் எனக் கருதுகின்றாள் தலைவி. ஆனால் நொதுமலர் வரவால் மனம் நொந்து தலைவனுடன் தான் கொண்ட உறவை முதல் மணம் என்றும் தற்போது வரும் நொதுமலர் வரவு தனக்கு இரண்டாம் மணம் எனவும் கூறுகின்றாள். எந்த சூழ்நிலையிலும் ஆயமகள் மறுமணம் புரிய ஒத்துக்கொள்ள மாட்டாள் என்பதுமாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு நான்கு இடங்களில் (கலித்.42:11-12, 39:12-14, 147:1-2, 48:10-11) இடம்பெற்றுள்ளது.

தலைவிக்கு அறன் அல்லாதவற்றை செய்யத் துணியாதீர்கள் துணிந்தால்,

**"வள்ளி கீழ் வீழா; வரைமிசைத் தேன் தொடா;**

**கொல்லை குரல் வாங்கி ஈனா - மலை வாழ்நர்**

**அல்ல புரிந்து ஒழுகலான்"** **(கலித்.39:12-14)**

என்பன நிகழும் என விளைவைக் கூறிய தோழி தலைவனுக்கே தலைவியை மணம் முடித்துக் கொடுக்கவேண்டும் எனக் கூறுவது இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்

## ஆங்கு நெஞ்சழிதல்

ஆங்கு நெஞ்சழிதல் என்பதற்கு, **அறத்தினை அழித்துக் கூறும் இடத்து நெஞ்சழிந்து கூறுதல்**[79] என இளம்பூரணரும் **அங்ஙனம் உரைக்குங்கால் நெஞ்சழிந்துரைத்தல்; எனவே, அறனளித்துரைத்தல் அழிவின்றொன்றாமென்பது சொல்லினானாம்**[80] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

அறத்தினை அழித்துக் கூறிய தலைவி பின் நெஞ்சழிந்து கூறுதல் ஆங்கு நெஞ்சழிந்து கூறுதல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஏழு பாடல்களில் (கலித்.129:24-25, 33:13-17, 130:12-13 123:16-19, 53:16-13, 123:16-19, 143:23-25) இடம்பெற்றுள.

தலைவன் வரைவு நீட்டிப்பது கண்டு வருந்திய தலைவி நெஞ்சழிந்து கூறுதல் இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும். தலைவன் தன் நெஞ்சம் அழியத் துறந்தான் (கலித்.143:23-25) என்று தலைவி கூறுவதை,

**"எல்லையும் இரவும் துயில்துறந்து, பல்ஊழ்**

**அரும்படர் அவல நோய் செய்தான் கண்பெறல் நசைஇ,**

**இருங்கழி ஓதம் போல் தடுமாறி,**

**வருந்தினை - அளிய என் மடம் கெழு நெஞ்சே!"** **(கலித்.123:16-19)**

என்பதில் தலைவனின் பிரிவை ஆற்றாத தலைவி உறக்கமில்லாமல், துன்புற்ற நிலையில் நெஞ்சழிந்து கூறுவதாக உள்ளது. தலைவன் வராத சூழலில் தலைவி நெஞ்சழிந்து கூறுவதை,

**“நொந்து நகுவன போல்நந்தின, கொம்பு, நைந்து உள்ளி**

**உகுவதுபோலும் என் நெஞ்சு”** **(கலித்.33:16-17)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். பொருள்வயிற் பிரிவு பாடல்களிலும் பருவம் கண்டு ஆற்றாமை அடைந்ததாக அமையும் பாடல்களிலும் வன்புறை எதிரழிந்த துறைப் பாடல்களிலும் தலைவி நெஞ்சழிந்து கூறுவதைக் காணமுடிகின்றது.

## எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்

எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல் என்பதற்கு, **யாதானுமோர் உடம்பாயினுந் தன்னோடு ஒப்புமை கோடல்**[81] என்று இளம்பூரணரும் **யாதானும் ஒரு பொருள் கண்டவிடத்துத் தலைமகனோ டொப்புமை கோடல்; எம்மெய்யாயினும் என்றமையாற் கண்ட பொருளும் கேட்ட பொருளும் ஒப்புமை கொள்ளப் பெறும்**[82] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர்.

**தலைவி தான் காணும் பொருளை எல்லாம் தலைவனோடு ஒப்புமைப்படுத்திக் கூறுவது எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல் என்னும் மெய்ப்பாடாகும். இது காணும் பொருள் எதுவும் தலைவனின் வடிவு, வண்ணம், பண்பு, வினைகளுள் ஒன்றுக்கு ஒப்பெனக் கருதும் காதல் இயல்பு**[83] என விளக்கமளிப்பர் ச.சோமசுந்தர பாரதியார்.

கலித்தொகையில் ஒப்புமைகோடல் என்னும் மெய்ப்பாடானது (கலித்.20:21-23, 40:8-9, 103:11-12, 103:24-27, 103:56-58, 104:57-59, 105:8-18, 105:35-49, 106:7-15, 106:16-19, 119:1-10, 120:5-6, 135:1-5, 131:4-5, 131:21-22, 127:1-5) பதினாறு இடங்களில் இடம்பெற்றுள்ளது. பொருள்வயின் பிரியும் தலைவனிடம் தானும் உடன் வருவதாகக் கூறும் தலைவி,

**“கணை கழிகல்லாத கல் பிறங்கு ஆர் இடை,**

**பணை எருந்து எழில் ஏற்றின் பின்னர்ப்**

**பிணையுங் காணிரோ? பிரியுமோ, அவையே”** **(கலித்.20:21-23)**

என்றுரைப்பள். இதில் தலைவனை ஏற்றுக்கும் தன்னைப் பிணைமானுக்கும் ஒப்புமைப்படுத்திக் கூறுகின்றாள்.

மழையின் வீழ்ச்சி போல் கரிய கூந்தலையும் மதர்த்த நோக்கையும் மையுண்ட கண்களையும் முத்தைப் போன்ற அழகிய முறுவலை உடையவளே எனத் தோழி தலைவியை ஒப்புமைப்படுத்திக் கூறுவதைக் (கலித்.131:21-22) காணமுடிகின்றது.

கலித்தொகையில் தலைவி ஒப்புமைப்படுத்திப் பார்ப்பது மட்டுமின்றி தோழி தலைவியின் அவயங்களைப் பிறவற்றோடு ஒப்பிட்டுப் பார்க்கும் நிலையும் காணப்பெறுகிறது. இது தொல்காப்பியத்தினின்று சங்க காலத்தில் ஏற்பட்ட வளர்ச்சியைப் புலப்படுத்தும்.

## உறுபெயர் கேட்டல்

உறுபெயர் கேட்டல் என்பதற்கு, **தலைவன் பெயர் கேட்டு மகிழ்தல்**[84] என இளம்பூரணரும் **தலைமகன் பெரும் புகழ் கேட்டு மகிழ்தல்**[85] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

தலைவனது பெயரையும் புகழையும் பிறர் கூறக் கேட்டு தலைவி மகிழ்தலே உறுபெயர் கேட்டல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் உறையும் ஊர், இடம், மலை, புகழ் இவற்றைத் தோழி எடுத்துரைக்க தலைவி அதைக் கேட்டு மகிழ்வடைந்தமையைச் சங்கப் பாடல்கள் பதிவு செய்துள்ளன. வெறியாட்டு, கட்டுவிச்சி அல்லது குறிகேட்டல், வள்ளைப்பாட்டு என்னும் மூன்று நிகழ்வுகளும் களவுகாலப் பிரிவில் துயருறும் தலைவியின் நலனைக் கருத்தில் கொண்டு நிகழ்த்தப்படுகின்றன. இவையனைத்தும் தலைவனை நினைவுபடுத்துகிறது எனத் தலைவி அகமகிழ்கின்றாள். கலித்தொகையில் உறுபெயர் கேட்டல் என்னும் மெய்ப்பாடானது (கலித்.40:11-14, 106:43-45, 43:5-7, 41:16-17) நான்கு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

வரைவிடைவைத்துப் பிரிந்த தலைவனது வரைவு நீட்டிப்பு தலைவிக்குப் பெருந்துயரை உண்டாக்கியது. எனவே தலைவிக்கு ஆற்றாமை மிகுதியாகியது. ஆகவே அவளை மகிழ்விக்கக் கருதும் தோழி வள்ளைப்பாட்டு மூலமாகத் தலைவனது புகழை,

**"ஐயனை ஏத்துவாம் போல, அணி பெற்ற**

**மைபடு சென்னிப் பயமலை நாடனை,**

**தையாய்! பாடுவாம், நாம்" (கலித். 43:5-7)**

என்று பாடுகிறாள்.

**"பலவின் பழத்துள் தங்கும் மலைகெழு வெற்பனைப்**

**பாடுகம், வா - வாழி, தோழி!" (கலித்.41:16-17)**

என்னும் பாடலடிகளில் முருகனைப் பாடுவது போலத் தலைவனைப் புகழ்ந்து பாடுவோம் என்கிறாள் தலைவி. மேலும் மலைநாட்டு வளத்தைக் கூறி அத்தகைய மலைநாட்டுத் தலைவனே உன் காதலன் எனத் தோழி கூற இதனைக் கேட்ட தலைவிக்கு உவகை ஏற்படுகின்றது.

கலித்தொகையில் நான்கு பாடல்களில் (கலித்.40,41,42,43) தோழியும் தலைவியும் இணைந்து வள்ளைப் பாட்டைப் பாடுகின்றனர். வள்ளைப் பாட்டில் தலைவனது மலைவளமும் குணநலமும் (கலித்.43:8-10) அழகாகப் பாடப்பட்டுள்ளது.

இன்றும் தனக்குப் பிடித்தவர்களின் பெயரைக் கேட்டாலோ அல்லது பார்த்தாலோ தம்முள்ளே ஏற்படும் மகிழ்ச்சி இம்மெய்ப்பாடே ஆகும்.

## கலக்கம்

கலக்கம் என்பதற்கு, **மனங்கலங்குதல் மேற் 'கலங்கி மொழிதல்' என்பது ஒருகாற் சொல்லின்கண் வந்து பெயர்வது. இது மனங்கலங்கி நிற்கும் நிலை**[86] என

இளம்பூரணரும் **“சொல்லத்தகாதன சொல்லுதல்**[87] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர்.

பிரிவுத்துயரின் போது மனங்கலங்கிய காதலர் ஆற்றாமை மிகுதியில் சொல்லத்தகாதன சொல்லுதல் ‘கலக்கம்’ என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் களவுப் பாடல்களில் ஒரே ஒரு பாடலில் மட்டும் (கலித்.60:27-29) இம்மெய்ப்பாடு இடம்பெறுகிறது. மனக்கலக்கத்தால் சாதலை எல்லையாகக் கூறுதலை,

**“ஒருவன் சாம்ஆறு எளிது” என்பாம், மற்று**
**சிறிது ஆங்கே - ‘மாணா ஊர்அம்பல்’ அலரின் அலர்க என**
**நாணும் நிறையும் நயப்பு இல் பிறப்பு இலி” (கலித்.60:27-29)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. தலைவனின் குறைகளைத் தீர்க்கத் தோழி உதவி புரிபவளாகவும் அதற்குத் தலைவி அம்பல், அலரினால் கவலைப்படாத அவன் இருப்பதற்கு இறந்துவிடலாம் எனக் கூறுவதாக உள்ளது.

இன்றும் தமக்கு துன்பம் நேரும் போதும் பிரிவின் போதும் கலங்குதல் என்பது அனைவருக்கும் பொதுவான ஒரு மெய்ப்பாடாக மாறிவிட்டது.

**வரைவுக்கு வழி வகுக்கும் மெய்ப்பாடுகள் (அ) அழிவில் கூட்ட மெய்ப்பாடுகள்**

வரைவு என்பது திருமணம். களவுக் காதலர்கள் கற்பு வாழ்வில் அடியெடுத்து வைக்கத் திருமணம் இன்றியமையாத ஒன்றாகும். இதற்குரிய மெய்ப்பாடுகளைத் தொல்காப்பியர்,

**“முட்டுவயின் கழறல், முனிவுமெய்ந் நிறுத்தல்,**
**அச்சத்தின் அகறல், அவன்புணர்வு மறுத்தல்,**
**தூதுமுனிவு இன்மை, துஞ்சிச் சேர்தல்,**
**காதல் கைம்மிகல், கட்டுரையின்மை என்று**
**ஆயிரு நான்கே அழிவில் கூட்டம்” (தொல்.நூ.1217)**

என்னும் நூற்பாவில் கூறுகின்றார். இவை களவுக்கும் கற்பிற்கும் பொதுவான மெய்ப்பாடுகளாகும்.

## முட்டுவயின் கழறல்

முட்டுவயின் கழறல் என்பதற்கு, **களவு இடையீடுபட்டுழியதற்கு வருந்தாது இவ்வாறாகி நின்றதென அவனைக் கழறியுரைத்தல்**[88] என்றவாறு என இளம்பூரணரும் **தலைக்கூட்டத்திற்கு முட்டுப் பாடாகியவழிக் கழறியுரைத்தலும்**[89] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர்.

களவொழுக்கத்திற்கு முட்டுப்பாடுகள் வந்த பொழுது இவ்வாறு இருந்ததெனக் கழறியுரைத்தல் முட்டுவயின் கழறல் என்னும் மெய்ப்பாடாகும். வரைவு நீட்டிப்பால் உண்டாகும் தடைகளை எல்லாம் வரைவு வேட்கையை உடைய தலைவி தலைவனிடம் கூறுவாள். இம்மெய்ப்பாடு குறித்து தொல்காப்பியனார் தலைமகட்குரிய மரபினைக் கூறும்போது

**“நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்” (தொல்.நூ.1175:5)**

எனக் கூறுவர். இந்நிலையிலேயே தலைவியிடம் வரைவு கடாதற் குறிப்புத் தோன்றும். வரைவு நிகழும் வரை புணர்ச்சியை விரும்பாத உறுதி நிறை உள்ளத்தினள் ஆனாள் தலைவி” என இளம்பூரணர் விளக்குவர். கலித்தொகையில் முட்டுவயின் கழறல் என்னும் மெய்ப்பாடானது இடம்பெறவில்லை.

## முனிவு மெய் நிறுத்தல்

முனிவு மெய் நிறுத்தல் என்பதற்கு, **வெறுப்பினைப் பிறர்க்குப் புலனாகாமல் மெய்யின் கண்ணே நிறுத்தல்**[90] என இளம்பூரணரும் **தலைமகளுள்ளத்து வெறுப்பு வெளிப்பட நிற்குநிலையும்**[91] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். வரைவு நீட்டிக்கும் தலைவனுக்குத் தலைவி தன் உள்ளத்து வெறுப்பை மெய்ப்படு குறிப்பால் உணர்த்துவது முனிவு மெய் நிறுத்தல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில்

முனிவு மெய் நிறுத்தல் என்னும் மெய்ப்பாடானது இரண்டு இடங்களில் (கலித்.40:19-25, 92:21-22) இடம்பெற்றுள்ளது.

தலைவன் களவு வாழ்வை நீட்டித்த போது அதனை வெறுத்த தலைவி வள்ளைப் பாட்டின் போது இயற்பழித்துப் பாடுகின்றாள்.

**"புரிவிரி, புதை துதை, பூத்ததைந்த தாழ்சினைத்**
**தளிர் அன்ன எழில் மேனி தகைவாட, நோய் செய்தான்**
**அருவரை அடுக்கம் நாம் அழித்து ஒன்றுபாடுவோம்.**
**விண்தோய் வரை, பந்து எறிந்த அயா வீட,**
**தண் தாழ் அருவி, அரமகளிர் ஆடுபவே-**
**பெண்டிர் நலம் வெளவி, தண்சாரல் தாது உண்ணும்**
**வண்டின் துறப்பான் மலை"** **(கலித்.40:19-25)**

என்னும் பாடலடிகள் தலைவன் மீது தலைவி கொண்ட வெறுப்பை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. தலைவன் தான் கண்ட கனவைப் பற்றித் தலைவியிடம் கூறும் போது தலைவி, கொடுக்கின்றவன் தன் மனத்திலே ஓர்த்த ஓசையைத் தானும் ஒலிக்கும் பறை போல, உன்னுடைய நெஞ்சத்திலே நீ விரும்பின இன்பத்தையே கனாவாகக் கண்டாய் எனத் தனது வெறுப்பை (கலித். 92:21-22) முனிந்து கூறுதல் இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

## அச்சத்தின் அகறல்

அச்சத்தின் அகறல் என்பதற்கு, **இவ்வொழுக்கம் பிறர்க்குப் புலனாம் எனக் கூட்டத்தின் அகன்றொழுகுதல்**[92] என இளம்பூரணரும் **தலைமகன்கண் வரும் ஏதமஞ்சி அவனை நீங்குங் குறிப்பும்**[93] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

தலைவனின் களவொழுக்கத்தால் தலைவி ஊரார் அலருக்கு அஞ்சுவதாகக் கூறலும் தலைவன் வரும் வழியில் ஏதங்களால் தீங்கு நேருமோ என அஞ்சுவதாகக் கூறலும் அச்சத்தின் அகறல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவனை விரைவில்

வரைந்து கொள்ளத் தூண்டலே இம்மெய்ப்பாட்டின் நோக்கமும் பயனுமாகும். இம்மெய்ப்பாடு தலைவியிடம் தோன்றும் நிலையை,

**“அம்பலும் அலரும் களவு வெளிப்படுக்கும் என்று**

**அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்” (தொல்.நூ.1171)**

என்னும் தொல்காப்பிய நூற்பா எடுத்துரைக்கின்றது. கலித்தொகையில் அச்சத்தின் அகறல் என்னும் மெய்ப்பாடானது (கலித்.24:15-17, 44:8-10, 44:11-16, 48:14-15, 49:11-13, 49:15-17, 49:19-21, 63:1-3, 103:40-45, 103:50-55) பத்து இடங்களில் இடம்பெற்றுள்ளது. கலித்தொகையில் வரைவு கடாவும் நோக்கில் அச்சத்தின் அகறல் என்னும் மெய்ப்பாடு

- அலரச்சம் கூறல்
- தலைவன் வரும்வழி அச்சம் கூறல்

என்னும் இரண்டு நிலைகளில் காணப்பெறுகிறது.

### அலரச்சம் கூறல்

ஊரார் கூறும் அலர் மொழிக்கு அஞ்சும் தலைவி என்றும் பிரியாதவர் இன்று என்னைத் துறந்து சென்றார் எனப் பிறர் கூறும் பழிக்கு அஞ்சி என் உயிரும் அவருடனே சென்றுவிடும் எனக் கூறுகின்றாள். (கலித்.24:15-17) தலைவி தன் வருத்தத்தை பிறர் அறியாமல் மறைத்தாள். தலைவனுடைய அருளின்மையால் தலைவனை யாரும் பழிகூறுதல் கூடாது எனத் தலைவி அஞ்சியதை,

**“தன்எவ்வம் கூறினும், நீ செய்த அருள் இன்மை**

**என்னையும் மறைத்தாள், என் தோழி அதுகேட்டு**

**நின்னையான் பிறர் முன்னர்ப் பழி கூறல் தான் நாணி” (கலித்.44:8-10)**

**“கூரும் நோய் சிறப்பவும் நீ செய்த அருள் இன்மை**

**சேரியும் மறைத்தாள், என் தோழி -அது கேட்டு,**

**ஓரும் நீ நிலையலை எனக் கூறல் தான் நாணி"      (கலித்.44:11-13)**

என்பன போன்ற பாடலடிகள் புலப்படுத்தும். இதில் தலைவனின் களவொழுக்க நீட்டிப்பு சமுதாயத்தில் அலர் மொழிகளை உண்டாக்கிவிடும் என அஞ்சி பிறர் அறியாமல் மறைக்கின்றாள். தலைவியின் இச்செயல் தோழி தலைவனிடம் வரைவைத் தூண்டுவதற்கு வழிசெய்கின்றது.

## தலைவன் வரும்வழி அச்சம் கூறல்

கலித்தொகையில் இம்மெய்ப்பாடு பன்னிரெண்டு பாடல்களில் இடம்பெற்றுள்ளது. தலைவன் குறியிடம் வரும் வழியில் நேரும் ஏதத்திற்கு அஞ்சுவதாகக் கூறுதல் அச்சத்தின் அகறல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்க வரும் வழியில் மின்னலைக் கொண்டே வழியை உணர்ந்து கொள்ள இயலும். இடி, மழையுடன் சூரர மகளிரையும் உடைய அரிய வழி என வழியின் கடுமையை (கலித்.49:12-13) அறிந்த தலைவி அதற்காக அஞ்சுதல் இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

**"மணம் கமழ் மார்பினை, மஞ்சுஇவர் அடுக்கம் போழ்ந்து,**

**அணங்குடை ஆர்இடை, ஈங்கு நீ வருவதை"      (கலித்.49:16-17)**

**"ஒளிறுவேல் வலன் ஏந்தி, 'ஒருவன் யான்' என்னாது**

**களிறு இயங்கு ஆர் இடை, ஈங்கு நீ வருவதை"      (கலித்.49:20-21)**

என்னும் பாடலடிகள் இம்மெய்ப்பாட்டை நன்கு விளக்கும்.

## அவன் புணர்வு மறுத்தல்

அவன் புணர்வு மறுத்தல் என்பதற்கு, **இது தலைமகன் புணர்ச்சிக்கண் வாராக்காலத்துத் தானும் மனனழியாது நிற்கும் நிலை**[94] என இளம்பூரணரும் **இரவுக்குறியும் பகற்குறியும் விலக்குதற் கெழுந்த உள்ள நிகழ்ச்சியும்; அது, தமரையஞ்சி மறுத்தமையானும் இது வரைவு கடாவுதற்குக் கருத்தாகலானுந் திளைப்பு வினை மறுத்தலொடு இது வேற்றுமையுடைத்து**[95] எனப் பேராசிரியரும் பொருளுரைப்பர்.

தலைவன் இரவு என்றும் பகலென்றும் பாராது களவொழுக்க இன்பமே கருதி இரவுக் குறியும் பகற்குறியும் வந்தொழுகுவான். தலைவியும் தோழியும் வரைவு தடைபடுதலை குறிப்பாக உணர்த்த வேண்டிப் பகற்குறியில் வரும் தலைவனை இரவுக்குறியில் வா என்றும் இரவுக்குறியில் வரும் தலைவனைப் பகற்குறியில் வா என்றும் கூறுவதும் இரண்டு குறியிலும் சந்திக்க மறுத்துக் கூறுதலும் உண்டு. தலைவன் உடனான சந்திப்பைத் தவிர்த்து திருமணம் செய்து கொள்ளத் தூண்டுதலே அவன் புணர்வு மறுத்தல் என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடானது கலித்தொகையில் ஒரு பாடலில் மட்டுமே (கலித்.49:23-25) இடம்பெற்றுள்ளது.

இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவனிடம் இரவுப் பொழுதில் வந்தால் பல இன்னல்கள் ஏற்படுகின்றன. எனவே தலைவியைக் காணப் பகற் பொழுதில் வா எனத் தோழி கூறுவதை,

**“இரவின் வாரல், ஐய! விரவுவீ**

**அகல் அறை வரிக்கும் சாரல்**

**பகலும் பெறுவை, இவள் தடமென்தோளே”   (கலித்.49:23-25)**

என்னும் பாடலடிகளால் அறிய முடிகின்றது. இப்பாடலைத் தவிர பிற பாடல்களில் அவன் புணர்வு மறுத்தல் என்னும் மெய்ப்பாட்டிற்கான குறிப்பு காணப்பெறவில்லை.

## தூது முனிவின்மை

தூது முனிவின்மை என்பதற்கு, **தூதுவிட்ட வழி வெறாமை**[96] என இளம்பூரணரும் **புள்ளும் மேகமும் போல்வன கண்டு செல்லுமின் அவர்க்கென்று தூதிரந்து பன்முறையானுஞ் சொல்லுதலும்**[97] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

வரைவு வேட்கை கொண்ட தலைவி தன் நிலையைத் தலைவனுக்கு உரைக்க எண்ணி மேகம், புள் போன்றவற்றைக் கண்டு விரைந்து வரைவு செய்துகொள்ளுமாறு

தலைவனிடம் கூறுங்கள் எனத் தூதினை முனியாது விடக் கருதியதே தூது முனிவின்மை என்னும் மெய்ப்பாடாகும்.

தலைவி திங்களிடம் நீ எனக்காகத் தலைவனிடம் தூது சென்று வருவாயா என்று வினவுகின்றாள். இதனை,

**“ஊரவர்க்கு எல்லாம் பெரு நகை ஆகி, என்**
**ஆர்உயிர் எஞ்சும்மன்; அங்கு நீ சென்றீ -**
**நிலவு உமிழ் வான் திங்காள்! ஆய்தொடி கொட்ப,**
**அளிபுறம் மாறி, அருளான் துறந்த அக்**
**காதலன் செய்த கலக்குறு நோய்க்கு ஏதிலார்**
**எல்லாரும் தேற்றார் மருந்து”** **(கலித்.145:45-50)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

## துஞ்சிச் சேர்தல்

துஞ்சிச் சேர்தல் என்பதற்கு, **கவற்சியான் உறங்காமையன்றி யுரிமை பூண்டமையான் உறக்கம் நிகழ்தல்**[98] என இளம்பூரணரும் **மனையகத்துப் பொய்த்துயிலோடு மடிந்த வைகுதலும்; துஞ்சுதலெனினும் மடியெனினும் ஒக்கும். வேண்டியவாறு கூட்டம் நிகழப்பெறாமையின் தலைமகனொடு புலந்தாள் போல மடிந்தொன்று மாதலின் அதனைத் துஞ்சிச் சேர்தலென்றானென்பது**[99] எனப் பேராசிரியரும் உரை தந்துள்ளனர்.

வரைவு நீட்டித்து ஒழுகுந்தலைவன் வரவால் தலைவி மகிழாது மனம் அழிந்து தன் உள்ளத்து வருத்தத்தை வெளிப்படுத்துதல் துஞ்சிச் சேர்தல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாட்டிற்கான குறிப்பு காணப்பெறவில்லை.

## காதல் கைம்மிகல்

காதல் கைம்மிகல் என்பதற்கு, **அவ்வழியும் அன்பின்மையின்றிக் காதல் கைமிக்கு வருதல்**[100] என இளம்பூரணரும் **காமங் கையிகந்த வழி நிகழும் உள்ள நிகழ்ச்சி**[101] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இருபத்தியொரு இடங்களில் (கலித். 45:14-15, 53:21-22, 54:9-11, 60:5-6, 124:5-6, 124:9-10, 124:13-14, 126:19-20, 122:21-24, 132:16-19, 135:6-15, 137:1-7, 137:18-22, 121:6-7, 123:9-10, 123:6-7, 123:16-17, 126:19-20, 132:!8-19, 132:21-24, 134:15-16) பயின்று வந்துள்ளது. பிரிந்த தலைவன் தன்னைத் துறந்து விட்டான் என்ற நிலையில் தலைவியிடம் தோன்றுவதே காமம் மிக்க கழிபடர் கிளவியாகும். தலைவனின் வரைவு நீட்டிப்பால் காதல் கைம்மிகப் பெற்ற தலைவியின் மனமானது முழுவதும் வருத்தமே இழையோடியிருக்கும். காதல் மிகுதியாக இருக்கும் நிலையில் வரைவு வேட்கையை நேரிடையாகத் தலைவனிடம் கூறவும் செய்வாள் அல்லது கூறாமலே மெய்ப்படு குறிப்புகளால் உணர்த்தி ஒழுகவும் முற்படுவாள். தலைவியின் காதல் கைம்மிகல் நெட்டுயிர்த்தல், காதலைத் தாங்காது எடுத்துரைத்தல், புலம்புதல் என்னும் மெய்ப்படு குறிப்புகளில் தோன்றும்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றதால் அளவுக்கு அதிகமான காமத்தை அடக்க முடியாமல் தலைவி தவிப்பதை,

**“தாங்கருங் காமத்தைத் தணந்து நீ புறம்மாற,**
**தூங்குநீர் இமிழ்திரை துணையாகி ஒலிக்குமே”** **(கலித்.121:6-7)**
**“காணாமை இருள் பரப்பி, கையற்ற கங்குலான்,**
**மாணா நோய் செய்தான் கண் சென்றாய்”** **(கலித்.123:6-7)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். மேலும் தலைவி தனது களவுக் காதல் வெளியே தெரிந்தால் சுற்றத்தார் அலர் தூற்றுவர் என்றும் பிரிவுத் துயரையும் தன் காம நோயையும் என்னிடம் கூறாமல் மறைத்துவிட்டாள் எனத் தோழி தலைவிக்காக

தலைவனிடம் சென்று விரைவில் மணம் செய்து கொள்ள அறிவுறுத்துகின்றாள். இதில் தலைவி மிகுதியான காதல் நோயை மறைத்தாலும் அவளது தோற்றப் பொலிவானது அழிந்துபட்டதை நுதல், தோள், கண் ஆகிய உறுப்புகள் பிறருக்குக் காட்டிக் கொடுத்துவிட்டதை அறியமுடிகின்றது. (கலித்.124:5-6; 124:9-10; 124:13-14)

**“பொறை ஆற்றா நுசப்பினால், பூ வீந்த கொடி போன்றாள்**

**மறை பிறர் அறியாமை மாணா நோய் உழந்ததை”  (கலித்.132:18-19)**

என்னும் பாடலடிகள் தலைவியின் காதல் மிகுதியைப் பறைசாற்றுகின்றன. மேலும் வழிபட்ட தெய்வம் கூட தலைவிக்கு உதவி புரியாமல் அல்லல் செய்து காதல் நோயை மிகுதிப்படுத்தியதாகக் கூறி தலைவிக்காக தோழி தலைவனிடம் சென்று வரைவு கடாவுதலைக் காணமுடிகின்றது (கலித்.132:21-24)

## கட்டுரையின்மை

கட்டுரையின்மை என்பதற்கு, **கூற்று நிகழ்த்துதலன்றி யுள்ளக் கருத்தினை மறைத்தமர்ந்திருத்தல்**[102] என இளம்பூரணரும் **உரை மறுத்திருத்தலும்; அதனானே அதற்குத் தோழிகண் ணாயினுந் தலைமகன்கண் ணாயினும் உரைமுறை நிகழ்வ தல்லது தலைமகள் உரையாளென்பது பெற்றாம்**[103] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

அச்சம், மடம், நாணம் என்னும் பண்புகள் காரணமாகத் தலைவி தலைவனிடம் ஒருபோதும் தன் வரைவு வேட்கையினை வாய்விட்டுக் கூறமாட்டாள். களவொழுக்கம் நீட்டிக்கும் தலைவனிடம் உடனுறை வாழ்க்கையை விழையும் தலைவி என்னைத் திருமணம் செய்து கொள் என வெளிப்படையாகக் கேட்கமாட்டாள் தலைவி தன் உள்ளக் கருத்தினைக் கூறாமல் வரைவு செய்யத் தூண்டுதலே கட்டுரையின்மை என்னும் மெய்ப்பாடாகும்.

கலித்தொகையில் ஐந்து பாடல்களில் (கலித். 125:8-19, 121:7-23, 121:16-18, 127:14-17, 127:6-9) இம்மெய்ப்பாடு பதிவு செய்யப்பட்டுள்ளது. தலைவன் வரைவு

நீட்டித்தவிடத்து தலைவியின் நிலையினைத் தோழி கூறி விரைவில் மணம் செய்து கொள்ளத் தூண்டுதலை,

**“மகிழ் செய் தே மொழித் தொய்யில் சூழ் இள முலை**
**முகிழ் செய முள்கிய தொடர்பு, அவள் உண்கண்**
**அவிழ் பனி உறைப்பவும், நல்காது விடுவாய்!**
**இமிழ் திரைக் கொண்க! கொடியை காண் நீ,**
**இலங்கு ஏர் எல்வளை ஏர்! தழை தைஇ,**
**நலம் செல நல்கிய தொடர்பு, அவள் சாஅய்ப்**
**புலந்து அழ, புல்லாது விடுவாய்!**
**இலங்கு நீர்ச் சேர்ப்ப! கொடியை காண் நீ**
**இன் மணிச் சிலம்பின் சில்மொழி ஐம்பால்**
**பின்னொடு கெழீஇய தடஅரவு அல்குல்**
**நுண் வரி வாட, வாடாது விடுவாய்!**
**தண்ணந் துறைவ! தகாஅய் காண் நீ”** **(கலித்.125:8-19)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இதில் தலைவியின் பிரிவுத்துயரை தோழி கூறுவதாக உள்ளது. தலைவனைப் பிரிந்த தலைவியைத் துன்பம் வாட்டி வதைக்கின்றது. அவளுக்கு துணையாகக் கடல் அலைகளும் வீசுகின்ற காற்றும், குருகும் அவள் நிலைபற்றிக் கேட்கின்றது. நீ விரைந்து வந்து தலைவியை மணம் செய்து கொண்டு அவள் படும் துயரைப் போக்குவாயாக எனத் தோழி தலைவனுக்குக் கூறுவதாகவும் உள்ளது. (கலித்.121:7-23)

கலித்தொகையில் தலைவிக்காகத் தோழி தலைவனிடம் சென்று வரைவு கடாவுகின்ற போது கட்டுரையின்மை எனும் மெய்ப்பாடு இடம்பெறுகின்றது. இன்றும் தனக்கு ஒன்று வேண்டும் என்ற நிலையில் தனக்காக பேச ஒரு ஆளைக் கூட்டிக் கொண்டு செல்வது என்பது அனைவருக்கும் பொதுவான ஒன்றாக இருத்தல் சுட்டத்தக்கது.

## அகப்புற மெய்ப்பாடுகள்

அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாக முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளைத் தொல்காப்பியர் கூறுகின்றார். அவை

**"ஆங்கு அவைஒரு பாலாக ஒருபால்**
**உடைமை இன்புறல் நடுவுநிலை அருளல்**
**தன்மை அடக்கம் வரைதல் அன்பு எனாஅக்**
**கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்**
**நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவு எனாஅ**
**முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை**
**கருதல் ஆராய்ச்சி விரைவு உயிர்ப்பு எனாஅக்**
**கையாறு இடுக்கண் பொச்சாப்புப் பொறாமை**
**வியர்த்தல் ஐயம் மிகைநடுக்கு எனாஅ**
**அவையும் உளவே அவை அலங்கடையே" (தொல்.நூ.1206)**

என்பதாகும். இந்நூற்பாவிற்கு, **மேற்சொல்லப்பட்ட எண்வகை மெய்ப்பாடும் ஒழிய வேறுபட்டு வருவன சில மெய்ப்பாடு உணர்த்துதல் நுதலிற்று**[104] என இளம்பூரணரும் **ஆங்கவை ஒரு பாலாக எள்ளன் முதலாக விளையாட்டு இறுதியாகச் சொல்லப்பட்ட முப்பத்திரண்டும் ஒருகூறாக; ஒருபாலென்பது,இனிச் சொல்லுகின்ற ஒருகூறென்றவாறு பின்னர் அவற்றையெல்லாம் எண்ணி 'இவையு முளவே யவைலங்கடையே' என்றான். ஈண்டெண்ணப்பட்டவையே ஆண்டு அடங்குவனவும் உள; அப்பொருண்மைய வல்லாத விடத்து இவை முப்பத்திரண்டும் ஈண்டு மெய்ப்பாடெனப்படும் என்றவாறு**[105] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர். இதன்வழி இவை முப்பத்திரண்டும் மேற்கூறிய முப்பத்திரண்டும் போல, அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகி நிகழும் மெய்ப்பாடு என்பது புலனாகும்.

**உடைமை**

உடைமை என்பதற்கு, **யாதானும் ஒரு பொருளை உடையனாயினால் வருதலாகும் மனநிகழ்ச்சி**[106] என இளம்பூரணரும் **உடைமை என்பது செல்வம்; செல்வ நுகர்ச்சியாயின் உவகைப் பொருளாம்; இ.்.து அன்னதன்றி நுகராதே அச்செல்வந்தன்னை நினைந்து இன்புறுதற்கு ஏதுவாகிய பற்றுள்ளம்; அ.்.தாவது, 'நதிமேனின்ற மரம்' போலச் செல்வமுடைமையான் வரும் மெய் வேறுபாடு**[107] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

உடைமை என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் உடைமை, உடைமையால், உடையது, உடையவர், உடையன் என்னும் பெயர்களில் பதினான்கு பாடல்களில் (கலித். 34:5-10, 39:9-10, 41:15-16, 42:1-4, 43:5-6, 43:16, 44:6-7, 46:8-9, 47:1-2, 47:5-6, 49:8-9, 49:10-11, 61:26-28, 149:2-3) இடம்பெற்றுள்ளது. களவுப் பாடல்களில் தலைவன் பற்றிக் கூறும் போது அவனது நாட்டு வளம், மலை வளம் கூறி அத்தகைய நாட்டிற்கு உடையவன் என்னுமிடத்தில் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது.

நிலவைத் தேன்கூடு என நினைத்து நூலேணி இழைத்துக் கொண்டிருக்கும் காடுகள் சூழ்ந்த நாட்டிற்கு உடையவன் தலைவன் (கலித்.34:5-10) என்று காட்டின் வளத்தைக் கூறி அத்தகைய காட்டையும் உள்ளடக்கிய நாட்டை உடையவன் தலைவன் என்னும் நிலையில் அவனது நாட்டு வளமும் செல்வமும் அவனுக்குரியதாக இருத்தல் சுட்டப்பெறுகிறது.

**"மறம் கொள் இரும்புலித் தொல் முரண் தொலைத்த**
**முறம் செவி வாரணம் முன்குளகு அருந்தி,**
**கறங்கு வெள் அருவி ஓலின் துஞ்சும்**
**பிறங்கு இருஞ்சோலை நல்மலை நாடன்" (கலித்.42:1-4)**

என்னும் பாடலடிகளில் மலைநாட்டை உடைய தலைவன் என்பதில் உடைமை என்னும் மெய்ப்பாடு சுட்டப்படுகின்றது. தோழி தலைவனின் மலைவளத்தைப் பற்றி வள்ளைப்பாட்டில் கூறுவதை,

**"அணிபெற்ற மைபடு சென்னிப் பயமலை நாடன்" (கலித்.43:5-6)**

**"வருடைமான் குழவிய வளமலை நாடன்" (கலித்.43:14)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். விலங்குகள் நிறைந்த காடு, பள்ளத்தில் குதித்து ஓடும் அருவியில் நிறைந்த நீர் எனப் பல்லுயிர்கள் நிறைந்த மலைவளத்தை உடையவன் தலைவன் (கலித்.46:1-9) என்பன இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

### அருளல்

அருளாவது, **எல்லா உயிர்க்கும் அளிசெய்தல்**[108] என இளம்பூரணரும் **மக்கண் முதலிய சுற்றத்தாரை அருளுதல்; அ∴து, ஆண்டைக் கருணையினை அழுகையென்றமையின் இ∴து அதனோடடங்காது**[109] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர். இம்மெய்ப்பாடு கலித்தொகையில் அருள், அருள, அருளி, அருளியோர், அருளின, அருளீம், அருளுவார் என்னும் சொற்களின் வழி ஒன்பது இடங்களில் (கலித். 38:14-17, 39:1-3, 40:31-32, 41:41-42, 49:18-19, 116:10-12, 121:20-22, 122:14-15, 136:9-10) காணப்பெறுகின்றது.

களவிலே வள்ளைப்பாட்டைப் பாடும் போது தலைவனின் மலையைப் பற்றிப் பாடியதைச் சிறைப்புறமாக நின்று கேட்ட தலைவன் (40:31-32) அருள் செய்தான்.

மேலும் தலைவன் இல்லாத நிலையில் பொருளில்லாதவன் இளமை போல இருந்த தலைவி அதிகாலைவேளையில் தலைவன் வந்து அருள் செய்த நிலையில் தெளிவு பெற்றதை,

**"இருள் இடை என்னாய் நீ இரவு அஞ்சாய் வந்தக்கால்,**
**பொருளில்லான் இளமைபோல் புல்லென்றாள், வைகறை**

**அருள் வல்லான் ஆக்கம் போல் அணிபெறும் அவ்வணி**

**தெருளாமல் காப்பது ஓர் திறன் உண்டேல், உரைத்தைக் காண்''**

**(கலித்.38:14-17)**

என்னும் பாடலடிகள் விளக்கும். எறிகின்ற திரை கொண்டு வந்து போட்ட மீன் துயருற்று வருந்தாமல் மீள்கின்ற திரை அருளுடன் அணைத்துக் கொண்டு போவதைப் போல மெலிந்து வருந்திய தலைவிக்கு நீ அருள் செய்ய வேண்டும் என்றமை (கலித்.121:20-22) தலைவன் அருள் செய்த போது தாய விளையாட்டில் சிறு தாயம் விழுந்தவள் போல தலைவி மகிழ்ந்தமை (கலித்.136:9-10).

தலைவி தோழியருடன் நீராடச் சென்றாள். கால் தளர்ந்து நீரோடு அடித்துச் செல்லப்பட்டாள். அதைக் கண்ட ஒருவன் செய்த அருளினால் தலைவி காப்பாற்றப்பட்டமை (கலித்.39:1-3) இம்மெய்ப்பாட்டிற்குரியதாக உள்ளது.

தலைவன் தலைவியின் அருளை வேண்டி நிற்கிறான். தலைவி அருள் செய்து விட்டாள் என்றால் எத்தகைய துன்பம் வந்தாலும் நான் அஞ்சாமல் எதிர்த்து நிற்பேன் என்கிறான். இதனை,

**''யாய் வருக ஒன்றோ; பிறர்வருக; மற்று நின்**

**கோவரினும் இங்கே வருக; தளரேன் யான்,**

**நீ அருளி நல்கப் பெறின்''** **(கலித்.116:10-12)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவன் தலைவியின் அருளினை வேண்டி நிற்பதும், தலைவி தலைவனின் அருளுக்காகக் காத்துக் கொண்டிருத்தலையும் கலித்தொகைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

## தன்மை

தன்மை என்பதற்கு, **சாதியியல்பு. பார்ப்பார், அரசர், இடையர், என்றின்னோர்மாட்டு ஒருவரையொருவர் ஒவ்வாமற் கிடக்குமியல்பு. அது மெய்க்கடமையின் கண் வேறுபட்டு வருதலின் மெய்ப்பாடாயிற்று**[110] என இளம்பூரணரும்

**சாதித்தன்மை; அவையாவன: பார்ப்பாராயிற் குந்தி மிதித்துக் குறுநடை கொண்டு வந்து தோன்றலும், அரசராயின் எடுத்த கழுத்தொடும் அடுத்த மார்பொடும் நடந்து சேறலும், இடையராயிற் கோற்கையுங் கொடுமடியையும் விளித்த வீளையும் வெண்பல்லுமாகித் தோன்றலுமென் றின்னோரன்ன வழக்கு நோக்கிக் கொள்க**[111] எனப் பேராசிரியரும் பொருள் விளக்கம் தருகின்றனர்.

கலித்தொகையில் தன்மை என்னும் மெய்ப்பாடானது ஒரு பாடலில் மட்டுமே (கலித்.108:10-13) இடம்பெற்றுள்ளது. காயாம்பூவினையும் துவரூட்டின கரிய ஆடையும் அணிந்து மேய்கின்ற ஆநிரைகளின் முன்னர்க் கோலூன்றி நிற்கின்ற ஆயனை,

**“காயாம்பூங் கண்ணிக் கருந் துவர் ஆடையை,**
**மேயும் நிரை முன்னர்க் கோல் ஊன்றி நின்றாய், ஓர்**
**ஆயனை, அல்லை; பிறவோ அமரருள்**
**ஞாயிற்றுப் புத்தேள் மகன்?” (கலித்.108:10-13)**

என்று காட்சிப்படுத்தும் கலித்தொகை. இதில் ஆயனின் தன்மை சுட்டப்பெறுகிறது.

## வரைதல்

வரைதல் என்பதற்கு, **செய்யத் தகுவனவும் தவிரத் தகுவனவும் வரைந்து ஒழுகும் ஒழுக்கம்**[112] என இளம்பூரணரும் **காப்பன காத்து கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம்; அவை: பார்ப்பாராயின் முத்தீ வேட்டலும் புலவுங் கள்ளும் முதலாயின கடிதலுமென் றின்னோரன்ன கொள்க. வரைதல் என்பது தொழிலாதலான் இது தன்மையெனப்படாது**[113] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர். கலித்தொகையில் வரைதல் என்னும் மெய்ப்பாடானது இடம்பெறவில்லை.

## அன்பு

அன்பு என்பதற்கு, **பயின்றார் மாட்டுச் செல்லுங் காதல்**[114] என இளம்பூரணரும் **அருட்கு முதலாகி மனத்தில் நிகழும் நேயம்; அஃதுடையார்க்குப் பிறர்கட்டுன்பங் கண்டவழிக் கண்ணீர் விழுமாதலின் அவ்வருளானே அன்புடைமை விளங்குமென்பது**

**இவையெல்லாந் தத்த மனத்தி னிகழ்ச்சியை வெளிப்படுப்பனவாகலின் மெய்ப்பாடெனப்பட்டன. இனி வருகின்றவற்றிற்கும் இ∴.தொக்கும்**[115] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர். **அன்புடையார்கண் நிகழும் நோவின் நோதல் ஒண்பொருள் கொடுத்தல், நன் இனிது மொழிதல், புணர்வு நனி வேட்டல், பிரிவு நனி இரங்கல் முதலிய செயல்களைக் கொண்டே அவர்மாட்டு அன்பு உள்ளது என்பதனை அறிந்து கொளல் வேண்டும் என இறையனார் அகப்பொருளும் இம்மெய்ப்பாடு குறித்து உரைக்கின்றது**[116] என்பர் தி.வே.கோபாலையர்.

கலித்தொகையில் அன்பு என்னும் மெய்ப்பாடானது எட்டு இடங்களில் (கலித். 40:26-27, 49:14-15, 50:21-23, 80:1-2, 106:31-32, 122:18-19, 133:9-10 148:9-10) இடம்பெற்றுள்ளது. அன்பு பற்றி நல்லந்துவனார்,

**"அன்பு எனப்படுவது தன்கிளை செறா அமை" (கலித்.133:9)**

என்கிறார். அன்பு கொண்ட காதலர்கள் கைகோர்த்துக் கொண்டு இன்பமாகத் தழுவியாடும் குரவைக் கூத்தினை ஆடுகின்றனர் (கலித்.106:31-32). தலைவி இன்புறும் படியாக மகிழ்வித்த தலைவனின் அன்பை

**"இன்புற அளித்தனை இவள் மாட்டு நீ இன்ன**
**அன்பினை என்பதோ இனிது" (கலித்.49:14-15)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். மேலும் தலைவன் சிறிது நேரம் அன்பு செய்தாலும் என் நெஞ்சமானது தலைவனிடமே செல்கின்றது எனத் தலைவி கூறுகிறாள் (கலித்.122:18-19) தலைவனிடம் உள்ள அன்பு மாறினாலும் நான் தலைவனிடம் கொண்டுள்ள அன்பானது என்றும் மாறாது (கலித்.80:1-2) எனத் தலைவி கூறுவதில் அன்பின் ஆழத்தை அறிய முடிகின்றது.

## கைம்மிகல்

கைம்மிகல் என்பதற்கு, **குற்றமாயினுங் குணமாயினும் அளவின் மிகுதல்**[117] என இளம்பூரணரும் **ஒழுக்கக்கேடு; அது சாதித் தருமத்தினை நீங்கினமை தன்னுள்ள நிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்றால் ஒழுகுதல்**[118] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

தமக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுங்கை மீறி நடத்தலே கைம்மிகல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் தலைவன் பிரிந்து சென்ற நிலையில் ஏற்படும் காம மிகுதியினைப் பற்றிய குறிப்பே காணப்படுகின்றது. அதனைத் தவிர்த்து கைம்மிகல் குறித்து குறிப்புகள் காணப்பெறவில்லை.

## நலிதல்

நலிதல் என்பதற்கு, **பிறரை நெருக்குதல் அதன்கண் நிகழும் மனநிகழ்ச்சி நலிதலாயிற்று. இதுவும் மேற்சொல்லப்பட்ட எட்டும் இன்மையின் ஈண்டு ஓதப்பட்டது**[119] என இளம்பூரணரும் **பிறர்க்கின்னா செய்து நெருக்குதல்; அது தீவினை மாக்கட்கண் நிகழும். அவரைக் கண்டு அச்சம் எழுந்தாயின் அ∴து அச்சத்தினுள் அடங்குமாகலின் அ∴தன்று இ∴தென்பது**[120] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர்.

கலித்தொகையில் நலிதல் என்னும் மெய்ப்பாடானது ஐந்து இடங்களில் (கலித். 53:18-19, 51:9-10 33:16-17, 137:13-17, 142:56-58) இடம்பெற்றுள்ளது. இளவேனில் காலமானது பிரிந்துள்ள மகளிர்க்கு துன்பம் தரக் காத்திருந்ததை,

**“நொந்து நகுவன போல்நந்தின, கொம்பு, நைந்து உள்ளி**
**உகுவதுபோலும் என் நெஞ்சு”** **(கலித்.33:16-17)**

என்பதால் அறியமுடிகின்றது.

களவிலே நனவிலே வந்து தன் அழகு கெடும்படியான துன்பத்தைத் தந்தவன் தலைவன் (கலித்.53:18-19) எனவும் தலைவன் பிரிந்து சென்றதால் ஏற்பட்ட நோயானது பகைமையை விட மிகக் கொடியது என்பதை,

**“நகை முதலாக, நட்பினுள் எழுந்த**

**தகைமையின் நலிதல் அல்லது, அவர் நம்மை**

**வகைமையின் எழுந்த தொல்முரண் முதலாக**

**கைமையின் நலிதலோ இலர்மன்; ஆயிழை!” (கலித்.137:13-16)**

என்னும் பாடலடிகள் விளக்கும். குறிஞ்சிக்கலியில் தலைவியின் இல்லத்திற்கு தலைவன் வருகின்றான். தண்ணீர் வேண்டி நின்ற போது தாய் சொல்லிற்கு இணங்கி தண்ணீர் கொடுக்கச் சென்ற தலைவியின் முன்கையைப் பற்றி நலியச் செய்தான் (கலித்.51:9-10).

தலைவி, தலைவனின் பிரிவை எண்ணி அலைந்து மெலிந்தேன் என உயிர் மெலியும் அளவும் பொறுத்த நிலையில் இறந்துபடுவதற்கு முன்பு இதனைக் களைவீராக எனக் கூறுவதை,

**“நலிதரும் காமமும் கௌவையும் என்று, இவ்**

**வலிதின் உயிர் காவாத் தூங்கி ஆங்கு என்னை**

**நலியும் விழுமம் இரண்டு” (கலித்.142:56-58)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

### சூழ்ச்சி

சூழ்ச்சி என்பதற்கு, **எண்ணம்**[121] என இளம்பூரணரும் **சுழற்சி, சூழ்வருவானைச் சுழல் வருமென்ப வாகலின்; அது வெளிப்படுவதோர் குறிப்பின் அவன்கட்டோன்றின் அதுவும் மெய்ப்பாடு; அ∴தாவது மனத்தடுமாற்றம்**[122] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

மனதில் உள்ள எண்ணம் ஏதாவது ஒரு குறிப்பால் வெளிப்படுவதே இம்மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடானது ஆறு இடங்களில் (கலித்.45:23-24 3:14-15, 4:7-8, 24:4-5, 4:11-12, 95:12-13) காணப்பெறுகிறது. தலைவன் எண்ணுவதை இது என அறியமுடியாமல் தலைவி தவிக்கும் நிலையை,

**“வெள்வேல் வலத்திர் பொருள்தரல் வேட்கையின்,**

**உள்ளினிர் என்பது அறிந்தனள், என்தோழி”** **(கலித்.4:7-8)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். தலைவன் என்றும் இல்லாமல் தன்னை மிகவும் புகழ்வதானால் அவன் மனதில் உள்ள எண்ணத்தை அறிய முடியாததையும் இதில் ஏதோ ஒரு உள்நோக்கம் உள்ளது எனத் தலைவி எண்ணுவதும் (கலித்.24:4-5) இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

தலைவன் வரைவு நீட்டித்த போது தலைவியின் நிலை பற்றிப் பலவற்றையும் கூறினாள் தோழி. அதில் உள்ள உண்மையை அறிந்து கொண்டான் தலைவன். களவு ஒழுக்கத்திலே விருப்பம் கொண்ட உறவை வரைவு முயற்சியால் மாற்ற எண்ணியதை,

**“தன் தீமை பல கூறிக் கழறலின், என் தோழி**

**மறையில் தான் மருவுற மணந்த நட்பு அருகலான்,**

**பிறை புரை நுதல்! அவர்ப் பேணி, நம்**

**உறை வரைந்தனர், அவர் உவக்கும் நாளே” (கலித்.45:23-26)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். இதில் சூழ்ச்சி எனும் மெய்ப்பாடு நன்கு வெளிப்படும்.

## வாழ்த்தல்

வாழ்த்தல் என்பதற்கு, **பிறரை வாழ்த்துதல்**[123] என இளம்பூரணரும் **பிறரால் வாழ்த்தப்படுதல்; இது பிறவினையன்றோவெனின், ஒருவனை நீடு வாழ்க என வாழ்த்தல் பிறவினையாயினும் அவன் வாழ்விக்கப்படுதலின் அவன் அவ்வாறு கூறல் அமையுமென்பது**[124] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

ஒருவரை வாழ்த்தும் போது வரும் மனநிகழ்ச்சி. கலித்தொகையில் இம்மெய்ப்பாடானது பதினொரு இடங்களில் (கலித். 40:6-7, 103:75-79, 104:78-80, 105:1-

6, 106:47-50, 139:1-2, 141:9-10, 141:19-20, 147:20-21, 96:20-21, 96:30-31) இடம்பெற்றுள்ளது.

அகப்பாடலில் தெய்வத்தைப் பாடுவது மட்டுமின்றி தம் அரசனையும் எம் கோ வாழியர்' என்று வாழ்த்துகின்றனர். இது அகப்பாடல் மரபுகளுள் ஒன்றாகும். முல்லைக்கலியில் குரவைக்கூத்தின் இறுதியில் தெய்வத்தையும் பாண்டிய மன்னனையும் வாழ்த்துகின்றதை,

**"குரவை தழீஇ, யாம், மரபுளி பாடி**
**தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும் -**
**மாசுஇல் வான் முந்நீர்ப் பரந்த தொல் நிலம்**
**புணர்ந்த ஆளுங் கிழமை யொடு**
**எம்கோ வாழியர், இம் மலர் தலை உலகே!" (கலித்.103:75-79)**

என்னும் பாடலடிகளின் வழி அறியலாம். இடியோசை போன்ற முரசினை உடைய தென்னவனுக்கு இவ்வுலகம் சேர்வதாக (கலித்.104:78-80) எனவும் பாண்டிய மன்னன் வீரம் மிக்கவன், பகைவர்களை அழித்துத் தன் நாட்டை விரிவுபடுத்தியவன் எனவும் வாழ்த்திப் பாடுகின்றனர். மேலும் அரச வாழ்த்தானது பாட்டின் இறுதியில் மட்டுமின்றி ஒரு பாடலின் தொடக்கத்திலும் இடம் பெற்றுள்ளது.

**"அரைசுபடக் கடந்து அட்டு, ஆற்றின் தந்த -**
**முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்கு -**
**சீர்மிகு சிறப்பினோன் தொல்குடிக்கு உரித்து எனப்**
**பார்வளர், முத்தமொடு படுகடல் பயந்த**
**ஆர்கலி உவகையர் ஒருங்கு உடன் கூடி,**
**தீது இன்று பொலிக!" (கலித்.105:1-6)**

என்னும் பாடலடிகள் பாட்டின் தொடக்கத்திலேயே பாண்டிய மன்னன் எல்லா வளமும் பெற்றுக் குறைவின்றி வாழ வேண்டும் என வாழ்த்துதல் காணப்பெறுகிறது.

வள்ளைப்பாட்டை பாடத் தலைவி, தோழியை அழைக்கும் போது பாடுகம் வா! வாழி தோழி!, நல்தோழி, வாழி தோழி என்பதில் வாழ்த்துதல் என்னும் மெய்ப்பாடானது இடம்பெற்றுள்ளது. மேலும் இப்பாடலில் உலக்கையை மாற்றி மாற்றி உயர்த்திக் குற்றிக் கொண்டே தலைவனது மலையை வாழ்த்திப் பாடுவோம் எனத் தலைவியை தோழி அழைப்பதும் (கலித்.40:6-7) இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

கற்புப் பாடலில் இம்மெய்ப்பாடானது தலைவனை தீங்கில்லாமல் வாழ வேண்டும் எனத் தலைவி வாழ்த்தும் நிலையில் வெளிப்பட்டுள்ளது (கலித்.96:30-31).

**நாணம்**

நாணம் என்பதற்கு, **தமக்குப் பழிவருவன செய்யாமை**[125] என இளம்பூரணரும் **நாணுள்ளம் பிறர்க்கும் வெளிப்பட நிகழும் நிகழ்ச்சி**[126] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். தான் ஒரு செயல் செய்வது குறித்து உள்ளத்தில் நாணுகின்றமையே இம்மெய்ப்பாடு எனலாம். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இருபத்துமூன்று (கலித். 39:41-42, 40:1-3, 44:15-16, 44:9-10, 44:13-14, 47:20-21, 49:5-9, 60:28-29, 60:30-32, 61:20-21, 62:1-2, 131:15-16, 138:4-5, 142:7-8, 145:10-11, 146:11-12, 146:20-21, 147:9-10, 3:1-2, 69:3-4, 70:5-6, 78:16-17, 98:17-18) இடங்களில் இடம்பெற்றுள்ளது.

ஊரார் கூறும் அலருக்குத் தலைவி நாணுதல் (கலித்.3:1) தலைவி தன் திருமணத்தின் போது நாணத்தால் முகத்தை மறைத்துக் கொள்ளுதல் போன்றவற்றில் தலைவிக்கு ஏற்படும் நாணம் என்னும் மெய்ப்பாட்டினைக் (கலித்.39:41-42) காணமுடிகின்றது.

வள்ளைப்பாட்டு பாடத் தோழியை அழைக்கும் தலைவி விரும்பத்தக்க கண்களையும் மகிழ்ச்சியைத் தரும் மொழியினையும் உடைய நல்ல மகளிர் தலை சாய்த்து நாணுவதைப் போல தினைக் கதிர்கள் சாய்ந்து நின்றன என உவமைப்படுத்துகின்றதில் நாணம் என்னும் மெய்ப்பாடு இடம்பெறுகின்றது (கலித்.40:1-3). தலைவனின் அருளில்லாத செயல்களைப் பிறர் அறிய நேர்ந்தால் அலர் தூற்றுவர்

என நாணி தலைவி அதனைப் பிறர் அறியாமல் மறைத்தலும் (கலித்.44:15-16, கலித்.44:9-10) இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

மணல் மேல் ஓடும் நண்டுகளானது தங்களைக் கண்டு நாணங் கொண்டு தம் வளையிலே புகுந்து மறைந்ததைத் தோழி,

**"நாணின கொல், தோழி? நாணின கொல், தோழி?**

**இரவு எலாம் நல்தோழி நாணின" (கலித்:131:15-16)**

என்றுரைப்பள்.

யானையானது புதிதாக மலர்ந்து நின்ற வேங்கை மரத்தைப் புலியென்று எண்ணி அதன் நலத்தைக் கெடுத்தது. பின்பு அது மரம் என அறிந்து அம்மரத்தைக் காண முடியாமல் தலையைக் கவிழ்த்து நாணம் தோன்றச் சென்றது எனத் தலைவனின் மலைவளம் பற்றிய செய்திகளைக் கூறுமிடத்து நாணம் என்னும் மெய்ப்பாடு (கலித்.49:5-9) இடம்பெறுகின்றது. இதன்வழி அ∴றிணை உயிரினங்களுக்கும் உரியதாக இம்மெய்ப்பாடு இருத்தல் சுட்டத்தக்கது.

**துஞ்சல்**

துஞ்சல் என்பதற்கு, **உறக்கம். அதுவும் உறங்காமை போலாமையின் மெய்ப்பாடாயிற்று**[127] என இளம்பூரணரும் **துஞ்சலென்பது, உறக்கம்; அது நடந்துவருகின்றான் கண்ணும் விளங்கத் தோன்றுதலின் அதுவும் மெய்ப்பாடெனப்பட்டது**[128] எனப் பேராசிரியரும் பொருளுரைப்பர்.

கலித்தொகையில் இம்மெய்ப்பாடானது பதின்மூன்று இடங்களில் (கலித். 45:18-19, 48:14-15, 49:1-2, 60:30-31, 70:7-8, 85:27-28, 122:21-22, 123:16-17, 139:6-7, 144:57-58, 145:24-25, 145:41-42, 146:38-39) காணப்படுகிறது.

களவில் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவனிடம் தோழி தலைவியின் நிலையைக் கூறும் போது ஊராரும் அயலாரும் அலர் தூற்றினர். இருப்பினும் உன்

வருகையை எண்ணித் தூங்காமல் காத்திருந்தாள் (கலித்.48:14-15) என்றாள். தலைவன் பிரிந்து சென்றதனால் அவள் பல நாள் தூங்காமல் அவன் வரவிற்காகக் காத்திருந்ததை (கலித்.70:7-8, 85:27-28) அறியமுடிகின்றது. தலைவன் மீது கொண்ட அளவற்ற காதலானது நடுஇரவிலும் தூங்க விடாமல் செய்ததை,

**"யாம் நடுநாள் துயில் கொண்டு ஒளித்த**

**காம நோயின் கழீஇய நெஞ்சம்" (கலித்.122:21-22)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். தலைவியைக் கண்டு காதல் கொண்ட தலைவன் அந்நாளில் இருந்து தூங்கவில்லை என்பதை,

**"ஒளியோடு உரு என்னைக் காட்டி, அளியள், என்**

**நெஞ்சு ஆறு கொண்டாள்; அதற்கொண்டும் துஞ்சேன்" (கலித்.139:6-7)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தான் தூங்காமல் இருப்பதற்கான நோயைச் செய்தவன் தலைவன் என்கிறாள் தலைவி. (கலித்.144:57-58)

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள் தேடப் பிரிந்து சென்றுள்ளான். அவனை எண்ணி நடு இரவிலும் தூக்கம் இல்லாமல் மனம் தடுமாறுகின்ற தலைவியின் நிலையைத் தோழி கூற்றின் வழி அறியமுடிகின்றது (கலித்.45:18-19) பொறுத்தற்கரிய காம நோயினைச் செய்தவனான தலைவனை எண்ணித் தலைவி பகலும் இரவும் உறக்கத்தைக் கைவிட்டதை,

**"எல்லையும் இரவும் துயில்துறந்து, பல்ஊழ்**

**அரும்படர் அவல நோய் செய்தான் கண்பெறல் நசைஇ" (கலித்.123:16-17)**

என்னும் பாடலடிகள் உரைக்கும்.

### கனவு

கனவு என்பதற்கு, **வாய் வெருவுதல்; அதனானும் அவனுள்ளத்துக் கண் நிகழ்கின்ற தொன்று உண்டென் றறியப்படும் என்கிறார்**[129] பேராசிரியர். கனவு என்பது உறக்கத்தில் வாய் உளறுதல். தன்னை அறியாமல் தன் மனதில் நினைத்து

இரகசியமாக வைத்திருக்கும் செய்தியை வெளியிடுதல். இது உறக்கத்தில் நிகழும் உணர்வு வெளிப்பாடு. கலித்தொகையில் கனவு என்னும் மெய்ப்பாடானது எட்டு பாடல்களில் (கலித். 39:41-44, 39:33-36, 48:3-4, 53:18-19, 126:16-17, 128:8-9, 128:23-24, 128:14-17) இடம்பெற்றுள்ளது.

குறிஞ்சிக்கலியில் தலைவனைப் பிரிந்த தலைவி அவனுடைய நினைவைக் கொண்டு கனவிலே வாழ்ந்ததாகவும் திருமணம் நடைபெற்றவுடன் கனவில் உறவாடும் எண்ணத்தை நிறுத்தி விடுவதாகவும் உரைத்தல் (கலித்.39:33-36). நனவில் நாம் திரும்பத் திரும்ப நினைப்பதே கனவில் வரும் என்பதை,

**“நனவில் தான் செய்தது மனத்தது ஆகலின்**
**கனவில் கண்டு, கதுமென வெரீஇ”** **(கலித்.48:3-4)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவன் பிரிந்து சென்ற நிலையில் தலைவி கனவிலே தலைவனுடன் வாழ்வதையும் (கலித்.53:18-19) கலித்தொகை உரைக்கின்றது.

## முனிதல்

முனிதல் என்பதற்கு, **வெறுத்தல்**[130] என இளம்பூரணரும் **வெறுத்தல்; அ∴து, அருளுஞ் சினமுமின்றி இடைநிகர்த்தாதல்; ‘வாழ்க்கை முனிந்தா’ னெனவும், ‘உறையுண் முனியுமவன் செல்லுமூரே’ எனவுஞ் சொல்லுபவாகலின்**[131] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். முனிதல் என்னும் மெய்ப்பாடு கலித்தொகையில் புலவர்களால் பாடப்பெறவில்லை.

## நினைத்தல்

நினைத்தல் என்பதற்கு, **கழிந்தனை நினைத்தல். அது மறந்தாங்கு மறவாது பின்புந் தோற்றுதலின் மெய்ப்பாடாயிற்று**[132] என இளம்பூரணரும் **விருப்புற்று நினைத்தல்; ‘நின்னை மிகவும் நினைத்தேன்’ என்பது வழக்காதலின்; அந்நினைவுள்ளம் பிறர்க்குப் புலனாதலின் மெய்ப்பாடாயிற்று**[133] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

நினைத்தல் என்னும் மெய்ப்பாடானது களவில் பத்துப் பாடல்களில் (கலித். 48:13-14, 60:10-1, 62:3-4, 110:18-19, 116:13-14, 118:9-10, 119:9-10, 126:14-15, 126:19-20, 134:19-20) பயின்று வந்துள்ளது. பறவைகளும் கறவையினங்களும் மாலை நேரத்தில் தனது குஞ்சுகளையும் கன்றுகளையும் நினைத்துக் கொண்டே இருப்பிடத்திற்குத் திரும்புதல் (கலித்.119:9-10), பலவும் நினைத்து வருந்தும் நோயுடைய நெஞ்சத்தவளாகத் தலைவி தவித்தல் (கலித்.126:19-20), அழிவில்லாத காம நோயினைச் செய்தவனை நினைத்து கண்களில் நீர் நிறையத் துயரிலே ஆழ்தல் (கலித்.134:19-20) போன்றவை இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும். நினைவு என்பது மனிதர்களுக்கு மட்டுமின்றி விலங்குகளுக்கும் உரிய மெய்ப்பாடாகக் கலித்தொகையில் காணப்பெறுகின்றது.

**மடிமை**

மடிமை என்பதற்கு, **சோம்புதல்**[134] என இளம்பூரணரும் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். குடிப்பிறந்தானிடம் மடிமை இருப்பின் அஃது அவனைப் பகைவருக்கு அடிமையாக்கிவிடும். சோம்பியிருப்பவன் உள்ளம் அவன் குணம் செயல் இவற்றால் புலப்படுதலின் மெய்ப்பாடாயிற்று. இது நற்காமத்துக்கு ஆகாத மெய்ப்பாடாகும். நாள்தோறும் நிகழ்த்தும் இல்லறத்துக்குத் தடையாக அமையும் என்பதால் விலக்கப்பட்டது. களவில் இரண்டு பாடல்களில் (கலித். 39:1-2, 55:16-18) மட்டும் இம்மெய்ப்பாட்டிற்கான குறிப்பு காணப்படுகின்றது.

தலைவி நீராடச் செல்லும் போது பெருகி வந்த வெள்ளத்தால் கால்கள் தளர்ந்து நீரோடே சென்ற நிலையில் தலைவன் காப்பாற்றியமை (கலித்.39:1-2). வலையர்கள் விலங்குகளின் சோர்வைக் கண்டு அகப்படுத்த எண்ணுவதைப் போலத் தலைவனும் தலைவியின் மடிமை கண்டு அகப்படுத்த எண்ணுதல் (கலித்.55:16-18) போன்றவை சோம்புதல் எனும் மெய்ப்பாட்டிற்குரியதாகும். இச்சோம்புதல் என்னும் மெய்ப்பாடு தலைவிக்கு மட்டுமே புலவர்களால் பாடப்பட்டுள்ளமை குறிக்கத்தக்கது.

## கருதல்

கருதல் என்னும் மெய்ப்பாடு மறந்ததனை மீள நினைத்தல் என்னும் பொருள்படும். இம்மெய்ப்பாடு குறித்து எந்தக் குறிப்பும் கலித்தொகையில் காணப்பெறவில்லை.

## விரைவு

விரைவு என்பதற்கு, **ஒரு பொருளைச் செய்ய நினைத்தான் அது தாழ்க்கில் அப்பயன் எய்தான், கடிதின் முடித்தல் வேண்டுமெனக் குறித்த மனநிகழ்ச்சி**[135] என இளம்பூரணரும் **இயற்கைவகையானன்றி ஒரு பொருட்கண் விரைவு தொழில்பட உள்ள நிகழுங் கருத்து**[136] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர். களவில் விரைவு என்னும் மெய்ப்பாடானது விரைவு, விரைந்து, விரைபு, விரைவினர், விரையல் என்னும் பெயர்களில் பத்தொன்பது இடங்களில் (கலித். 37:17-18, 40:20-21, 44:18-21, 50:19-20, 50:25-27, 103:1-5, 103:40-41, 120:20-21, 121:20-23, 124:18-21, 127:19-20, 129:24-25, 134:26-27, 135:19-20, 149:10-11, 108:39-40, 140:1-2, 145:1-2, 145:14-15) காணப்பெறுகின்றது.

பலர் அலர் தூற்றினாலும் துன்பத்தைப் பிறர் அறியாதவாறு மறைத்த தலைவியின் துயரத்தைப் போக்க நீ விரைந்து செல்ல வேண்டும் எனத் தோழி தலைவனிடம் கூறுவதை,

**“இனையன தீமை நினைவனள் காத்தாங்கு,**
**அனைஅரும் பண்பினான், நின்தீமை காத்தவள்**
**அருந்துயர் ஆர்அஞர் தீர்க்கும்**
**மருந்துஆகிச் செல்கம், பெரும! நாம் விரைந்தே” (கலித்.44:18-21)**

என்னும் பாடலடிகள் விளக்கும். குறிஞ்சிக்கலியில் தலைவனைக் கண்ட தலைவி பொய்யாக அவனது மார்பில் வீழ்வது போல விழுந்தாள். ஆனால் அதனை

உண்மை என நம்பி விரைந்து தலைவன் தன்னை அனைத்துக் கொண்டதாகத் தலைவி கூறுகின்றாள் (கலித்.40:20-21)

பொதுவர்கள் ஏறுதழுவும் களத்திற்கு மணங்கமழும் மாலைகளைச் சூடி வருகின்றனர். அவர்கள் விரைந்து சென்று ஏறுதழுவும் அழகைக் காண ஆயமகளிர் பரணில் அமர்ந்திருத்தலை,

**"மெல்இணர்க் கொன்றையும், மென்மலர்க் காயாவும்**
**புல்இலை வெட்சியும், பிடவும் தளவும்**
**குல்லையும், குருந்தும், கோடலும், பாங்கரும்-**
**கல்லவும் கடத்தவும் - கமழ்கண்ணி மலைந்தனர்**
**பல்ஆன் பொதுவர், கதழ்விடைகோள் காண்மார்" (கலித்.103:1-5)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். விரைவைக் குறிக்க கதழ் என்னும் சொல் முல்லைக்கலியில் பயின்று வந்துள்ளது. விரைந்து வந்த சினமுடைய ஏற்றைக் கூறுமிடத்து,

**"காற்றுப் போல் வந்த கதழ்விடைக் காரி" (கலித்.103:40)**

என்கிறார் சோழன் நல்லுருத்திரன். நெய்தற் கலியில் பெரும்பாலும் தலைவியின் துயரைப் போக்க தோழி தலைவனை விரைந்து செல்லத் தூண்டுவதையும் வினை முடித்து தலைவன் தானே விரைந்து வருகின்றதையும் நல்லந்துவனார் பதிவு செய்துள்ளார்.

மாலைக் காலத்தின் மீது கொண்ட வெறுப்பு நீங்கும் படியாகத் தலைவன் விரைந்து வருகின்றான் (கலித்.120:20-21). விரைந்து வந்து தலைவியை மணம் செய்து கொள் எனத் தோழி, தலைவனிடம் கூறுவதை

**"எறி திரை தந்திட, இழிந்த மீன் இன் துறை**
**மறி திரை வருந்தாமல் கொண்டாங்கு, நெறி தாழ்ந்து**
**சாயினள் வருந்தியாள் இடும்பை**

**பாய் பரிக் கடுந்திண் தேர் களையினோ இடனே" (கலித்.121:20-23)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். தலைவனிடம் தலைவியின் நிலை பற்றிக் கூறிய தோழி விரைந்து செல்வாயாக எனக் கூறுவதை,

**"பிரிவு இல்லாய் போல, நீ தெய்வத்தின் தெளித்தக்கால்**

**அரிது என்னாள், துணிந்தவள் ஆய்நலம் பெயர்தர,**

**புரி உளைக் கலிமான் தேர் கடவுபு-**

**விரி தண் தார் வியல் மார்ப! விரைக நின் செலவே" (கலித்.124:18-21)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவன் காற்றை விட வேகமாகச் செல்லும் தேரினையும் களிறுகளையும் புலவர்களுக்குக் கொடுத்துக் கொடுத்து கை ஓயாத வள்ளல் தன்மை உடையவன் என்பதும் (கலித்.50:19-20) தலைவியை எண்ணி அலைந்து திரியும் தலைவனைக் காண விரைந்து வருகின்றவர்களைக் கண்டு தலைவன் கூறுவது இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும். இதனை,

**"கண்டவிர் எல்லாம் கதுமென வந்து, ஆங்கே**

**பண்டு அறியாதீர் போல் நோக்குவீர்" (கலித்.140:1-2)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவன் விரைந்து வந்ததால் தலைவியின் உடல் நலமும் விரைந்து நலமடைந்தது (கலித்.134:26-27) என்பதும் இம்மெய்ப்பாட்டிற்குச் சிறந்த சான்றாகும்.

**உயிர்ப்பு**

உயிர்ப்பு என்பதற்கு, **முன்பு விடும் அளவின்றிச் சுவாதம் நீள விடுதல்**[137] என இளம்பூரணரும் **வேண்டிய பொருளைப் பெறாத வழிக் கையற வெய்திய கருத்து; அது நெட்டுயிர்ப்பிற்கு முதலாகலின் அதனையும் உயிர்ப்பென்றானென்பது**[138] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

உயிர்ப்பு என்னும் மெய்ப்பாடானது களவில் உயிர்த்தல், உயிர்க்கும், என்னும் பெயர்களில் ஆறு பாடல்களில் (கலித். 54:10-11, 58:6-7, 58:17-19, 59:18-19, 65:13-15, 135:19-20) பதிவு செய்யப்பட்டுள்ளது. கொல்லன் உலை மூக்கு வெவ்விதாய் உயிர்ப்பது போல தலைவன் நெடுமூச்றெிந்தான் என்பதை,

**"செறாஅச் செங்கண் புதைய வைத்து**

**பறாஅக் குருகின் உயிர்த்தலும் உயிர்த்தனன்" (கலித்.54:10-11)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவி, தலைவன் வருவானோ மாட்டானோ என எண்ணிப் பெரு மூச்சு விடுகின்றாள். எனவே தலைவியைக் காண விரைந்து செல்வாயாக எனத் தோழி வரைவு கடாவுகின்றதைக் (கலித்.135:19-20) காணமுடிகின்றது. தலைவன் தலைவியிடம் கூறும் போது பெருமூச்சினை விட்டு உனது சோகத்திற்கு என்ன காரணம், உனக்கு வந்த நோய் தான் என்ன எனத் தலைவி வினவ மாட்டாளா என ஏங்கியதை,

**"ஆய்தொடி! '"ஐது உயிர்த்து, இவன் உள்நோய்யாது?" என்னும்**

**நோய் இலை இவட்கு' என நொது மலர் பழிக்குங்கால்" (கலித்.59:18-19)**

என்னும் பாடலடிகள் உரைக்கும்.

**கையாறு**

கையாறு என்பதற்கு, **காதலர் பிரிந்தால் வருந்துன்பமும் அந்நிகரனவும் வருவது**[139] என இளம்பூரணரும் **அவ்வுயிர்ப்புமின்றி வினையொழிந்தயர்தல்**[140] எனப் பேராசிரியரும் உரை தருகின்றனர். கலித்தொகையில் கையாறு என்னும் மெய்ப்பாடானது பதினான்கு (கலித். 120:12-13, 121:7-8, 121:15-16, 123:6-7, 124:6-7, 124:9-10, 124:23-14, 125:8-9, 125:17-18, 126:16-17, 127:8-9, 130:9-10, 134:15-16, 147:48-49) பாடல்களில் பயின்று வந்துள்ளது.

கானலிடத்தே எந்தப் பொருளையும் எவரும் காண இயலாத வண்ணம் இருள் சூழ்ந்துள்ளது. அத்தகைய மாலைக் காலத்தில் காம நோயைத் தந்தவனிடம் தன் நெஞ்சம் செல்கின்றது என்பதைத் தலைவி,

**காணாமை இருள் பரப்பி, கையற்ற கலங்குவான்,**

**மாணா நோய் செய்தான் கண் சென்றாய்" (கலித்.123:6-7)**

என்று உரைப்பள். மாலைக்காலத்தை மகளிர் விளக்கேற்றி வரவேற்கும் பொழுது கையற்ற நெஞ்சமானது காமத் தீயை மிகுவிக்கின்றது (கலித்.130:9-10). காமநோயைச் செய்தவரைக் கண்ணால் காணாமல் என் நெஞ்சு துன்பத்தில் ஆழ்ந்து இருக்கின்றது. (கலித்.134:15-16) எனக்குத் துன்பம் தந்தவனைக் கண்ணால் கண்டால் தப்பிப் போகாதவாறு பார்த்துக் கொள்வேன் எனத் தலைவி கூறுவது (கலித்.147:48-49) போன்றவை தலைவனின் பிரிவே தலைவிக்குக் கையாறு என்னும் மெய்ப்பாடு தோன்றக் காரணமாவதைப் புலப்படுத்துகின்றது.

## இடுக்கண்

இடுக்கண் என்பதற்கு, **மெய்யானுந் தோற்றுவதோர் மெய்ப்பாடு**[141] என இளம்பூரணரும் **மலர்ந்த நோக்கமின்றி மையனோக்கம் படவரும் இரக்கம்**[142] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர். இடுக்கண் என்னும் மெய்ப்பாடானது களவில் ஏழு பாடல்களில் (கலித். 40:13-14, 48:10-11, 119:14-16, 120:4-6, 122:3-4, 128:18-19, 131:29-30) காணப்பெறுகின்றது. தலைவன் தனக்கு வேண்டியவரின் துன்பத்தைத் தீர்ப்பவன் என்பதை,

**"தொடுத்த தேன் சோர, தயங்கும் - தன் உற்றார்**

**இடுக்கண் தவிர்ப்பான் மலை" (கலித்.40:13-14)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தாய், வீட்டுக் காவலில் தலைவியை வைத்து வெளியே சென்று விடாதபடி காவல் காத்துக் கொண்டிருக்கிறாள். இத்தகைய

நிலையில் தலைவி துன்புறுதல் (கலித்.48:10-11) வறுமைத் துயரினால் ஒருவனை இரந்து வேண்டும் பொழுது இடுக்கண் என்னும் மெய்ப்பாடு தோன்றுகின்றதை,

**"உரவுத் தகை மழுங்கித் தன் இடும்பையால் ஒருவனை**
**இரப்பவன் நெஞ்சம் போல், புல்லென்று, புறம் மாறிக்**
**கரப்பவன் நெஞ்சம் போல், மரம் எல்லாம், இலை கூம்ப" (கலித்.120:4-6)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். மாலைக்காலம் தலைவிக்கு உயிரை உடலிலிருந்து பிரிக்கும் கொடிய காலமாக இடுக்கண் விளைவித்ததை,

**"வால் இழை மகளிர் உயிர் பொதி அவிழ்க்கும்**
**காலை ஆவது அறியார்,**
**மாலை என்மனார் மயங்கியோரே" (கலித்.119:14-16)**

என்னும் தோழிக் கூற்றுப் பாடல் விளக்கும். மேலும் தலைவன் செய்த கொடுமைகளை எல்லாம் கூறி ஊசற் பாட்டினைப் பாடுவோம் எனத் தோழி தலைவியை அழைக்கின்றாள். (கலித்.131:29-30) இவ்வாறாக இடுக்கண் என்னும் மெய்ப்பாடானது பெரும்பாலும் தலைவிக்கு உரியதாக கலித்தொகையில் காணப்பெறுகிறது.

### பொச்சாப்பு

பொச்சாப்பு என்பது மறத்தல் எனப் பொருள்படும். இம்மெய்ப்பாடு குறித்து எந்தக் குறிப்பும் கலித்தொகையில் காணப்பெறவில்லை.

### பொறாமை

பொறாமை என்பதற்கு, **பிறர்க்கு ஆக்க முதலாயின கண்டவழி யதனைப் பெறாது நடக்கும் மனநிகழ்ச்சி அதனை அழுக்காறு என்ப**[143] என இளம்பூரணரும் **அழுக்காறு; அ∴தாவது, பிறர் செல்வங் கண்டவழி வேண்டாதிருத்தல்**[144] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர்.

இது பிறர்க்குக் கிடைத்தது தனக்கு கிட்டவில்லையே என என்னும் ஒரு மனநிலையே ஆகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஒரே ஒரு பாடலில் மட்டும் இடம்பெற்றுள்ளது.

முல்லைநிலத் தலைவி நெடிய கொம்புகளை உடைய ஆண் இனத்து ஆயர் மகனுடன் நான் கூடியதைக் கண்ட சுற்றத்தார்கள் பொறுத்துக் கொண்டனர். ஆனால் அதனை ஏற்றுக் கொள்ள முடியாத அயலாரின் கண்கள் அனலைக் கக்குகின்றன என்கிறாள். இதனை,

**"கோட்டினத்து ஆயர் மகனொடு யாம் பட்டதற்கு**
**எம் கண் எமரோ பொறுப்பர்; பொறாதார்**
**தம் கண் பொடிவது எவன்?" (கலித்.105:58-60)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இன்றும் தனக்குக் கிடைக்காத ஒன்று பிறருக்கு கிடைக்கக் கூடாது என்ற எண்ணம் பலரிடம் இருக்கும் தீய பண்பாகக் காணப்படுகின்றது. இம்மெய்ப்பாட்டால் பலவகையான இன்னல்களுக்கு ஆளாகின்றனர் என்பதில் ஐயமில்லை.

## ஐயம்

ஐயம் என்பதற்கு, **ஒரு பொருளைக் கண்ட வழி யிதுவெனத் துணியாத நிலைமை**[145] என இளம்பூரணரும் **ஒரு பொருண்மேல் இருபொருட்டன்மை கருதி வரும் மனத்தடுமாற்றம்**[146] எனப் பேராசிரியரும் பொருள் தருகின்றனர். ஐயம் என்பது நம்பிக்கைக்கும் நம்பிக்கையின்மைக்கும் இடைப்பட்ட ஒரு நிலையாகும். ஐயம் பற்றி

**"சிறந்துழி ஐயஞ் சிறந்த தென்ப**
**இழிந்துழி இழிவே சுட்டலான" (தொல்.நூ.1040)**

என்பர் தொல்காப்பியர். தலைவன், தலைவியைக் கண்டவிடத்து அவளது அழகானது காண்பவர்களைத் துன்புறுத்துவதாக இருப்பதை அவள் அறிவாளா மாட்டாளா என்னும் போது ஐயமானது தோன்றுகின்றதை,

**“பெருத்த நின் இளமுலை-**

**மயிர் வார்ந்த வரிமுன்கை மடநல்லாய்! நிற் கண்டார்**

**உயிர் வாங்கும் என்பதை உணர்தியோ உணராயோ? (கலித்.56:24-26)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவியைக் கண்ட தலைவன் நிலா போன்ற முகத்துடன் வரும் இவள் யார்? கொல்லி மலையில் வல்லவனால் செய்யப்பட்ட பாவையோ? எல்லா அழகிய பெண்களின் உறுப்புகளையும் ஒருங்கிணைத்துப் பிரமன் செய்த பேரழகியோ? ஆடவர்களின் மேலுள்ள வெறுப்பினால் கொல்ல அழகிய உருவம் கொண்டு வந்த கூற்றுவனோ எனப் பலவாறாக ஐயம் கொள்கிறான் (கலித்.59). தலைவனின் இவ்ஐயம் இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

## மிகை

மிகை என்னும் மெய்ப்பாடு குறித்து எந்தக் குறிப்பும் கலித்தொகையில் காணப்பெறவில்லை.

## நடுக்கம்

நடுக்கம் என்பதற்கு, **யாதானும் ஒரு பொருளை இழக்கின்றோமென வரு மனநிகழ்ச்சி**[147] என இளம்பூரணரும் **அன்பும் அச்சமும் முதலாயின உடம்பிற் புலப்படுமாற்றான் உள்ளம் நடுங்குதல்; புதல்வர்க்குப் பிணி இல்வழியும் எவனாங்கொலென்று நடுங்குதல் அன்பான் நடுங்குதலாம். அச்சமென்னுஞ் சுவை பிறந்ததன் பின்னர் அதன்வழித் தோன்றிய நடுக்கம் அச்சத்தாற் றோன்றிய நடுக்கமாமென்பது**[148] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

அச்சத்தின் காரணமாகவே நடுக்கம் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் எட்டு இடங்களில் (கலித். 60:8-9, 104:38-39, 110:14-15, 115:1-3, 127:6-7, 128:20-21, 134:9-10, 134:15-16) காணப்பெறுகின்றது.

கள்ளுண்டவன் களிப்பு மிகுதியால் உடம்பில் ஏற்படும் நடுக்கம் கண்டு காணாமல் சென்று பிறர் நாணும்படி வெளிப்பட்டதைப் போல எனது களவு வாழ்வும்

வெளிப்பட்டது என்னும் தலைவி கூற்றிலும் (கலித்.115:1-3) தலைவியின் நடுக்கத்திற்குக் காரணம் காம நோய் என்பதை,

**"கொடுங் கழி வளைஇய குன்று போல், வால் எக்கர்**

**நடுங்கு நோய் தீர, நின்குறி வாய்த்தாள்" (கலித்.127:6-7)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். தலைவியிடம் தான் செய்த குற்றம் யாது எனத் தலைவன் நடுங்கிக் கொண்டு கேட்பதையும் (கலித்.128:20-21)இவ்வுலகம் ஒருசேர நடுங்கி அஞ்சும் படியாக ஊழிக் காலத்தே இப்பெரிய நிலவுலகம் நிலையழிவது போல் தலைவியின் உள்ளம் அழிந்து வருந்துவதற்குக் காரணமான மாலைக் காலமும் வந்தது (கலித்.134:15-16)

தலைவன் கூறியதாகத் தோழி தலைவியிடம் கூறும் போது அவன் தொழுவான், தொழுத பின் அழகுடைய மகளிரைக் கண்ட போது கதுமெனக் காம நோய் மிகுமானால் உயிர் போய்விடும் எனப் பலவாறு கூறி நடுங்கினான். தன்னிடம் உள்ள வீரத்தன்மை கெட்டுப் போகும் படி நடுங்கிக் கூறியதை,

**"கண்ணும் நீராக நடுங்கினள், இந்நகாய்!**

**என்செய்தான் கொல்லோ - இ∴து ஒத்தன் தன்கண்" (கலித்.60:8-9)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். இன்றும் அச்சத்தின் காரணமாக நடுக்கம் என்னும் மெய்ப்பாடானது அனைவரிடமும் தோன்றுகின்றது.

## தொகுப்புரை

- தொல்காப்பியர் கூறும் களவுக்கால மெய்ப்பாடுகள் இருபத்து நான்கினுள் சிதைவு பிறர்க்கின்மை, காதொன்று களைதல், ஊழணி தைவரல், அல்குல் தைவரல், திளைப்பு வினை மறுத்தல் ஆகிய மெய்ப்பாடுகள் கலித்தொகைப் பாடல்களில் இடம்பெறவில்லை.

- பாராட்டெடுத்தல், மடந்தப உரைத்தல், கொடுப்பவை கோடல், கண்டவழி உவத்தல், ஆகிய மெய்ப்பாடுகள் தலைமக்களிடம் உவகையை ஏற்படுத்தும் மெய்ப்பாடுகளாக உள்ளன.

- கரந்திடத் தொழிதல், புலம்பித் தோன்றல், கலங்கி மொழிதல், கையறவுரைத்தல் என்னும் மெய்ப்பாடுகள் பிரிவுணர்ச்சியால் தலைவியிடம் தோன்றுகின்றன.

- இல்வலியுறுத்தல் என்னும் மெய்ப்பாடானது முல்லைநில மகளிரிடமே காணப்பெறுகிறது. களவுக் காலத்தில் ஏற்படுகின்ற சிறு சிறு ஊடலின் போதும் தலைவனோடு கொண்ட உறவை அறிந்த சுற்றத்தார் தலைவியைக் கண்டிக்கும் போதும் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது.

- தலைமக்களின் களவு வெளிப்பட்ட பின் மட்டுமே நிகழும் மெய்ப்பாடு எனத் தொல்காப்பியரால் வரையறுக்கப்பட்ட பாராட்டெடுத்தல், கொடுப்பவை கோடல், மடந்தப உரைத்தல், அலர் நாணல் என்னும் நான்கு மெய்ப்பாடும் பாராட்டெடுத்தல், கொடுப்பவை கோடல், மடந்தப உரைத்தல், அலர் நாணல் என்னும் கால மாற்றத்தாலும் நாளுக்கு நாள் வளர்ச்சியடையும் சமூகத்தாலும் அனைவருக்கும் அனைத்து சூழ்நிலைகளிலும் தோன்றும் மெய்ப்பாடுகளாக வளர்ச்சியடைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

- இன்பத்தை வெறுத்தல் முதலான இருபது மெய்ப்பாடுகள் பிரிவுத் துயர உணர்ச்சிகள் தோன்றக் காரணமாகின்றன. இதனுள் ஒப்புவழி உவத்தல், அவன் தமருவத்தல், உறுபெயர் கேட்டல் என்னும் மூன்று மெய்ப்பாடுகள் மட்டும் பிரிவுக் காலத்திலும் தலைமக்களிடம் உவகையைத் தோற்றுவிக்கக் கூடியதாய் உள்ளன.

- தலைவனைப் பிரிந்த தலைவியின் மேனி நலம் குன்றுவதை உடம்பு நனி சுருங்கல், கண்துயில் மறத்தல், பசலை பாய்தல், ஆகிய மெய்ப்பாடுகள் புலப்படுத்துகின்றன.

- பொய்யாக் கோடல், மெய்யே என்றல், எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல் ஆகிய மெய்ப்பாடுகளைத் தவிர மீதமுள்ள 15 மெய்ப்பாடுகளும் துன்பத்துக்குரிய மெய்ப்பாடுகளாக விளங்குகின்றன.

- கலித்தொகையில் முல்லைக்கலியில் மட்டுமே தெரிந்துடம்படுதல் என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

- கலித்தொகையில் தலைவி ஒப்புமைப்படுத்திப் பார்ப்பது மட்டுமின்றி தோழி தலைவியின் அவயங்களைப் பிறவற்றோடு ஒப்பிட்டுப் பார்க்கும் மெய்ப்பாடும் காணப்பெறுகிறது. இது தொல்காப்பியத்தினின்று சங்க காலத்தில் ஏற்பட்ட மாற்றத்தைப் புலப்படுத்தும்.

- இன்றும் தமக்குப் பிடித்தவர்களின் பெயரைக் கேட்டாலோ அல்லது பார்த்தாலோ மனதில் ஏற்படும் மகிழ்ச்சியே உறுபெயர்கேட்டல் என்னும் மெய்ப்பாடாகும்.

- தொல்காப்பியர் தலைமக்களுக்கு என வகுத்த மெய்ப்பாடுகளில் பல இன்றைய சூழலில் அனைவருக்கும் பொதுவானதாக வளர்ச்சி அடைந்துள்ளமை போன்றவை குறிப்பிடத்தக்கது.

- கலித்தொகையில் உள்ளத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடாகத் தோன்றும் பேச்சும் மெய்ப்பாடுகளாக அமைந்துள்ளது.

## சான்றெண்விளக்கம்

1. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம்.ப.53
2. மேலது.ப.54
3. மு.பொன்னுசாமி, சங்க காலக் காதல் மெய்ப்பாடுகள் ப.92
4. ஆ.சிவலிங்கனார் தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம்.ப.53
5. மேலது ப.54
6. மேலது ப.53
7. மேலது ப.55
8. மேலது ப.53
9. மேலது ப.55
10. மேலது ப.58
11. மேலது பக்.58-59
12. மேலது ப.58
13. மேலது ப.59
14. மேலது ப.58
15. மேலது ப.59
16. மேலது ப.58
17. மேலது ப.59
18. மு.பொன்னுசாமி, சங்க காலக் காதல் மெய்ப்பாடுகள் ப.106
19. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம். ப.61
20. மேலது ப.62
21. மேலது ப.62
22. மேலது ப.61
23. மேலது ப.62
24. மேலது ப.64
25. மேலது ப.65
26. மேலது ப.64
27. மேலது ப.65
28. மேலது ப.64
29. மேலது ப.65
30. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க் காதல், ப.56
31. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம். ப.64

32. மேலது ப.65
33. மேலது ப.67
34. மேலது ப.68
35. மேலது ப.69
36. மேலது ப.67
37. மேலது ப.68
38. மேலது ப.69
39. மேலது ப.67
40. மேலது ப.68
41. மேலது ப.69
42. மேலது ப.67
43. மேலது ப.68
44. மேலது ப.70
45. மேலது ப.71
46. மேலது ப.70
47. மேலது ப.71
48. மேலது ப.72
49. மேலது ப.70
50. மேலது ப.71
51. மேலது ப.70
52. மேலது ப.71
53. செயராமன்.நா, சங்க இலக்கியத்துள் துன்பியல். ப.12
54. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம். ப.81
55. மேலது ப.86
56. மேலது ப.81
57. மேலது ப.86
58. மேலது ப.82
59. மேலது ப.86
60. மேலது ப.82
61. மேலது ப.87
62. மு.பொன்னுச்சாமி சங்க காலக் காதல் மெய்ப்பாடுகள் ப.150
63. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம்.ப.82
64. மேலது ப.87

65. மேலது ப.83
66. மேலது ப.88
67. மேலது ப.83
68. மேலது ப.88
69. மேலது ப.83
70. மேலது ப.88
71. தா.ஏ.சண்முகம், ‘கனவு’ கலைக்களஞ்சியம் தொகுதி மூன்று.ப.402
72. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம். ப.83
73. மேலது ப.89
74. மேலது ப.83
75. மேலது ப.89
76. மேலது ப.83
77. மேலது ப.84
78. மேலது ப.90
79. மேலது ப.84
80. மேலது ப.90
81. மேலது ப.84
82. மேலது பக்.90-91
83. வெள்ளைவாரணர் தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.183
84. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம். ப.85
85. மேலது. ப.91
86. மேலது ப.85
87. மேலது ப.91
88. மேலது ப.93
89. மேலது ப.94
90. மேலது ப.93
91. மேலது ப.94
92. மேலது ப.93
93. மேலது ப.94
94. மேலது ப.93
95. மேலது ப.95
96. மேலது ப.93
97. மேலது ப.95

98. மேலது ப.94

99. மேலது ப.96

100. மேலது ப.94

101. மேலது ப.96

102. மேலது ப.94

103. மேலது ப.97

104. மேலது ப.41

105. மேலது ப.49

106. மேலது ப.41

107. மேலது ப.49

108. மேலது ப.42

109. மேலது ப.49

110. மேலது ப.42

111. மேலது ப.50

112. மேலது ப.43

113. மேலது ப.50

114. மேலது ப.43

115. மேலது ப.50

116. தி.வை.கோபாலையர், தமிழ் இலக்கண பேரகராதி ப.15

117. மேலது ப.43

118. மேலது ப.50

119. மேலது ப.43

120. மேலது ப.50

121. மேலது ப.44

122. மேலது ப.50

123. மேலது ப.44

124. மேலது ப.50

125. மேலது ப.44

126. மேலது ப.50

127. மேலது ப.44

128. மேலது ப.50

129. மேலது ப.51

130. மேலது ப.45

131. மேலது ப.51
132. மேலது ப.46
133. மேலது ப.51
134. மேலது பக்.46,51
135. மேலது ப.46
136. மேலது ப.51
137. மேலது ப.46
138. மேலது ப.51
139. மேலது ப.46
140. மேலது ப.51
141. மேலது ப.47
142. மேலது ப.51
143. மேலது ப.48
144. மேலது ப.51
145. மேலது ப.48
146. மேலது ப.51
147. மேலது ப.48
148. மேலது பக்.51-52

# கலித்தொகையில் கற்புக்கால மெய்ப்பாடுகள்

தமிழர்கள் அகவாழ்க்கையைக் களவு, கற்பு எனப் பிரித்தொழுகும் மரபு அகத்திணையின் அடிப்படைக் கூறாகும். களவு ஒழுக்கம் கற்பு வாழ்க்கையாக மலர வேண்டும் என்பது தமிழர்களின் அகத்திணை நெறியாகும். கற்பு என்பது தலைவியைக் கொடுத்தற்குரியோர் கொடுப்ப, வதுவை என்னும் முறையால் தலைவன் ஏற்றுக் கொள்வதாகும். இங்ஙனம் தலைமக்கள் இணைந்து வாழும் இல்லற வாழ்வியலில் வெளிப்படும் உணர்வு வெளிப்பாடு கற்புக்கால மெய்ப்பாடாகக் கொள்ளப்பெறுகிறது. கலித்தொகையில் காணலாகும் கற்புக்குரிய மெய்ப்பாடுகள் குறித்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

உள்ளப் புணர்ச்சியால் உரிமை பூண்டு ஒழுகிய தலைவனும் தலைவியும் உலகத்தோர் போற்றும் கற்பு வாழ்வைத் தொடங்குவதற்கு உரிமை நல்கும் முறை தான் வதுவை (திருமணம்) என்னும் செயலாகும். தலைவனும் தலைவியும் நடத்தும் இல்லற வாழ்க்கையினைச் சங்கப் பாடல்கள் பல சுட்டுகின்றன. இல்லறத்தை நல்லறமாக நடத்தத் தலைப்படுபவள் தலைவி. அன்பும், அருளும் அவளிடம் பெருகின. நற்பண்புகள் மற்றும் நன்னெறிகளின் வழியில் சங்க காலத் தலைவி வாழ முற்பட்டாள். அன்பும் இனிமையும் நிறைந்த இன்சொற்களால் தலைவன் உள்ளத்தைப் பிணித்துக் கொள்கிறாள். அவனுடன் ஒன்றுபட்டு வாழத் தலைப்படுகிறாள். இத்தகு சிறப்புடைய திருமண வாழ்க்கையில் நிகழும் மெய்ப்பாடுகளைத் தொல்காப்பியர்,

**“தெய்வம் அஞ்சல், புரையறந் தெளிதல்,**
**இல்லது காய்தல், உள்ளது உவத்தல்,**
**புணர்ந்துழி யுண்மை, பொழுது மறுப்பாக்கம்,**
**அருள்மிக உடைமை, அன்புதொக நிற்றல்,**
**பிரிவாற்றாமை, மறைந்தவை உரைத்தல்,**
**புறஞ்சொல் மாணாக் கிளவியொடு தொகைஇச்**

**சிறந்த பத்தும் செப்பிய பொருளே"      (தொல்.நூ.1218)**

என்று குறிப்பிடுகின்றார்.

## தெய்வம் அஞ்சல்

தெய்வம் அஞ்சல் என்பதற்கு, **தெய்வத்தினை அஞ்சுதல்**[1] என இளம்பூரணரும் **தலைமகற்குத் தொழுகுலமாகிய தெய்வமும் அவற்கு ஆசிரியராகத் தாபதரும் இன்னாரென்பது அவனானுணர்த்தப் பட்டு உணர்ந்த தலைமகள் அத்தெய்வத்தினையஞ்சி ஒழுகுமொழுக்கம் அவள்கட்டோன்றும்; அங்ஙனம் பிறந்த உள்ள நிகழ்ச்சியைத் தெய்வமஞ்சல் என்றானென்பது. மற்றுத் தனக்குத் தெய்வந் தன் கணவனாதலான் அத்தெய்வத்தினைத் தலைமகளஞ்சுதல் எற்றுக்கெனின், அவனின் தான் வேறல்லளாக மந்திரவிதியிற் கூட்டின மையின் அவனான் அஞ்சப்படுந் தெய்வந் தனக்கும் அஞ்சப்படுமென்பது அல்லதூஉந் தலைவற்கு ஏதும் வருமெனவும் அஞ்சுவளென்பது**[2] எனப் பேராசிரியரும் உரை வரைந்துள்ளனர்.

தெய்வம் அஞ்சல் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் ஆறு இடங்களில் காணப்பெறுகிறது. (கலித். 75:18-21, 89:13-14, 90:24-25, 91:6-8, 16:9-12, 88:20-21)

இறைவனைச் சாட்சியாகக் கொண்டு தலைவன் தலைவியிடம் உன்னைப் பிரியேன் எனச் சூளுரைப்பான். அச்சூளுரை பொய்த்தால் தலைவனைத் தெய்வம் வருத்தும் என அஞ்சி அவனுக்கு எந்தத் தீங்கும் நேராமல் இருக்கத் தலைவி தெய்வத்தை வழிபடுவாள். இம்மெய்ப்பாடு தலைவியிடம் நிகழுகின்றது. (கலித்.75:18-19)

தலைவன் பிரிவால் ஆற்றாமையடைந்த தலைவி பாலைநில வழியில் வரும் தலைவனை ஞாயிற்றின் ஒளி வருத்தும் என்பதால் தன் தலைவனுக்காக ஞாயிற்றிடம் வேண்டுகிறாள். இச்செயல் தெய்வம் அஞ்சல் எனும் மெய்ப்பாட்டிற்கு ஒரு கூறாகப் பொருந்துகிறது. இதனை,

**“புனையிழாய்! ஈங்கு நாம் புலம்புற, பொருள் வெ.்.கி,**

**முனை என்னார் காதலர் முன்னிய ஆரிடை,**

**சினை வாடச் சிறக்கும் நின் சினம் தணிந்தீக! என,**

**கனை கதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ?” (கலித்.16:9-12)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

பரத்தையர் இல்லம் சென்று வந்த தலைவனை வீட்டினுள் வராதே எனத் நான் ஊடினால் அதுவும் அதிக நேரம் நிலைப்பதில்லை. என் ஊடலை எண்ணி வரும் அவன் அதனை நீக்கப் பொய்ச் சத்தியம் பல செய்வான். அதற்கு அஞ்சியே நான் ஊடலைக் கைவிட்டுவிடுவேன். தலைவன் தன் தவறை மறைக்க இறைவன் மீதோ அல்லது பிறவற்றின் மீதோ பொய்யாகச் சத்தியம் செய்கின்றான். ஆனால் இறைவன் மீது செய்யும் சத்தியம் பொய்யாக இருப்பின் தெய்வ சக்தியால் தலைவனுக்கும் அவனைச் சார்ந்த அனைவருக்கும் துன்பத்தை தரும் எனத் தலைவி அச்சம் கொள்கிறாள் (கலித்.88:20-21).

இன்றும் தெய்வத்தின் மீது செய்யப்படும் சத்தியமானது பொய்யாக இருப்பின் தண்டிக்கப்படுவது உறுதி என மக்களால் நம்பப்படுவது குறிப்பிடத்தக்கது.

## புரையறந்தெளிதல்

புரையறந்தெளிதல் என்பதற்கு, **தனக்கொத்த இல்லறம் இன்னதென்று தலைமகள் மனத்துப்படுதல்**[3] என்பர் பேராசிரியர். தலைவி இல்லறத்திற்கு ஏற்ற நல்ல அறங்கள் இதுவென ஆராய்ந்து அதன்வழி நடத்தலே சிறப்பாகும். தொல்காப்பியம்,

**“கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்,**

**மெல்லியற் பொறையும், நிறையும் வல்லிதின்**

**விருந்து புறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்,**

**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்” (தொல்.நூ.1098)**

என்றுரைப்பது இதனை நன்கு விளக்கும்.

தலைவி தனக்குரிய இல்லற நெறிகள் எவையெனத் தெரிந்து அதன்படி நடத்தலே புரையறந் தெளிதல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் புரையறந்தெளிதல் என்னும் மெய்ப்பாடானது ஆறு இடங்களில் (கலித். 8:21-22, 18:10-12, 27:1-2, 75:14-17, 75:25-30, 81:11-12) பயின்று வந்துள்ளது.

இன்முகந் திரியாது விருந்தினரைப் போற்றிப் பேணும் பண்புடையவள் தலைவி. இல்லறக் கடமைகளுள் தலையாய பண்பாடு விருந்தோம்பல் ஆகும். தனது இல்லம் நாடி வரும் உறவினரையும் பிறரையும் வரவேற்று உணவு கொடுத்து உபசரித்தல் என்பது இல்லற நெறியாகப் போற்றப்படுகிறது.

**'“எல்லினை வருதி; எவன் குறித்தனை? எனச்**

**சொல்லாதிருப் பேனாயின், ஒல்லென**

**விரி உளைக்கலிமான் தேரொடு வந்த**

**விருந்து எதிர் கோடலின், மறப்பல்' என்றும்” (கலித்.75:14-17)**

என்னும் பாடலடிகளில் தலைவனின் பரத்தைமையால் ஊடல் கொண்ட தலைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாக விருந்தினரைத் தலைவன் அழைத்து வந்தான். தலைவியும் இன்முகத்துடன் ஏற்றுக் கொள்கிறாள். மேலும்

**“விருந்து எதிர் கொள்ளவும், பொய்ச்சூள் அஞ்சவும்,**

**அரும்பெறல் புதல்வனை முயங்கக் காணவும்**

**ஆங்கு அவிந்து ஒழியும், என் புலவி தாங்காது,**

**அவ்அவ் இடத்தான் அவை அவை காண” (கலித்.75:27-30)**

என்னும் பாடலடிகளில் தலைவி தான் ஊடல் கொள்ள இருந்தும் இயலாத நிலையைத் தோழியிடம் கூறுகின்றாள். இதில் தலைவியின் இல்லறப் பண்பு அவளின் செயலால் உயர்ந்து நிற்பதைக் காணமுடிகின்றது. விருந்தினர்களின் வருகையால் கை ஓயாது கடமையில் ஈடுபட்டுள்ள என்னை நீ நினைக்கவில்லை; பெருந்தெருவில்

தாய்மார் உன்னைக் கொண்டாடித் திருத்தமாகக் கற்பித்த சொற்களையான் கேட்ப சிலவற்றைக் கூறுவாயாக; அதைக் கேட்கும் போது எனக்கு அமுதத்தை உண்டது போல இருக்கும் எனத் தலைவி புதல்வனிடம் கூறும்போது விருந்தினர்களை உபசரித்தமை பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. இதனை,

**"விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்" (கலித்.81:11)**

என்னும் பாடலடி புலப்படுத்தும். இதில் தலைவியிடம் புரையறந்தெளிதல் என்னும் மெய்ப்பாடு காணப்படுகிறது. தற்காலத்தில் புரையறந்தெளிதல் என்னும் மெய்ப்பாடு மிகச் சிலரால் மட்டுமே கடைப்பிடிக்கப்படுகின்றது.

## இல்லது காய்தல்

இல்லது காய்தல் என்பதற்கு, **தலைமகன்கண் இல்லாத குறிப்பினை யவன்மாட்டு உளதாகக் கொண்டு காய்தல்**[4] என இளம்பூரணரும் **களவின்கட் போலாது தலைமகற்கு இல்லாததனை உண்டாக்கிக் கொண்டு காய்தல்**[5] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

தலைவனின் புறத்தொழுக்கத்தை வெறுக்கும் தலைவி, அவன்பால் இல்லாத ஒன்றை இருப்பதாகக் கொண்டு கோபப்படுவதே இம்மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடு குறித்து, **அக்காலத்தில் ஆடவர் பல மகளிரைத் திருமணம் செய்யும் உரிமையைப் பெற்றிருந்தனர். சமுதாயமும் ஏற்றுக்கொண்டது. ஆனால் பெண்டிர்களுக்குத் திருமண வரம்பு இருந்தது. பெண்கள் ஒரு முறை மட்டுமே திருமணம் செய்து கொள்ள வேண்டும் எனச் சமுதாயம் கூறியது. அதனால் தலைவியின் மனத்திற்கு ஆடவன் பல மனம் படைத்தவனாகவும் மனத்தை நிலை நிறுத்த இயலாதவனாகவும் தோன்றுகின்றான். இவ்வுளவியல் பாங்கு தலைவியிடம் இல்லது காய்தல் மெய்ப்பாடு தோன்ற அடிப்படையாகின்றது**[6] என்பர் வ.சுப. மாணிக்கனார்.

மருதனிளநாகனார் மருதக்கலியில் பன்னிரெண்டு பாடல்களில் (கலித். 14:7-9, 81:25-28, 81:33-34, 89:10-11, 90:4, 91:6-8, 96:8-20, 93:23-26, 97:9-21, 98:13-18, 98:31-33, 98:9-12) இல்லது காய்தல் என்னும் மெய்ப்பாட்டை ஊடற்சுவை கலந்து படைத்துள்ளார். பொய் கூறும் தலைவனிடம் இல்லாததைக் கூறி ஊடல் கொள்கிறாள் தலைவி. அதனை மறுத்து நான் செய்யாததை கூறிச் சினம் கொள்ளாதே எனத் தலைவன் கூறுவதை,

**“செய்யாத சொல்லிச் சினவுவது ஈங்கு எவன்**

**ஐயத்தால்? என்னைக் கதியாதி”** **(கலித்.91:7-8)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மேலும் வெளியே சென்று வந்த தலைவனைப் புறத்தொழுக்கம் கொண்டவனாகக் கருதி இல்லது கூறிச் சினம் கொள்கிறாள் தலைவி. தலைவன் கூறிய கடவுள், குதிரை, யானை, காடை(குறும்பூழ்) ஆகியவற்றைத் தலைவி பலவகைப் பரத்தையர்களாக உருவகஞ் செய்து கொண்டு ஊடல் கொள்கிறாள்.

வீட்டிற்கு காலம் தாழ்த்தி வந்த தலைவன், தலைவியிடம் நமது வாழ்க்கைக்கு உதவியாக இருக்கும் கடவுளைக் கண்டு வந்தேன் எனக் கூறினான். ஆனால் தலைவியோ இதைக் கேட்டு நீளமான கூந்தலை உடைய கடவுளிடம் சென்று தங்கி வந்தாயோ எனக் கூறி ஊடல் கொள்கிறாள். (கலித்.93:23-26) மேலும்

**“பால் பிரியா ஐங் கூந்தற் பல் மயிர்க் கொய் சுவல்**
**மேல் விரித்து யாத்த சிகழிகைச் செவ் உளை,**
**நீல மணிக் கடிகை வல்லிகை, யாப்பின் கீழ்**
**ஞால் இயல் மென் காதின் புல்லிகைச் சாமரை,**
**மத்திகைக் கண்ணுறையாகக் கவின் பெற்ற**
**உத்தி ஒரு காழ், நூல் உத்தரியத் திண் பிடி,**
**நேர் மணி நேர் முக்காழ்ப் பல்பல கண்டிகை,**
**தார் மணி பூண்ட தமனிய மேகலை,**

**நூபுரப் புட்டில், அடியொடு அமைத்து யாத்த**

**வார் பொலம் கிண்கிணி, ஆர்ப்ப இயற்றி, நீ**

**காதலித்து ஊர்ந்த நின் காமக் குதிரையை,**

**ஆய் சுதை மாடத்து அணிநிலா முற்றத்துள்**

**ஆதிக் கொளீஇ அசையினை ஆகுவகை" (கலித்.96:8-20)**

என்னும் பாடலடிகளில் தலைவி பரத்தையைக் குதிரையாகவும் தலைவனைக் குதிரைக் காரனாகவும் உருவகித்து இல்லது மொழிந்து ஊடல் கொள்வதை அறியமுடிகின்றது. மேலும் பல இனிய சொற்களைக் கொண்டு தலைவன், தலைவியைப் பாராட்டுகின்ற பொழுது பிரிந்து செல்லவுள்ளான் என்பதை அறிந்த தலைவி,

**"பலபல கட்டுரை பண்டையின் பாராட்டி,**

**இனிய சொல்லி, இன்னாங்குப் பெயர்ப்பது**

**இனி அறிந்தேன், அது துனி ஆகுதலே" (கலித்.14:7-9)**

என்றுரைக்கிறாள். தலைவன் பலபல பாராட்டிப் பேசியது தன்னை விட்டுப் பிரிந்து செல்வதற்காகவே என்பதை அறிந்த தலைவி ஊடல் கொள்வதைக் காணமுடிகின்றது.

இன்றைய சூழலிலும் ஒருவரைச் சரியாக புரிந்து கொள்ளாமல் இருக்கும் போதும் அதீத அன்பைக் கொண்ட போதிலும் மற்றவர்கூறக் கேட்டு அவர்கள் செய்யாததைச் செய்ததாகக் கூறி அடிக்கடி ஊடல் கொள்வது என்பது இன்று அனைவருக்கும் பொதுவாக உள்ள மெய்ப்பாடாக மாறியுள்ளதைக் காணமுடிகின்றது.

## உள்ளது உவத்தல்

உள்ளது உவத்தல் என்பதற்கு, **உள்ளதனை உவர்த்துக் கூறுதல். அது தலைவன் செய்கின்ற தலையளியை வெறுத்தல்**[7] என இளம்பூரணரும் **தலைமகனாற் பெற்ற தலையளி உள்ளதே யாயினும், அதனை உண்மையென்றே தெளியாது அருவருத்து நிற்கும் உள்ள நிகழ்ச்சி**[8] எனப் பேராசிரியரும் பொருள் உரைக்கின்றனர்.

தலைவனது புறத்தொழுக்கத்தைத் தலைவி வெறுத்தல் என்பது இயல்பான ஒன்றாகும். அத்தகைய பரத்தமை ஒழுக்கத்தை வெறுக்கும் தலைவி தலைவனிடம் உள்ள வேறுசில நல்ல பண்புகளையும் வெறுத்தவள் போலக் கூறுவாள். இதுவே உள்ளது உவத்தல் என்னும் மெய்ப்பாடாகும். ஒருவரிடம் உள்ள தீய ஒழுக்கத்தை வெறுக்கும் போது அவரிடம் உள்ள நல்ல பழக்கமும் சேர்த்து வெறுக்கப்படுவது மனித இயல்பாகும்.

மருதத்திணைப் பாடல்களில் இம்மெய்ப்பாடு காணப்படுகின்றது. இது தலைவன் தலைவி இருவருக்கும் இடையே நடைபெறும் ஊடல் போரைக் காட்டுகின்றது. தலைவனின் புறத்தொழுக்கத்தைத் திருத்தும் தலைவியின் முயற்சியே இம்மெய்ப்பாடு தோன்றக் காரணமாகின்றது. மருதக்கலியில் நாற்பது இடங்களில் (கலித். 66:9-12, 66:13-16, 66:17-20, 66:23-25, 67:12-13, 67:10-11, 67:14-15, 68:7-9, 69:8-11, 69:12-15, 69:16-17, 70:9-10, 71:11-12, 71:15-16, 71:19-20, 72:9-12, 72:13-16, 72:17-20, 73:7-9, 73:11-13, 73:14-17, 77:10-11, 77:14-15, 77:18-19, 79:11-14, 79:15-18, 79:20-23, 81:29-32, 88:10-14, 90:7-10, 90:11-19, 91:1-5, 91:9-15, 93:14-16, 95:1-4, 95:8-9, 96:1-4, 98:1-6) இம்மெய்ப்பாடு இடம்பெறுகின்றது.

தலைவன் பரத்தையர் இல்லம் சென்று வந்ததை அறிந்த தலைவி,

**"அணைமென் தோள்யாம் வாட, அமர்துணைப் புணர்ந்து நீ,**
**'மணமனையாய்' என வந்த மல்லலின் மாண்பு அன்றோ -**
**பொதுக் கொண்ட கவ்வையின்பூ அணிப் பொலிந்த நின்**
**வதுவைஅம் கமழ் நாற்றம் வைகறைப் பெற்றதை?" (கலித்.66:9-12)**

என்றுரைக்கிறாள். இதில் பரத்தையர் பூசிக் கொள்ளும் நறுமணச் சாந்துடன் வைகறையில் இல்லம் வரும் தலைவனை நிந்திப்பதாக உள்ளது. மேலும் தலைவன் பரத்தையர் இல்லம் செல்லவில்லை எனப் பொய்யுரைக்கின்றான். அதனைக் கேட்ட தலைவி நீ பரத்தையர்கள் துணங்கை கூத்து ஆடும் இடத்திற்குச் சென்றதால்

அவர்களின் சிலம்பு உன் ஆடையில் பட்டுக் கரைப் பகுதியானது கிழிந்துள்ளது. அதுவே நீ அங்கு சென்று வந்ததைக் காட்டிக் கொடுத்துவிட்டது என்கிறாள். (கலித்.73:14-17)

தலைவி மட்டுமல்லாது காமக்கிழத்தியும் பரத்தையர் இல்லம் சென்று வந்த தலைவனைக் கடிந்துரைக்கின்றதை,

**“பட்டுழி அறியாது, பாகனைத் தேரொடும்**
**விட்டு, அவள் வரல் நோக்கி, விருந்து ஏற்றுக் கொள நின்றாய்**
**நெஞ்சத்த பிறவாக, ‘நிறையிலள் இவள்’ என,**
**வஞ்சத்தான் வந்து, ஈங்கு வலி அலைந்தீவாயோ?” (கலித்.69:12-15)**

என்னும் பாடலடிகள் உணர்த்தும். தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்தைத் தலைவியும் காமக்கிழத்தியும் வெறுத்துக் கூறுதலைக் காணமுடிகின்றது. இன்றும் ஒருவரிடம் உள்ள தீய பண்பை வெறுத்து அதனைத் திருத்த முயற்சி செய்யும் போது இம்மெய்ப்பாடானது தோன்றுகின்றது.

## புணர்ந்துழி உண்மை

புணர்ந்துழி உண்மை என்பதற்கு, **புணர்ந்தவழி யூடலுள்வழி மறைத்துக் கூறாது அவ்வழி மனநிகழ்ச்சியுண்மை கூறுதல்**[9] என இளம்பூரணரும் **முற்கூறிய இல்லது காய்தலும் உள்ளதுவர்த்தலுமாகிய விகாரமின்றிப் புணர்ச்சிக் காலத்துச் செய்வன சென்ற உள்ளநிகழ்ச்சி**[10] எனப் பேராசிரியரும் உரை கூறுகின்றனர்.

தலைவனது புறத்தொழுக்கத்தைக் கண்ட தலைவி தலைவனுடன் ஊடல் கொண்டு இல்லது காய்தலும் உள்ளது உவத்தலும் செய்வாள். அவனது செயல்கள் அனைத்தையும் அறவே வெறுப்பவள் போன்று மாறுபடப் பேசுவாள். ஆனால் புணர்ச்சிக் காலத்து தலைவனின் மனது ஒன்றி உண்மை கூறுவாள். இதுவே புணர்ந்துழி உண்மை என்னும் மெய்ப்பாடாகும்.

கலித்தொகையில் ஒரு பாடலில் மட்டுமே இம்மெய்ப்பாடு பதிவு செய்யப்பட்டுள்ளது. இப்பாடலில் புணர்ச்சிக் காலத்தில் தலைவன் உண்மையைக் கூறுவதாக உள்ளது. புணர்ச்சிக்குப் பின்னர் உறங்கும் வேளையில் கனவு கண்ட தலைவன் தான் பொருள்வயின் பிரிந்து சென்று பொருள் ஈட்டி வரும் வரை மனையறம் காத்துத் தலைவி இருப்பாளா என்று அரற்றுவதை,

**“மாசு இல் வண் சேக்கை, மணந்த புணர்ச்சியுள்,**
**பாயல் கொண்டு என்தோள் கனவுவார், ‘ஆய்கோல்**
**தொடி நிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்,**
**கடிமனை காத்து, ஓம்ப வல்லுவள் கொல்லோ-**
**இடு மருப்பு யானை இலங்கு தேர்க்கு ஓடும்**
**நெடு மலை வெஞ்சுரம் போகி, நடு நின்று,**
**செய்பொருள் முற்றும் அளவு? என்றார்”          (கலித்.24:6-12)**

என்னும் பாடலடிகள் சுட்டும்.

## பொழுது மறுப்பாக்கம்

பொழுது மறுப்பாக்கம் என்பதற்கு களவில் இரவுக்குறி பகற்குறி என்ற பொழுது வரம்பு உண்டு. கற்பு வாழ்வில் இத்தகைய வரம்பு இல்லை. எனவே கற்பில் நீங்காது உடனுறையுந் தலைவி மகிழ்ச்சியாக இருத்தல் இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இடம்பெறவில்லை.

## அருள்மிக உடைமை

அருள்மிக உடைமை என்பதற்கு, **தலைமகன் மாட்டு அருள் புலப்பட நிற்கும் நிலை**[11] என இளம்பூரணரும் **களவுக் காலத்துப் போலத் துன்பமிகுதலன்றி அருள்மிகத் தோன்றிய நெஞ்சினளாதல்**[12] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

இல்லற வாழ்வில் இனிதொழுகும் தலைவி கொண்ட கொழுநன் பாலும் சுற்றத்தார் பாலும் அருளுடையவளாக விளங்க வேண்டும். தலைவி அருளால் நிரம்பிய

நெஞ்சினளாகத் தோன்றுவதே இம்மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு (66:22-23, 95:27-29) இரண்டு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

தலைவன் வினைவயிற் பிரிவு வாழ்க்கையின் இன்றியமையாத ஒன்றாகும் என்பதை அறிந்த தலைவி அருள்மிக்க நெஞ்சினளாக இருக்கின்றாள். தலைவனது பிரிவு, துன்பத்தைத் தந்தாலும் தலைவன் செல்லும் பாலை நில வழியானது கடுமையுடையது என்பதை அறிந்து அறக்கடவுளையும் ஞாயிற்றையும் தலைவி வணங்குதல் இதற்குச் சான்றாகும்.

புறத்தொழுக்கம் சென்று வந்த தலைவனைத் தலைவி ஏற்றுக் கொள்வதினை,

**“புல்லி அவன்சிறிது அளித்தக்கால், என்**

**அல்லல் நெஞ்சம் மடங்கலும் காண்பல்” (கலித்.122:18-19)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மீண்டு வந்த தலைவன் சிறிது அருள் செய்தாலும் என் நெஞ்சம் அவனிடம் தஞ்சம் அடைந்து விடுகின்றது என்கிறாள் தலைவி.

## அன்புதொக நிற்றல்

அன்புதொக நிற்றல் என்பதற்கு, **அன்பு புலப்பட நிற்றல்**[13] என இளம்பூரணரும் **களவுக் காலத்து விரிந்த அன்பெல்லாம் இல்லறத்தின்மேற் பெருகிய விருப்பினானே ஒருங்குதொக நிற்றல்**[14] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர்.

இல்லற வாழ்க்கையில் அன்பு நிறைந்திருக்க வேண்டும். பிரிவுக்காலத்தும் தலைவி அன்பு திரியாது ஒழுகும் பண்புடையவள். அன்பின் பிணைப்பில் தான் இல்லறம் சிறக்கும் என்பதை இம்மெய்ப்பாடு காட்டுகின்றது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு நான்கு இடங்களில் (கலித்.72:1-4, 80:1-9, 85:34-36, 5:1-11, 106:31-33) இடம்பெற்றுள்ளது.

பிரிந்து செல்லும் தலைவன் வினைமுற்றி மீண்டு வரும் போது அவனை அன்போடு வரவேற்கும் தலைவியைப் பாலைக்கலிப் பாடல்கள் பதிவு செய்துள்ளன.

பரத்தையர் காரணமாகப் பிரிந்து சென்று திரும்பிய தலைவனிடம் ஊடல் கொள்ளும் தலைவி அவன் காட்டும் சிறிய அன்பிற்கு ஊடலைத் தீர்த்து அவனுடன் உடன்படுகின்றாள். பிரிந்து சேரும் தலைவன் தலைவியரிடையே இம்மெய்ப்பாடு (கலித். 72:1-4, 80:1-9, 85:34-36) தோன்றுகின்றது.

### பிரிவாற்றாமை

களவுக்காலத்தில் தலைவனின் பிரிவை ஏற்றுக் கொள்ளும் தலைவி கற்புக் காலத்தில் ஏற்றுக் கொள்ளா நிலையில் வெளிப்படுவதே பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடாகும்.

**களவுக் காலத்தில் பிறர் அறியாமல் ஒழுக வேண்டுதலின் பிரிவு தேவைப்பட்டது. கற்புக் காலத்தில் பிறர் அறியாது ஒழுகல் வேண்டுவதின்றாகலின், தலைவன் ஓதல் தூது முதலிய குறித்துப் பிரிதலைத் தலைவி ஆற்றாதவளாய்ப் பிரியாதிருத்தலையே வேண்டும் குறிப்பினளாதல் இது கற்பிற்கே சிறந்த பத்து மெய்ப்பாடுகளுள் ஒன்று**[15] என்கிறார் பேராசிரியர்.

தலைவன் பொருள்வயிற் பிரிவு காரணமாகச் செல்லும் போது தலைவியின் பிரிவுத் துயரைப் பெருங்கடுங்கோ அழகாகக் கூறியிருப்பர். தலைவன் பிரிய எத்தனிக்கும் போது தலைவி நடையில் ஏற்படும் தடுமாற்றத்தாலும், கண்ணீர் அரும்பலாலும், பெரு மூச்சு விடுதலாலும் அவளது ஆற்றாமையைத் தலைவனுக்கு உணர்த்த முற்படுவாள். கலித்தொகையில் ஐம்பத்து ஒன்பது (கலித்.2:8-10, 2:11-14, 2:15-18, 2:19-22, 3:6-7, 3:10-11, 3:14-15, 5:10-11, 5:12-13, 5:14-15, 5:18-19, 7:18-21, 10:8-9, 10:10-11, 10:12-15, 10:16-19, 16:1-3, 17:1-3, 17:5-8, 17:9-12, 17:13-16, 19:7-13, 23:3-5, 23:8-9, 23:10-11, 23:12-13, 24:14-17, 26:17-18, 26:13-14, 27:9-10, 27:13-14, 27:17-18, 28:12-15, 29:12-13, 29:16-17, 29:20-21, 30:5-6, 30:9-10, 30:13-14, 31:11-12, 31:15-16, 31:19-20, 32:12-13, 33:7-9, 33:17-20, 33:24-25, 34:12-13, 34:16-17, 35:13-16, 41:26-27, 118:9-10, 122:1-3, 131:19-20, 131:28-30, 132:23-24, 133:16-17, 137:1-3, 146:6-9)

இடங்களில் இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. பாலை பாடிய பெருங்கடுங்கோவே இம்மெய்ப்பாட்டை பல பாடல்களில் பாடியுள்ளார்.

பாலைக்கலியில் தலைவன் ஒருவன் பொருள் தேடப் பிரிந்து செல்ல எண்ணுகிறான். இதனை உணர்ந்த தலைவி வேற்றூரில் கடமையைக் கண்ணாகச் செய்து கொண்டு இருக்கும் போது இங்கிருந்து பொருள் தேட வருவோரிடம் என்னைப் பற்றி விசாரிக்காதே அவ்வாறு நீ கேட்டாயானால் உனது வேலை கெடும் படியான அவலச் செய்தியை நீ அறிய நேரிடும். நீ இல்லையேல் நான் உயிர் வாழமாட்டேன் இறந்துபடுவேன் என்று உரைக்கின்றாள். (கலித்.19:8-13)

பொருள் ஈட்டச் செல்லும் தலைவனிடம், நீ தலைவியைப் பிரியாமல் இருத்தலே சிறந்த பொருள் எனத் தலைவியின் பிரிவுத் துயரைத் தோழி நுட்பமாக வெளிப்படுத்துவதை,

**“இடன் இன்றி இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு, என,**
**கடன் இறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருள் ஆகுமோ**
**வடமீன் போல் தொழுதுஏத்த வயங்கிய கற்பினாள்**
**தடமென்தோள் பிரியாமை பொருளாயின் அல்லதை?” (கலித்.2:19-22)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மனைவியைப் பிரியாமல் இருத்தல் வேண்டும் என்று தலைவனுக்குத் தோழி அறிவுறுத்தும் நிலையில் இம்மெய்ப்பாடு அமைந்துள்ளது.

தலைவியிடம் நகையாட விரும்பிய தலைவன் ஒருநாள் நெடுநேரம் அருகில் வராமல் இருந்தான். அதனால் தலைவன் தன்னைக் கைவிட்டு விட்டானோ எனத் தலைவி கலங்குகிறாள். இதன்மூலம் தலைவனின் சிறுநேரப் பிரிவைக்கூடத் தாங்காதவளாக (கலித்.10:8-9) தலைவி உள்ளதை அறியமுடிகின்றது.

கற்புக் காலத்தில் தலைவனது பிரிவைத் தாங்காத தலைவியின் நிலைக்கு தலைவன் மீது அவள் கொண்ட அதீத காதலுணர்ச்சியே காரணம். இதுவே பிரிவின் போது துயர உணர்ச்சியாக மாறி பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடாக

உருப்பெருகின்றது. இன்றைய நவீன காலத்திலும் ஓதற்காகவும், பொருளீட்டவும் மனைவியைப் பிரிந்து செல்ல வேண்டிய நிலைக்குப் பல கணவன்மார்கள் தள்ளப்படுகிறார்கள். அப்படிப்பட்ட சூழலில் கணவனைப் பிரிந்த மனைவியிடம் பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாட்டைக் காணமுடிகின்றது.

**மறைந்தவை உரைத்தல்**

மறைந்தவை உரைத்தல் என்பதற்கு, **களவுக் காலத்து நிகழ்ந்தனவற்றைக் கற்புக் காலத்துக் கூறுதல்**[16] எனப் பேராசிரியர் கூறுகின்றார். இம்மெய்ப்பாடு நிகழும் நிலையைக் கற்பியலில் தலைவிக்குரிய கூற்றின்கண்

**"களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி**
**அலமரல் உள்ளமொடு அளவிய இடத்தும்" (தொல்.நூ.1092)**

எனக் கூறுவர் தொல்காப்பியர். இந்நிலையில் கற்பின்கண் தோன்றும் மனக்குறிப்பைப் புலப்படுத்தலே மறைந்தவை உரைத்தல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு பதினொரு இடங்களில் (கலித். 14:1-9, 21:6-8, 22:9-11, 22:12-14, 22:15-17, 76:10-11, 76:14-15, 88:19-21) பதிவு செய்யப்பட்டுள்ளது.

களவில் தலைவியின் உறுப்பு நலன்களைப் பாராட்டிய தலைவன் கற்பில் பாராட்டவில்லை என்பதை,

**"நறுமுல்லை நேர்முகை ஒப்ப நிரைத்த**
**செறி முறை பாராட்டினாய்; மற்று, எம்பல்லின்**
**பறிமுறை பாராட்டினாயோ? - ஐய!**
**நெய்இடை நீவி மணிஒளி விட்டன்ன**
**ஐவகை பாராட்டினாய்; மற்று, எம் கூந்தல்**
**செய்வினை பாராட்டினாயோ? - ஐய!**
**குளன் அணி தாமரைப் பாசரும்பு ஏய்க்கும்**
**இளமுளை பாராட்டினாய்; மற்று, எம் மார்பில்**

**தளர்முலை பாராட்டினையோ? ஐய;"  (கலித்.22:9-17)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இதில் தலைவியின் பல்லையும் கூந்தலையும் முலையையும் முறையே முல்லையரும்பு நீலமணி தாமரைமொட்டு போன்றவற்றுடன் முன்னர் ஒப்பிட்டு பாராட்டிய தலைவன் தற்போது பாராட்டவில்லை. களவுக் காலத்தில் இரந்து பெற்ற முகபாவம் வேறு கற்புக் காலத்தில் காட்டும் முகபாவம் வேறு எனத் தலைவி களவில் நிகழ்ந்ததைக் கற்பில் நினைத்துக் கூறுவதாக உள்ளது.

## இன்பத்தை வெறுத்தல்

தலைவனைப் பிரிந்து வாடும் தலைவிக்கு இன்பம் தரக்கூடிய அனைத்தையும் வெறுக்கவே தோன்றும். கற்பில் இன்பத்தை வெறுத்தல் என்னும் மெய்ப்பாடானது நான்கு இடங்களில் (கலித். 28:5-11, 29:16-17, 32:8-13, 33:22-25) காணப்பெறுகிறது

தலைவனுடன் சேர்ந்திருக்கும் போது வருகின்ற மாலைக் காலமானது எந்தளவிற்கு இன்பத்தைத் தருகின்றதோ அதே போல் பிரிந்திருக்கும் போது அதே அளவிற்குத் துன்பத்தையும் தருகின்றது. இளவேனில் காலத்தில் குயில்கள் தம் இணையுடன் சேர்ந்து கூவுகின்றன. திருமகள் மார்பில் தவழும் முத்தாரம் போல ஆற்றுநீரானது மணலை ஊடுருவிச் செல்கின்ற இன்ப வேளையை அனுபவிக்க தலைவன் உடன் இல்லையே என வருந்துகின்றாள். (கலித்.28:5-11)

வண்டுகள் விரும்பி உண்ணும் மலர்ந்த மலர்களின் மணமும், நிலவுடைய இரவுப் பொழுதும், யாழிசைக்குச் சுவை சேர்க்கும் குழலின் இசையைப் போல வண்டுகளின் ஒலியோடு தும்பிகளும் தாது ஊதிப் பாடுகின்றன. இத்தகு மாலை வேளையானது தலைவிக்குத் துன்பத்தையே தருவதை,

**"நரம்பின் தீம்குரல் நிறுக்கும் குழல் போல்**

**இரங்கு இசை மிஞிறொடு தும்பி தாது ஊத"  (கலித்.33:22-23)**

என்னும் பாடலடிகளின் வாயிலாக உணரமுடிகின்றது. மேலும் மரங்களில் மலர்கள் பூத்துக் குலுங்கியதையும் யாழிசை போல வண்டுகள் புதர்களின் நடுவே இசை

பாடுவதையும் பெண்கள் நடனமாடுவதைப் போல மரக்கிளைகள் அசைவதையும் கண்ட தலைவிக்கு பிரிவுத் துயர் மிகுதியாகியதைக் காணமுடிகின்றது. இன்பம் தருகின்ற அனைத்தும் துன்பம் தருவதால் தலைவி அதனை வெறுத்துக் கூறுகிறாள்.

## ஏதமாய்தல்

கலித்தொகை கற்புப் பாடல்களில் பதின்மூன்று இடங்களில் (கலித். 5:10, 4:1-8, 75:7-12, 29:18-19, 23:7-13, 68:12-15, 69:21-25, 78:11-12, 32:8-9, 78:15-20, 80:10-13, 80:16-17, 80:20-21) ஏதமாய்தல் என்னும் மெய்ப்பாடானது இடம்பெற்றுள்ளது. இம்மெய்ப்பாடானது தலைவன் பொருள்வயிற் பிரிந்து செல்ல எத்தனிக்கும் போது செல்லும் வழியில் ஏற்படும் துன்பங்களை,

**"வலிமுன்பின், வல்லென்ற யாக்கை, புலிநோக்கின்**
**சுற்றமை வில்லர், சுரிவளர் பித்தையர்,**
**அற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் மறவர் தாம்**
**கொள்ளும் பொருள் இலர் ஆயினும், வம்பலர்**
**துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து, உயிர்வெளவலின்,**
**புள்ளும் வழங்காப் புலம்பு கொள் ஆர்இடை,**
**வெள்வேல் வலத்திர் பொருள்தரல் வேட்கையின்,**
**உள்ளினிர் என்பது அறிந்தனள்"** **(கலித்.4:1-8)**

என்று எடுத்துரைக்கின்றது. தலைவன் செல்லும் வழியில் ஏற்படும் துன்பம் குறித்துத் தலைவியும் தோழியும் ஆராய்ந்து கூறுதல் பாலைத் திணைப் பாடல்களில் அதிகமாகக் காணப்படுகின்றது. இன்றைய கால கட்டத்திலும் காதலர்களிடம் இம்மெய்ப்பாடு இருந்து வருதல் குறிப்பிடத்தக்கது.

## பசியட நிற்றல்

பசியட நிற்றல் என்பதற்கு, **உண்ணாமை**[17] என இளம்பூரணரும் **பசி வருத்தவும் அதற்குத் தளராது உணவு மறுத்தல்**[18] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். பசி

இருந்தும் உணவை உண்ணாமல் இருத்தலே பசியட நிற்றல் என்னும் மெய்ப்பாடாகும். பிரிவுத் துயரால் தலைவியிடம் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது. இன்பத்தை வெறுத்து துன்பத்துப் புலம்பிய தலைவி உணவையும் வெறுத்து ஒதுக்குவாள். உணவை உட்கொள்ளாமல் தனது உள்ளத்து உணர்வை இம்மெய்ப்பாட்டின் மூலம் புலப்படுத்துவாள்.

கலித்தொகையில் கற்புப் பாடல்களில் ஒரு பாடலில் மட்டும் இம்மெய்ப்பாடு காணப்பெறுகின்றது. கற்புக் காலத்தில் தலைவன் தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் செல்ல முடிவு செய்கிறான். தலைவி தானும் உடன்வருகிறேன் என்ற போது பாலை நிலத் தன்மையைக் கூறி மறுக்கிறான் தலைவன். அப்போது தலைவி நீ பிரிந்து சென்றால் உண்ண வேண்டியவற்றை நான் இனி உண்ண மாட்டேன் எனக் கூறுவதை,

**“இனியான், உண்ணலும் உண்ணேன்; வாழலும் வாழேன்” (கலித்.23:6-7)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இன்றும் மனதுக்கு உகந்தவரின் பிரிவின் போதும் துன்பத்தின் போதும் உணவினை மறுத்துக் கூறுதல் என்னும் மெய்ப்பாடு நடைமுறையில் உள்ளது.

**பசலை பாய்தல்**

கலித்தொகையில் இம்மெய்ப்பாடானது இருபத்து நான்கு இடங்களில் (கலித்.4:17-18, 7:7-8, 15:12-13, 15:16-17, 16:20-21, 17:3-4, 17:7-8, 18:3-4, 20:15-18, 22:19-20, 25:21-22, 26:3-4, 26:13-14, 26:17-18, 27:9-10, 29:7-8, 28:14-15, 31:3-4, 32:7-8, 32:13-14, 33:13-14, 77:12-13, 78:11-12, 82:20-21, 100:17-18) இடம்பெற்றுள்ளது. களவு, கற்பு எனும் இருதிணைக்குரிய மெய்ப்பாடாகப் பசலை பாய்தல் அமைந்துள்ளது. கற்பு வாழ்வில் தலைவன் பிரிவால் தலைவியின் நிறம் நிழலில் நின்ற தளிர் போல வெளுத்து விடுவதை,

**“நீள் நிழல் தளிர்போல நிறன் ஊழ்த்தல் அறிவேன்; நும்**
**தாள் நிழல் கைவிட்டு யான் தவிர்தலைச் சூழ்வலோ?” (கலித்.20:17-18)**

என்னும் பாடலில் கூறுவர் பெருங்கடுங்கோ. மேலும்

**‘“வறன் ஓடின் வையகத்து வான்தரும் கற்பினாள்**

**நிறன் ஓடிப் பசப்பு ஊர்தல் உண்டு”’ (கலித்.16:20-21)**

**“நிலம் பூத்த மரமிசை நிமிர்பு ஆலும் குயில் எள்ள,**

**நிலம் பூத்த நிறம் சாய, நம்மையோ மறந்தைக்க” (கலித்.27:9-10)**

என்னும் பாடலடிகளில் தலைவியின் நிறம் பசலையால் மாறுதல் சுட்டப்பட்டுள்ளது.

**“நுண் எழில் மாமைச் சுணங்கு அணி ஆகம் தம்**

**கண்ணொடு தொடுத்தென நோக்கியும் அமையார்” (கலித்.4:17-18)**

என்னும் பாடலடிகளில் தலைவனைப் பிரிந்த தலைவியின் எழில்நலம் பசலையால் உண்ணப்பட்டதை புலப்படுத்தும். தலைவியின் கண்கள் பசலையால் உண்ணப்பட்டதை,

**“பொன் எனப் பசந்த, கண் போது எழில் நலம் செல;**

**தொல் நலம் இழந்த கண் துயில் பெறல் வேண்டேன்மன்” (கலித்.77:12-13)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். மேலும் தலைவியின் மார்பு பசத்தல் (கலித்.17:3-4) முகம் பசத்தல் (100:17-18, 15:16-17) தலைவியின் நுதல் பசத்தல் போன்றவையும் புலவர்களால் பாடப்பெற்றுள.

## உடம்புநனி சுருங்கல்

தலைவனைப் பிரிந்த தலைவியிடம் தோன்றுவது உடம்புநனி சுருங்கல் என்னும் மெய்ப்பாடாகும். கற்பில் இம்மெய்ப்பாடு பத்து இடங்களில் (கலித்.3:3-4, 7:15-16, 16:2-3, 25:16-19, 29:17-18, 33:19-20, 34:17-19, 36:12-13, 66:9-10, 68:21-25) இடம்பெற்றுள்ளது. தலைவனின் பிரிவால் வாடும் தலைவியின் கைவளைகள் கழன்றதை,

**“இறைநில்லா வளைஓட, இதழ் சோர்பு பனிமல்க,**

**பொறை நில்லா நோயோடு புல்லென்ற நுதல் இவள்” (கலித்.3:3-4)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். தலைவனைப் பிரிந்த தலைவி காந்தள் மலர்கள் காற்றின் வேகத்தால் காம்பறுந்து வீழ்வதைப் போல முன்கையிலுள்ள வளையல்கள் வீழ்கின்ற அளவிற்கு மெலிந்து போவாள் என்றும் (கலித்.7:15-16) பிரிவால் தலைவியின் உடல் மெலிந்தது அதனால் முன் கையிலிருந்து வளையல்கள் கழன்று வீழ்ந்தன என்பதும் (கலித்.16:2-3) இம்மெய்ப்பாட்டிற்கு உரியனவாகும்.

நம்மிடம் செல்வம் இருக்கும் போது சேர்ந்து இருந்து அதனை நன்கு அனுபவித்துப் பின்னர் வறுமையுற்ற நிலையில் ஏறிட்டும் பார்க்காமல் பிரிந்து செல்வோரைப் போல தலைவன் இருக்கும் போது கை வளையல்கள் சிறப்பாக இருந்து அழகு சேர்த்தும் தலைவன் பிரிந்து சென்றதும் கையை விட்டுத் தானாக கழன்று வீழும் அளவிற்கு உடல் மெலிந்து போவதை,

**“ஈங்கு நீர் அளிக்குங்கால் இறை சிறந்து, ஒருநாள் நீர்**
**நீங்குங்கால், நெகிழ்பு ஓடும் வளை எனவும் உள அன்றோ-**
**செல்வத்துள் சேர்ந்தவர் வளன் உண்டு, மற்று அவர்**
**ஒல்கத்து நல்கிலா உணர்விலார் தொடர்பு போல்?” (கலித்.25:16-19)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். மேலும் தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற காலமும் வந்துவிட்டது ஆனால் தலைவன் இன்னும் வரவில்லையே என அவனையே எண்ணித் தன் தோள்கள் மெலிந்து முழுவதுமாகத் தளர்ந்துவிட்டன (கலித்.36:12-13) எனத் தலைவி கூறுவதைக் காணலாம். இன்றும் பிரிவால் வாடுபவருக்கு உடம்பு மெலிதல் என்பது ஏற்படுகின்றது.

### கண்துயில் மறத்தல்

கண்துயில் மறத்தல் என்பதற்கு தூக்கம் மறந்த நிலை எனலாம். இம்மெய்ப்பாடானது கற்புப் பாடல்களில் நான்கு இடங்களில் (கலித். 10:12-13, 70:7-8, 85:27-28, 9:12-13) பயின்று வருகின்றது. புறத்தொழுக்கம் சென்ற தலைவனை எண்ணித் பிரிவுத் துயரால் தலைவி தூங்காமல் இருப்பதை,

**“நலம் நீப்பத் துறந்து எம்மை, நல்காய் நீ விடுதலின்,**

**பலநாளும் படாத கண், பாயல் கொண்டு இயைபவால்” (கலித்.70:7-8)**

இன்றும் துன்பத்தால் உழலுபவர்கள் தூக்கம் வராமல் தவிப்பதை கண்கூடாகக் காணலாம்.

## அவன்தமர் உவத்தல்

அவன்தமர் உவத்தல் என்னும் மெய்ப்பாட்டிற்கு, **தலைவன் தமரைக் கண்டவழி உவத்தல்**[19] என இளம்பூரணரும் **அவன் தமரைக் கண்டு உவந்தது. இனி முனிவெனப் படாதோ வெனின் அது தலைமகனைப் புலந்தாற் போல்வதோர் முனிவாயினல்லது பகைபட நிகழாக் குறிப்பெனப்படும் அல்லாக்கால் இது பெண்டன்மை அன்றமாகலின்**[20] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

தலைவி தலைவனது சுற்றத்தாரைக் கண்டு மகிழ்தல் அவன் தமர் உவத்தல் என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடு கலித்தொகையில் மூன்று பாடல்களில் (கலித். 82:13-14, 83:16-18, 84:12-15) பயின்று வந்துள்ளது. பரத்தையர்கள் தலைவனின் புதல்வனைக் கண்டு மகிழ்ந்ததை,

**“அடக்கம் இல் போழ்தின் கண், தந்தை காமுற்ற**
**தொடக்கத்துத் தாயுழைப் புக்காற்கு, அவளும்**
**மருப்புப் பூண் கையுறையாக அணிந்து,**
**‘பெருமான்? நகை முகம் காட்டு!’ என்பாள் கண்ணீர்**
**சொரி முத்தும் காழ் சோர்வ போன்றன; மற்றும்,**
**வழிமுறைத் தாயுழைப் புக்காற்கு, அவளும்**
**மயங்கு நோய் தாங்கி, மகன் எதிர்வந்து,**
**முயங்கினள் முத்தினள் நோக்கி, நினைத்தே,**
**‘நினக்கு யாம் யாரேம் ஆகுதும்!’ என்று,**
**வனப்பு உறக் கொள்வன நாடி அணிந்தனள்” (கலித்.82:10-19)**

என்னும் பாடல் உரைக்கும். இதில் தலைவனின் மகனைக் கண்டு மகிழ்ந்து சில அணிகலன்களையும் பரத்தையர் அணிவித்து மகிழ்ந்ததை அறியமுடிகின்றது. தலைவனின் மகன் என அறிந்து அவனைக் கண்டு மகிழ்ந்ததை (கலித்.83:16-20; 84:12-15) மருதக்கலியில் மருதனிளநாகனார் பதிவு செய்துள்ளார்.

## எம்மெய்யாயினும் ஒப்புமைக் கோடல்

எம்மெய்யாயினும் ஒப்புமைக்கோடல் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் பதினான்கு இடங்களில் (கலித். 11:10-13, 11:14-17, 20:20-23, 21:12-14, 25:3-6, 32:1-5, 74:1-4, 84:11-14, 86:11-14, 86:17-18, 86:21-22, 96:7-21, 96:37-39, 97:9-23) பயின்று வந்துள்ளது. பொருள்வயின் பிரியும் தலைவனிடம் தானும் உடன் வருவதாகக் கூறும் தலைவி அதற்குரிய காரணமாக,

**“கணை கழிகல்லாத கல்பிறங்கு ஆர் இடை,**
**பணை எருத்து எழில் ஏற்றின் பின்னர்ப்**
**பிணையும் காணிரோ? பிரியுமோ, அவையே?” (கலித்.20:20-23)**

என்றுரைக்கின்றாள். தலைவனை ஏற்றுக்கும் தன்னைப் பிணைமானுக்கும் ஒப்புமைப்படுத்தி கூறுகின்றாள்.

மருதக்கலியில் தலைவி பரத்தையை யானை, குதிரை, குறும்பூழ், கடவுள் ஆகியவற்றோடு ஒப்புமைப்படுத்தி கூறியுள்ளமையை (கலித். 84:11-14, 86:11-14, 86:17-18, 86:21-22, 96:7-21) அறியமுடிகின்றது. தலைவன் தலைவியின் உறுப்புகளை பலவற்றுடன் ஒப்புமைப்படுத்துவதையும் காணமுடிகின்றது.

## ஒப்புவழி உவத்தல்

ஒப்புவழி உவத்தல் என்பதற்கு, **தலைமகனோடு ஒக்குமெனப் பிறிதொன்று கண்டவழி யுவத்தல்**[21] என இளம்பூரணரும் **ஒப்புமை யுண்டாக்கிய வழியே உவமை கொண்டு அதனானே உவகை தோன்றுவது**[22] எனப் பேராசிரியரும் பொருளுரைப்பர்.

ஒப்புமை உண்டாக்கிய வழி உவமை கொண்டு அதனால் உவகை தோன்றுவது ‘ஒப்புவழி உவத்தல்’ என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஐந்திடங்களில் (கலித். 81:1-10, 86:1-10, 86:16-17, 80:14-15) இடம்பெற்றுள்ளது. காண்போரெல்லாம் காதல் கொள்ளும் படி அழகை உடைய தலைவனைப் போன்று புதல்வன் உள்ளான் எனப் புதல்வனைத் தலைவி, தலைவனோடு ஒப்புமைப்படுத்தி மகிழ்ந்து உரைக்கின்றாள் (கலித்.80:14-15)

தலைவனிடம் உள்ள சிறந்த பண்புகளைச் ஒப்புமைப்படுத்தி தலைவி மகிழ்வதை,

**“பால் கொளல் இன்றி, பகல்போல், முறைக்கு ஒல்காக்**

**கோல் செம்மை ஒத்தி, பெரும!”　　　　(கலித்.86:16-17)**

என்பதில் நீதிமுறை தவறாத செங்கோல் ஆட்சி செய்து நடுநிலையாய் நிற்கும் துலாக்கோல் போன்று உன் தந்தையை ஒத்து இருக்கின்றாயே என மகனைத் தலைவனுடன் ஒப்புமைப்படுத்தி மகிழ்ந்ததை அறியமுடிகின்றது.

இன்றும் இம்மெய்ப்பாடு ஒவ்வொரு சிறு செயலுக்கும் ஒப்புமைப்படுத்திப் பார்ப்பது என்னும் நிலையில் அன்றாட வாழ்வில் அனைவராலும் பயன்படுத்தப்படும் மெய்ப்பாடாக உள்ளமை குறிக்கத்தக்கது.

### கண்டவழி உவத்தல்

பிரிந்திருந்த தலைவி தலைவனைக் கண்டவுடன் மகிழ்தலே கண்டவழி உவத்தல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகை கற்புப் பாடல்களில் நான்கு இடங்களில் (கலித். 29:23-26, 34:21-24, 35:22-25, 71:4-5) இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. பிரிந்து சென்ற தலைவன் திரும்ப வந்த நிலையில் தலைவனைக் கண்ட தலைவி மகிழ்ந்ததை,

**“துனி சிறந்து இழிதரும் கண்ணின் நீர் அறல் வார,**

**இனிது அமர் காதலன் இறைஞ்சித்தன் அடி சேர்பு” (கலித்.71:4-5)**

**“வருந்தினை வதிந்த நின் வளை நீங்க, சேய் நாட்டுப்**

**பிரிந்து செய் பொருட்பிணி பின் நோக்காது ஏகி, நம்**

**அருந்துயர் களைஞர் வந்தனர்” (கலித்.29:23-25)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். புறத்தொழுக்கம் மேற்கொண்ட தலைவன் திரும்பி வந்து தலைவியைச் சேர்ந்த போதும் பொருளீட்டுவதற்காக சேய் நாட்டிற்குப் பிரிந்து சென்றவன் திரும்பிய நிலையிலும் தலைவி மகிழ்ந்தமை இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

## கலக்கம்

கலக்கம் என்னும் மெய்ப்பாடானது கற்பில் நான்கு இடங்களில் (கலித். 10:12-13, 16:5-6, 25:13-14, 70:1-3) இடம்பெற்றுள்ளது. தலைவியுடன் நகையாட விரும்பிய தலைவன் ஒருநாள் துன்பம் விளைவிப்பது போலக் காட்டி நெடுநேரம் பிரிந்து அவளருகே வராமல் இருந்தான். அதனால் தலைவன் தன்னைக் கைவிட்டு விட்டான் என எண்ணிய தலைவி கலங்குகின்றாள். (கலித்.10:12-13) மேலும் தலைவனைப் பிரிந்த தலைவி நலம் முழுவதும் இழந்து கலங்கிய மெய்ப்பாட்டை,

**“தொல் நலம் தொலைபு, ஈங்கு, யாம் துயர் உழப்பத் துறந்து, உள்ளார்,**

**துன்னி, நம் காதலர், துறந்து ஏகும் ஆர்இடை” (கலித்.16:5-6)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். தலைவன் அருகிலிருக்கும் போது நீலமலர் போல விளங்கிச் சிறிது அளவில் பிரிந்தாலும் கலங்கிக் கண்ணீர் விடுபவள் தலைவி எனவும் (கலித்.25:13-14) பதிவு செய்துள்ளனர். பொய்கையில் அன்னமானது சேவலுடன் விளையாடிக் கொண்டிருந்த போது சேவலைக் காணாமல் அன்னப் பெடை கலங்கியதை,

**“மணிநிற மலர்ப்பொய்கை, மகிழ்ந்து ஆடும் அன்னம் தன்**

**அணி மிகு சேவலை அகல் அடை மறைத்தென,**

**கதுமென, காணாது, கலங்கி, அம்மடப் பெடை”** **(கலித்.70:1-3)**

என்னும் பாடலடிகள் உரைக்கும்.

## இன்புறல்

இன்புறல் என்பதற்கு, **நட்டாராகிப் பிரிந்து வந்தோரைக் கண்டவழி வருவதோர் மனநிகழ்ச்சி போல்வது காமநுகர்ச்சியின்றி வரும் இன்புறல்**[23] என இளம்பூரணரும் **“அவ்வுடைமையை நினையுந்தோறும் இடையிட்டுப் பிறக்கும் மனநிகழ்ச்சி**[24] எனப் பேராசிரியரும் கூறுகின்றனர். தான் செலவு செய்யாமல் ஈட்டி வைத்துள்ள செல்வத்தை அவ்வப்போது நினைத்துப் பார்க்கும் போது பிறக்கும் மனநிகழ்ச்சி இது மனத்தின் நிகழ்ச்சியை வெளிப்படுத்தும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடானது பதின்மூன்று இடங்களில் (கலித். 12:15-16, 18:9-11, 66:5-6, 80:14-15, 80:18-19, 82:12-14, 94:41-43, 138:29-31, 146:3-4, 106:32-33, 106:43-45, 118:11-12, 128:12-13) இடம்பெற்றுள்ளது.

தாம் வாழுகின்ற வாழ்நாளில் கடைசி நாள் இது என்று அறிந்தவர் யாருமில்லை. அதனால் இடைப்பட்ட இவ்வாழ்வை இன்பமாக வாழ வேண்டும் என்கிறார் பெருங்கடுங்கோ (கலித்.12:15-16)

எத்தகைய துன்பம் வந்தாலும் அதை நினைத்துக் கவலைப் படாமல் மனம் ஒன்றிக் கலந்து வாழ்பவரின் வாழ்வே இன்பமானது என்பதை,

**“ஒன்றன் கூறுஆடை உடுப்பவரே ஆயினும்**

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை”** **(கலித்.18:10-11)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். மழலைச் சொல்இன்பம் தரக்கூடியது என்பதை,

**“காமரு நோக்கினை, ‘அத்தத்தா’ என்னும் நின்**

**தேமொழி கேட்டல் இனிது”** **(கலித்.80:14-15)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். தம்மகனுக்கு நிலவினைக் காட்டி இன்புறுதலும் (கலித்.80:14-15) தத்தித் தத்தி நடந்து வரும் மகனின் நடையைக் காணும் போதுவரும் இன்பம் (கலித்.80:10-11) தலைவனின் மகனைத் தெருவில் கண்ட பரத்தை மகிழ்ந்து அவனுக்காக அணிகலன்கள் கொடுத்த போது அடைந்த இன்பமும் (கலித்.82:12-13) இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

முல்லைநிலத் தலைவி மோர் விற்று வரும் வேலையில் இவள் கணவன் கொல்லேறு கொண்டான் என ஊரார் கூறுவதைக் கேட்க நேரும் போது இன்பத்தைத் தலைவன் தருவானா எனத் தலைவி ஏங்குவதிலும் (கலித்.106:43-45) இம்மெய்ப்பாடு சுட்டப்பெற்றுளது.

## நடுவுநிலை

நடுவுநிலை என்பதற்கு, **ஒருமருங்கு ஓடாது நிகழும் மனநிகழ்ச்சி**[25] என இளம்பூரணரும் **ஒன்பது சுவையுள் ஒன்றென நாடக நிலையுள் வேண்டப்படும் சமநிலை அஃதாவது காம வெகுளி மயக்க நிலை நீங்கினோர் கண்ணே நிகழ்வது**[26] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர். கலித்தொகையில் ஒன்பது இடங்களில் நடுவுநிலை என்னும் மெய்ப்பாடு (கலித். 24:11-12, 42:13-15, 100:15-16, 99:5-6, 118:1-2, 129:3-5, 130:1-2, 139:2-4, 147:42-43) பயின்று வந்துள்ளது. இம்மெய்ப்பாடு செய்கையின் வழி வெளிப்படுவது குறிப்பிடத்தக்கது.

தலைவன் தலைவியுடன் கூடியிருக்கும் வேளையில் தான் வெம்மையான காட்டைக் கடந்து சென்று நடுவுநிலையுடன் முயன்று பொருள் ஈட்டி வருவேன் எனக் கூறுவதாகவும் (கலித்.24:11-12) தலைவன் ஒருபக்கமும் சாயாத துலாக்கோலை போன்ற அறத்தை விரும்புபவன் என்பதை,

**“ஆர்வுற்றார் நெஞ்சம் அழிய விடுவானோ -**

**ஓர்வு உற்று ஒருதிறம் ஒல்காத நேர்கோல்**

**அறம்புரி நெஞ்சத்தவன்?”** **(கலித்.42:13-15)**

என்னும் பாடலடிகள் விளக்கும். நேர்மையை விரும்பும் தலைவன், தலைவியை விட்டுச் செல்லமாட்டான் என்பது புலனாகின்றது. நடுவுநிலைமையுடன் அரசாண்ட அரசர்களைப் பற்றியும் (கலித்.118:1-2; 129:3-5) நடுவுநிலைமை தவறாத கூற்றமே எனத் தலைவி யமனைக் கூறும் போதும் நடுவுநிலை என்னும் மெய்ப்பாடானது காணப்பெறுகின்றது

‘**“நயனும், வாய்மையும், நன்னர் நடுவும்,**

**இவனின் தோன்றிய, இவை”’** **(கலித்.130:1-2)**

என்னும் பாடலடிகளும் இம்மெய்ப்பாட்டை விளக்கும். நடுவுநிலை என்னும் மெய்ப்பாடானது அகமாந்தர்களுக்கு மட்டுமின்றி பொதுநிலையில் அனைவருக்கும் உரியதாக உள்ளது.

## அருளல்

எல்லா உயிர்களுக்கும் அருள் செய்தல் என்பது அருளல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு நான்கு பாடல்களில் (கலித். 3:20-21, 11:1-2, 26:11-12, 66:22-23) பயின்று வந்துள்ளது. பரத்தையர் ஒழுக்கம் சென்ற தலைவன், தலைவி மீது கொண்ட அன்பால் மீண்டும் வந்து அருள் செய்ததால் தலைவி மகிழ்ந்தமை (கலித்.66:22-23) தலைவனானவன் தம் நிழலிலே வந்து சேர்ந்த பிறரையும் அருளுடன் காத்து தம் புகழ் உலகம் எங்கும் பரவிப் போற்ற அயல் நாட்டிலே சென்று வாழ்கின்றான் என்பதில் தலைவனின் அருட் தன்மை என்னும் மெய்ப்பாடு புலப்படுகிறது.

**தன்மை**

தன்மை என்பதற்குச் சாதியியல்பு என்பது பொருளாகும். கலித்தொகையில் மூன்று பாடல்களில் (கலித். 4:1-5, 9:1-4, 15:1-5) தன்மை என்னும் மெய்ப்பாடானது இடம்பெற்றுளது. பெருங்கடுங்கோ பாலைக்கலியில் மறவரின் தன்மையாக வரிச்சுற்று அமைந்த வில்லினை உடையவர்; நீண்டு வளர்ந்த மயிரினை உடையவர்; திடகாத்திரமான உடலினையும் உடல் வலிமையையும் புலி போன்ற பார்வையும் உடையவர்; என்பதை,

**"வலிமுன்பின், வல்லென்ற யாக்கை, புலிநோக்கின்**
**சுற்றமை வில்லர், சுரிவளர் பித்தையர்,**
**அற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் மறவர் தாம்**
**கொள்ளும் பொருள் இலர் ஆயினும், வம்பலர்**
**துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து, உயிர்வௌவலின்" (கலித்4:1-5)**

என்றுரைப்பர். புதிதாக வரும் வழிப்போக்கர்களிடம் பெறுதற்குரிய பொருள் இல்லை என்றாலும் தங்கள் அம்புபட்டுத் துடிதுடித்து இறப்பதைக் கண்டு மகிழும் தன்மை உடையவர்கள் என மறவர்களின் குணநலன்களைக் குறிப்பிடுகின்றார். அரசர்கள் பெரும் படையுடன் வந்தாலும் அஞ்சாது எதிர் நின்று போராடும் வீரம் உடையவர்கள். வில்லிலே அம்பைத் தொடுப்பதை நாணும் செயலாகக் கருதுவர். கடிய துடியின் ஆரவாரம், வலிய பார்வை, வலிமை மிகுந்த கழுத்தினை உடைய கலைமானின் கொம்பினைப் போன்ற தாழ்ந்த தாடியினையும் உடையவர். வழிச்செல்வோரிடம் பொருளைப் பறித்துக் கொண்டு அதற்கு ஈடாகப் புண்ணைக் கொடுப்பவர்கள். (கலித்.15:1-5) கொலைஞரின் தன்மையைக் கூறும் போது காட்டின் வழிச் செல்பவர்களைக் கொன்று அவ்வுடல்களை இலைகள் சருகுகள் கொண்டு குவியல்களாக மறைத்தமை (கலித்12:1-3) இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும். தொல்காப்பியர் மரபியலில் 'நூலே கரகம் முக்கோல் மனையே ஆயுங்காலை

அந்தணர்க்குரிய என்று அந்தணர்களின் தன்மையைக் குறிப்பிடுகின்றார். கலித்தொகையில்,

**“எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடை நீழல்,**
**உறிந்தாழ்ந்த கரகமும், உரைசான்ற முக்கோலும்,**
**நெறிப்படச் சுவல் அசைஇ, வேறு ஓரா நெஞ்சத்துக்**
**குறிப்பு ஏவல் செயல் மாலைக் கொளைநடை அந்தணீர்!” (கலித்.9:1-4)**

என்னும் குறிஞ்சிக்கலிப் பாடலடிகள் அந்தணர்களின் தன்மையைப் பதிவு செய்துள்ளது.

## அரற்று

அரற்று என்பதற்கு, **உறக்கத்தின் கண் வரும் வாய்ச்சோர்வு**[27] என இளம்பூரணரும் **அழுகையின்றிப் பலவுஞ் சொல்லித் தன்குறை கூறுதல். அது காடுகெழு செல்விக்குப் பேய் கூறும் அல்லல் போல வழக்கினுள்ளோர் கூறுவன**[28] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். கலித்தொகையில் ஒரே ஒரு பாடலில் மட்டும் அரற்று என்னும் மெய்ப்பாடு பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. தலைவன் இரவு உறங்கையில் கனவு கண்டு அரற்றியதை,

**“பாயல் கொண்டு என்தோள் கனவுவார், ஆய்கோல்**
**தொடி நிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்,**
**கடிமனை காத்து, ஓம்ப வல்லுவள் கொல்லோ -**
**இடு மருப்பு யானை இலங்கு தேர்க்கு ஓடும்**
**நெடு மலை வெஞ்சுரம் போகி, நடு நின்று,**
**செய்பொருள் முற்றும் அளவு?” (கலித்.24:7-12)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். இன்றும் கனவில் ஏதேனும் கண்டோ அல்லது பயந்தோ அரற்றுவது என்பது உண்டு. அரற்று மெய்ப்பாடு தலைவனுக்குரியதாக

அமைந்துள்ளமை தலைவி மீது தலைவன் கொண்ட அன்பின் வெளிப்பாட்டைப் புலப்படுத்தும்.

### அன்பு

கலித்தொகையில் அன்பு என்னும் மெய்ப்பாடானது பெரும்பாலும் அஃறிணை உயிர்களின் அன்பினை வெளிப்படுத்துவதாக (கலித்.11:9-10, 11:12-13, 11:16-17, 20:21-23, 80:1-2) ஐந்து பாடல்களில் அமைந்துள்ளது. தலைவன் பொருளீட்டப் பாலைநில வழியில் செல்லும் போது கண்ட பிடியானைக்கு முதலில் ஊட்டி உண்ண பின்னர் எஞ்சியதை உண்ணும் களிற்றின் அன்பும் (கலித்.11:9-10), அன்பு கொண்ட பெண் புறாவானது வெம்மைக்கு ஆற்றாது வருந்திய வருத்தத்தைத் தன் மென்மையான இறகுகளால் வீசிய ஆண்புறாவின் அன்பும் (கலித்.11:12-13) நிழல் இல்லாத வெம்மையான பாலை நிலத்திலே தனது மடப்பிணைக்குத் தன் நிழலைக் கொடுத்து மானானது இளைப்பாறச் செய்த அன்பும் இதில் அடங்கும். (கலித்.11:16-17) மேலும் துன்பம் நிறைந்த வழியில் கலைமானும் அதன் பிணையும் உடன் செல்வதும் இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும். (கலித்.20:21-23)

### நாணம்

நாணம் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் ஐந்து பாடல்களில் (கலித். 3:1-2, 69:3-4, 70:5-6, 78:16-17, 98:17-18) இடம்பெற்றுள்ளது. காதல் கொண்டவரைத் திருமணம் செய்து கொள்கின்ற நாளிலே மேலாடைக்குள் நாளும் நடுங்கி ஒடுங்கி நோக்கும் மடந்தைப் பெண்ணின் நாணமானது குறிப்பிடப்படுகின்றது. (கலித்.69:3-4)

சேவல் அதன் துணையான அன்னப்பெடையுடன் விளையாடிக் கொண்டிருக்கும் வேலையில் தாமரை இலையானது சேவலை மறைக்கவும் அதனைக் காணாத அன்னமானது கலங்கியது. பின்பு சேவலைக் கண்டவுடன் மிகவும் நாணம் கொண்டு ஓடிச் சென்று மறைந்தது (70:5-6). இதில் அஃறிணை உயிர்களும் நாணம் கொண்டதனை அறியமுடிகின்றது.

தலைவனைப் பற்றிப் பிறர் கூறும் அலருக்குத் தலைவி நாணுவதை,

**“அலர் நாணிக் கரந்த நோய் கைம்மிக, பிறர் கூந்தல்**

**மலர் நாறும் மார்பினை, ஈங்கு எம்இல் வருவதை?” (கலித்.78:16-17)**

என்னும் பாடலடிகளால் அறியமுடிகின்றது. களவில் கடற்கரை மணலில் நண்டுகள் ஓடிச் சென்று மறைவதைக் கண்ட தலைவி தனக்குத் தலைவன் செய்த கொடுமைகளை எண்ணித் தன்னைக் காணமுடியாமல் நாணம் கொண்டு நண்டுகள் மறைகின்றது என்பதும் இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும். மனிதர்களுக்கு மட்டுமின்றி நாணம் என்னும் மெய்ப்பாடு பறவைகளுக்கும் உரியதாகப் புலவர்களால் பாடப்பெற்றுள்ளமை சுட்டத்தக்கது.

### துஞ்சல்

துஞ்சல் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் நான்கு பாடல்களில் (கலித். 30:5-6, 45:18-19, 60:30-31, 85:27-28) பயின்று வந்துள்ளது. கற்பில் தலைவியை நீங்கிய தலைவன் புறத்தொழுக்கம் மேற்கொண்டுள்ளான். இதனால் தலைவி உறக்கமில்லாமல் தவிப்பதை,

**“துயில் இன்றி யாம் நீந்த, தொழுவை அம்புனல் ஆடி,**

**மயில் இயலார் மரு உண்டு, மறந்து அமைகுவான் மன்னோ”(கலித்.30:5-6)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவன் மயில் போன்ற இயல்பினை உடைய மகளிருடன் துயில் கொள்வதாகவும் அதனால் தான் துயில் இன்றி தவிப்பதாகவும் தலைவி கூறுகின்றாள். மேலும் தலைவனின் பிரிவால் தலைவி நள்ளிரவிலும் தூக்கம் இல்லாமல் தவிப்பதையும் (கலித்.45:18-19) அதனால் அவளின் அழகுநலம் வாடுவதையும் தலைவனின் தழுவுதலை விரும்பிய தலைவி தூங்காமல் அவனின் வருகைக்காக காத்து இருக்கும் நிலையிலும் இம்மெய்ப்பாட்டைக் (கலித்.60:30-31) காணமுடிகின்றது.

## மடிமை

மடிமை என்பது சோம்புதலாகும். இம்மெய்ப்பாடானது கற்பில் நான்கு பாடல்களில் (கலித்.8:4-5, 78:13-14, 92:48-50, 90:9-10) காணப்பெறுகிறது. இதில் இரண்டு பாடல்களில் யானையானது சோர்ந்து இருந்ததையும் (கலித்.8:4-5) தலைவனைத் தேடி வந்த பரத்தை ஒருத்தி கால்கள் தளர்ந்த நிலையில் கதவினைத் தட்டியதும் விளக்கும். (கலித்.90:9-10) மேலும் பூவின் இதழ்கள் வாடி உதிருமாறு பரத்தையரோடு புணர்ந்து வந்ததற்குச் சான்றாக தலைவன் சோர்ந்து காணப்படுகின்றான் (கலித்.78:13-14).

தன்னைச் சூழ்ந்து பறந்த வண்டுகளை ஓட்டுகின்ற ஒருத்தி மயக்கத்தால் அவற்றை ஓட்டும் வழியறியாமல் கைகள் சோர்ந்து போனதும் (கலித்.92:48-50) இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

## அடக்கம்

அடக்கம் என்பதற்கு, **மனமொழி மெய்யினடங்குதல் அது பணிந்த மொழியும் தானை மடக்கலும் வாய் புதைத்தலும் போல்வன**[29] என இளம்பூரணரும் **உயர்ந்தோர்முன் அடங்கியொழுகும் ஒழுக்கம் அவை பணிந்த மொழியுந் தணிந்த நடையுந் தானை மடக்கலும் வாய் புதைத்தலும் முதலாயின**[30] எனப் பேராசிரியரும் பொருள் உரைப்பர். இது மனத்தின் நிகழ்ச்சியை வெளிப்படுத்துதலால் மெய்ப்பாடாயிற்று. அடக்கம் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் மூன்று பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

ஆன்றோரின் அடக்கம் போல மரங்களிலே மலர்கள் பூத்துக் குலுங்கியது (கலித்.32:8-9) என்பதும் தலைவன் உலகத்தையே காப்பாற்றும் ஆற்றலுடையவன். வல்லவர்களைப் பின்பற்றிச் சிறந்த அறிவுத் திறன்களை உடையவன் (கலித். 142:7-8, 147:34-35) என்று பாராட்டும் போது அடக்கம் என்னும் மெய்ப்பாடு இடம்பெறுகின்றது.

## உடைமை

உடைமை என்பது செல்வத்தைக் குறிக்கும். கற்புப் பாடல்களில் செல்வம் உடையவன் என்னும் பொருளில் இரண்டு பாடல்களில் (கலித். 14:10-11, 25:13-14) இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. தலைவன் பிறர் சொல்லும் சொல்லைக் கேட்டு அறியாமை என்னும் மயக்கம் கொண்டு பொருள் உடையவனாக வேண்டும் அல்லது வேறு செல்வம் இல்லை என்ற எண்ணத்தைக் கொண்டுள்ளான் என்பதில் உடைமை என்னும் மெய்ப்பாடு (கலித்.14:10-11) காணப்பெறுகின்றது.

செல்வம் உடையவராக இருந்தால் மட்டுமே பலர் அருகில் இருப்பர் என்றும் செல்வம் இல்லையெனில் அவரைக் கண்டு கொள்ள மாட்டார்கள் (கலித்.25:13-14) என்னும் கூற்றும் இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

## வியர்த்தல்

வியர்த்தல் என்பதற்கு, **தன் மனத்தின் வெகுட்சி தோன்றியவழிப் பிறப்பதோர் புழுக்கம்**[31] என இளம்பூரணரும் **பொறாமை முதலாயின பற்றி மனம் புழுங்தல்**[32] எனப் பேராசிரியரும் உரை செய்துள்ளனர். கலித்தொகையில் வியர்த்தல் என்னும் மெய்ப்பாடானது ஒரு பாடலில் மட்டுமே இடம் பெற்றுள்ளது.

மருத நிலத் தலைவன் பரத்தையர் இல்லம் சென்று வந்தான். அப்போது அவனது தோற்றமானது ஆடையின் மடிப்புகள் விரிந்தும் கரைகள் கிழிந்தும் நைந்தும் உடல் வியர்த்ததால் சந்தனம் அழிந்தும் காணப்பெறுகிறது (கலித்.96:2-4). இதிலுள்ள தலைவனின் பரத்தமை ஒழுக்கச் செயல்பாடு இம்மெய்ப்பாட்டிற்குரியதாக உள்ளது.

## நடுக்கம்

நடுக்கம் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் நான்கு பாடல்களில் (கலித். 13:26-27, 24:1-2, 27:22-23, 30:20-21) பயின்று வந்துள்ளது. தலைவன் பிரிந்து

செல்வதாகக் கூறியதைக் கேட்ட தலைவி நடுக்கமுறுதல் இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும். (கலித்.13:26-27) தலைவன் பிரிவதை அறிந்த தலைவி தோழியிடம் தனது நடுக்கத்தை,

**"நெஞ்சு நடுக்குறக் கேட்டும், கடுத்தும், தாம்**
**அஞ்சியது ஆங்கே அணங்காகும்" (கலித்.24:1-2)**

என்றுரைப்பள். தலைவனைப் பிரிந்து இருக்கும் இளவேனில் காலமானது எனக்கு நடுக்கம் தருவதாய் இருக்கின்றது எனத் தலைவி கூறுவதும் (கலித்.27:22-23) தலைவனைக் கண்ட பகைவர்களுக்கு நீ கொடுக்கும் தண்டனையை எண்ணி எண்ணி அவர்கள் நடுங்குவதைப் போல தலைவியின் உள்ளமும் உந்தன் பிரிவை எண்ணி நடுங்குவது (கலித்.30:20-21) என்பதும் நடுக்கம் என்னும் மெய்ப்பாடு தலைவிக்குரியதாய் இருத்தலை அறியமுடிகிறது.

**கையாறு**

கையாறு என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் பதினாறு இடங்களில் (கலித். 3:3-5, 7:18-20, 15:20-21, 19:5-6, 21:13-14, 23:3-4, 23:6-7, 23:10-13, 24:8-9, 30:9-10, 31:7-8, 66:9-10, 68:22-23, 67:6-9, 82:34-35, 87:6-8) பயின்று வந்துள்ளது.

தலைவனைப் பிரிந்தால் தலைவியின் அழகு நலன்கள் கெடும் எனவும் (கலித்.3:3-5) உயிர் வாழ மாட்டாள் இறந்துபடுவாள் எனவும் (கலித்.7:19-20) பாலைக்கலிப் பாடல்களில் பெருங்கடுங்கோ பதிவு செய்துள்ளார். பரத்தையரை நாடிச் சென்ற தலைவன் திரும்பி வரும் போது தன் நெஞ்சு அவனிடம் செல்கிறது என்பதைத் தலைவி,

**"நலந்தகை, எழில் உண்கண் நல்லார் தம் கோதையால்**
**அலைத்த, புண், வடு, காட்டி, அன்பு இன்றி வரின்- எல்லா!-**
**புலப்பென் யான் என்பேன்மன்? அந்நிலையே, அவற்காணின்,**
**கலப்பென் என்னும், இக்கையறு நெஞ்சே" (கலித்.67:6-9)**

என்றுரைப்பாள். இதில் தலைவியின் கையறுநிலை வெளிப்பட்டுள்ளது.

## வெருவுதல்

வெருவுதல் என்பதற்கு, **அச்சம் போல நீடுநில்லாது கதுமெனத் தோன்றி மாய்வதோர் குறிப்பு. அதனைத் துனுக்கு என்றானென்பது**[33] என இளம்பூரணரும் **விலங்கும் புள்ளும் போல வெருவிநிகழும் உள்ள நிகழ்ச்சி அ:்து அஞ்ச வேண்டாதன கண்டவழியும் கடிதிற் பிறந்து மாறுவதோர் வெறி**[34] எனப் பேராசிரியரும் விளக்கம் தருகின்றனர்.

தலைவனிடம் நீ இங்கு சிறிது நேரம் தங்கினாலும் சினந்துகொள்வர். எம்மால் வெறுக்கத் தக்கவனே! நின் பொய்மை எல்லாவற்றையும் தெரிந்து கொண்டேன் எனத் தலைவி கூறும்போதும் (கலித்.93:32-33) தான் எண்ணியவற்றையும் பெறுகின்ற வேட்கையால் அறத்தினை விடுத்துப் பொருள் தேடப் பிரிந்துள்ளான் தலைவன் என்பதை,

**“வெரு வந்த ஆறு’ என்னார், விழுப்பொருட்கு அகன்றவர்,**

**உருவ ஏற்று ஊர்தியான் ஒள் அணி நக்கன்ன” (கலித்.150:12-13)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவனின் செயல்பாடு இங்கு வெருவுதல் என்னும் மெய்ப்பாடு தோன்றக் காரணியாக உள்ளது.

## உயிர்ப்பு

கலித்தொகை கற்புப் பாடல்களில் மூன்று இடங்களில் (கலித்.17:1-2, 35:22-23, 36:25-26) உயிர்ப்பு என்னும் மெய்ப்பாடானது இடம்பெறுகின்றது. தலைவன் பிரிந்து செல்ல நினைக்கும் போது தான் இல்லாததைத் தலைவி எவ்வாறு தாங்கிக் கொள்வாள் என்பதை நெடுமூச்செறிந்து எண்ணுவதை,

**“படை பண்ணிப் புனையவும், பாமாண்ட பல அணை**

**புடை பெயர்ந்து ஒடுக்கவும், புறம்சேர உயிர்ப்பவும்” (கலித்.17:1-2)**

என்னும் பாடலடிகள் விளக்கும். தலைவனை நினைக்கும் போது எல்லாம் தலைவி தனது மூச்சினை நீள விடுவதையும் (கலித்.35:22-23) நூற் கேள்வி உடைய

அந்தணர்கள் விரும்பி, தாமே வந்து யாகத்தை நடத்தும் போது தோன்றும் புகை போல என் உள்ளமும் உள்ளுக்குள் எழுகின்ற வெப்பதால் வேகின்றது (கலித்.36:25-26) என்பதிலும் உயிர்ப்பு என்னும் மெய்ப்பாடானது இடம்பெறுகின்றது.

## விரைவு

கலித்தொகையில் கற்புப் பாடல்களில் விரைவு என்னும் மெய்ப்பாடானது எட்டு இடங்களில் (கலித். 27:25-26, 30:18-19, 33:30-31, 33:23-24, 35:24-25, 83:14-16, 85:29-30, 96:19-20) காணப்பெறுகின்றது. பெரும்பாலும் தலைவன் தேரினை விரைந்து செலுத்தி தலைவியைக் காண வருதல் (கலித்.27:25-26, 30:18-19), விரைவில் வந்து விடுவேன் என்று கூறிய தலைவன் வரவில்லையே என்றுரைத்தல் (கலித்35:24-26), ஆலமரச் செல்வனின் மகனான குமரப் பெருமானின் திருவிழாவானது தொடங்கிவிட்டது என எண்ணும் அளவிற்கு விரைந்து வந்து தலைவனின் மகனைப் பரத்தையர்கள் பார்த்துச் சென்றமை (கலித்.83:14-16) ஆகியவற்றில் விரைவு என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

## நினைத்தல்

நினைத்தல் என்னும் மெய்ப்பாடானது கற்புப் பாடல்களில் பன்னிரெண்டு இடங்களில் (கலித். 3:2, 4:22-23, 7:5-6, 9:3-4, 12:10-11, 16:3-4, 17:18-19, 18:3-4, 19:8-10, 76:3-4, 82:16-17, 95:8-9) பதிவுசெய்யப்பட்டுள்ளது. தலைவன் பொருள் தேடக் கடந்து செல்லும் நீண்ட பாதையை நினைத்துத் தலைவி வருந்தியமை (கலித்.3:2) தலைவியைப் பிரிந்து செல்ல வேண்டுமே எனத் தலைவன் நினைத்தமை இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும். (கலித்.7:5-6)

## ஆராய்ச்சி

ஆராய்ச்சி என்னும் மெய்ப்பாட்டிற்கு, **ஒரு பொருளைக் குறித்து அதன் இயல்பு எத்தன்மைத்தென வாராய்தல்**[35] என இளம்பூரணரும் **ஒரு பொருளை நன்று தீதன்று ஆராய்தல்**[36] எனப் பேராசிரியரும் உரை கூறுகின்றனர்.

ஆராய்ச்சி என்னும் மெய்ப்பாடானது கற்புப் பாடல்களில் ஒன்பது இடங்களில் (கலித். 3:8-9, 7:9-10, 8:19-20, 15:23-24, 84:16-17, 88:18-19, 90:16-17, 93:30-31, 94:35-36) பதிவுசெய்யப்பட்டுள்ளது. தலைவன் பிரிந்து செல்ல இருக்கும் வழியைப் பற்றி ஆராய்ந்து அதன் தீமையை எடுத்துரைக்கின்றாள் தலைவி. (கலித்.3:8-9) வினை காரணமாகத் தலைவன் பிரிந்து செல்லத் தேவையான படைக்கலங்களை ஆராய்ந்ததை,

**"வினைமாண் காழகம் வீங்கக் கட்டி**

**புனைமாண் மரீஇய அம்பு தெரிதியே" (கலித்.7:9-10)**

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. மேலும் தலைவியைத் தனியே விட்டுச் செல்வதை ஆராய்ந்து பார் எனத் தோழி கூறுவதையும் பரத்தையரின் மாலையை மயக்கத்தில் உனது மாலையென நினைத்து அணிந்து வந்துவிட்டாய் எனத் தலைவி தலைவனை ஆராய்ந்து கூறுவதாகவும் (கலித். 88:18-19) குறிப்புக் காணப்பெறுகிறது.

## பொய்யாக் கோடல்

பொய்யாக் கோடல் என்னும் மெய்ப்பாடானது கற்புப் பாடல்களில் நான்கு இடங்களில் (கலித். 87:9-10, 89:12-14, 90:1-3, 68:21-25) பதிவுசெய்யப்பட்டுள்ளது. தலைவி, தலைவனோடு ஊடல் கொண்டு பின்பு ஊடல் தீர்ந்த நிலையில் அவனோடு இணைகின்றாள். ஆனாலும் தலைவியின் மனம் ஆறுதல் பெறவில்லை. நேரில் தலைவன் மார்பைத் தழுவினாலும் கனவில் தழுவுவது போல அது நிலையில்லாத இன்பமே எனக் கருதுகின்றாள். (கலித்.68:21-25) இதில் உண்மையான ஒன்றைப் பொய்யாகக் கருதுவது பொய்யாக்கோடல் என்னும் மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

# தொகுப்புரை

- தொல்காப்பியர் சுட்டிய கற்புக்குரிய மெய்ப்பாடுகள் கலித்தொகையில் பெருமளவு காணப்பெறுகின்றன.

- தலைவனிடம் தலைவி கொண்ட காதலையும் கற்புத் திண்மையையும் கற்புக் கால மெய்ப்பாடுகள் வெளிப்படுத்துகின்றன.

- உள்ளது உவத்தல் என்னும் மெய்ப்பாடே கற்பில் மிகுதியாகக் காணப்படுகின்றது. இதன்வழி அக்கால மகளிரின் உள்ள உணர்வு நன்கு வெளிப்படுகின்றது. தலைவனுக்கு வரும் பழியைக் காத்து இல்லற நெறியில் வழுவாது ஒழுகுதல் புறத்தொழுக்கத் தலைவனை மெய்ப்பாட்டால் திருத்த முற்படுதல் போன்றவை இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

- ஒப்புவழி உவத்தல், கண்டவழி உவத்தல், நடுவுநிலை, வியர்த்தல், அரற்று ஆகிய மெய்ப்பாடுகள் கற்புக் கூற்றுப் பாடல்களில் மட்டுமே காணப்படுகின்றன.

- தெய்வம் அஞ்சல் என்னும் மெய்ப்பாடானது தலைவிக்கு மட்டும் உரியதாக மருதம், நெய்தல், திணைப் பாடல்களில் காணப்பெறுகின்றது. தலைவனின் புறத்தொழுக்கத்தால் பொய்ச்சூள் கூறுவதால் அதிலிருந்து தலைவனைக் காக்க முற்படுகையில் தலைவிக்கு இம்மெய்ப்பாடு தோன்றுகிறது.

- களவுக்காலத்தில் தலைவனின் பிரிவை ஏற்றுக் கொள்ளும் தலைவி கற்புக் காலத்தில் ஏற்றுக் கொள்ள இயலா நிலையில் வெளிப்படுவதே பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடாகும்.

- கற்புக் காலத்தில் தலைவனது பிரிவைத் தாங்க முடியாத தலைவியின் நிலைக்கு தலைவன் மீது கொண்ட அதீத காதலுணர்ச்சியே காரணம். இதுவே பிரிவின் போது துயர உணர்ச்சியாக மாறி பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடாக உருப்பெற்றுள்ளது.

- இன்றைய நவீன காலத்திலும் ஓதற்காகவும், பொருளீட்டவும் மனைவியைப் பிரிந்து செல்ல வேண்டிய நிலைக்குப் பல கணவன்மார்கள் தள்ளப்படுகிறார்கள். அப்படிப்பட்ட சூழலில் கணவனைப் பிரிந்த மனைவியிடம் பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாட்டைக் காணமுடிகின்றது.

- பிரிவுத் துயரால் தலைவியிடம் பசியட நிற்றல் எனும் மெய்ப்பாடு தோன்றுகின்றது. இன்பத்தை வெறுத்துத் துன்பத்துப் புலம்பிய தலைவி உணவையும் வெறுத்து ஒதுக்குவாள். உணவை உட்கொள்ளாமல் தனது உள்ளத்து உணர்வை இம்மெய்ப்பாட்டின் மூலம் புலப்படுத்துகின்றாள்.

- இல்லறம் சிறக்கும் என்பதை அன்புதொக நிற்றல் என்னும் மெய்ப்பாடு வெளிப்படுத்துகிறது.

## சான்றெண்விளக்கம்

1. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம்.ப.98
2. மேலது ப.101
3. மேலது ப.98
4. மேலது ப.102
5. மேலது ப.99
6. மேலது ப.102
7. மாணிக்கனார்.வ.சுப. தமிழ்க்காதல் ப.129
8. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம்- மெய்ப்பாட்டியல் உரைவளம்.ப.99
9. மேலது ப.103
10. மேலது ப.99
11. மேலது ப.103
12. மேலது ப.100
13. மேலது ப.104
14. மேலது ப.100
15. மேலது ப.104
16. மேலது ப.100
17. மேலது ப.104
18. மேலது ப.100
19. மேலது ப.105
20. மேலது ப.82
21. மேலது ப.87
22. மேலது ப.84
23. மேலது ப.89
24. மேலது ப.84

25. மேலது ப.91

26. மேலது ப.41

27. மேலது ப.49

28. மேலது ப.41

29. மேலது ப.49

30. மேலது ப.44

31. மேலது ப.50

32. மேலது ப.42

33. மேலது ப.50

34. மேலது ப.48

35. மேலது ப.51

36. மேலது ப.46

## கலித்தொகையில் கைக்கிளை, பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள்

தொல்காப்பியர் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், செய்யுளியல் ஆகிய நான்கு இயல்களில் கைக்கிளை பற்றியும்; அகத்திணையியல், புறத்திணையியல் ஆகிய இயல்களில் பெருந்திணை பற்றியும் குறிப்பிடுகின்றார். தலைவன், தலைவி, செவிலி, தோழி போன்ற மேன்மக்களின் கூற்றுகள் மட்டுமின்றி அடியவர் வினைவலர் என்ற கீழ்த்தட்டு மக்களுக்கும் உரிய கூற்றுகளைத் தன்னகத்தே கொண்ட கலித்தொகையில் கைக்கிளை, பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளை ஆராய்ந்தறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

### தொல்காப்பியம் சுட்டும் கைக்கிளை

தொல்காப்பியர் அகத்திணையியலைத் தொடங்கும் போதே,

**“கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**

**முற்படக் கிளந்த எழுதிணை என்ப”  (தொல்.நூ.947)**

என்ற நூற்பாவில் அகத்திணை ஏழு எனக் கூறுகின்றார். அவை கைக்கிளை, அன்பின் ஐந்திணை, பெருந்திணை என்னும் ஏழாகும். இதில் கைக்கிளை என்பது ஒரு தலைக்காதல்; பெருந்திணை என்பது பொருந்தாக் காமம் ஆகும். இக்கைக்கிளை, பெருந்திணைக்கு என்று தொல்காப்பியர் தனியாக மெய்ப்பாடுகளை வகுக்கவில்லை. களவு மற்றும் கற்புக்குரிய மெய்ப்பாடுகள் கைக்கிளை மற்றும் பெருந்திணைக்குரிய பொருண்மையில் தோன்றும் போது அம்மெய்ப்பாடுகள் கைக்கிளை பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளாக அமைகின்றன.

#### கைக்கிளை

கைக்கிளை எனும் திணை குறித்து,

**“காமஞ் சாலா இளமை யோள்வயின்**

**ஏமஞ் சாலா இடும்பை யெய்தி**

**நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற்**

**தன்னொடும் அவளொடுந் தடுக்கிய புணர்த்துச்**

**சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்**

**புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே" (தொல்.நூ.996)**

என்னும் நூற்பா விளக்கும். இதன்வழி காமம் அமையாத இளையாள் மாட்டு, பெருமையில்லாத துன்பம் எய்தி, புகழ்தலும் பழித்தலுமாகிய இருக்கிறத்தால் தனக்கும் அவளுக்கும் ஒத்தனவாகிய சொற்களைச் சொல்லி, அவளிடமிருந்து பதில் பெறாதவனாய்த் தான் மட்டும் இன்புறுவானாய்ப் பொருந்தித் தோன்றுவது கைக்கிளை என்பது புலனாகும். **கைக்கிளை என்பது ஒரு பக்கத்தில் கிளைப்பதாகிய அன்பு. கை என்பது பக்கத்தைக் குறிக்கும். கிளை என்பது கிளைத்தல், தோன்றுதல் ஆகும். கை என்பது சிறுமை பற்றி வரும் என்றும் கிளை என்பது உறவு என்ற பொருளில் வரும் என்பர் இளம்பூரணர்**[1] பெருமை இல்லாத தலைமக்கள் உறவு என்பது இதன் பொருள் ஆகும்.

**"முன்னைய நான்கும் முன்னதற் கென்ப" என்ற நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் உரை செய்யும் போது இந்நூற்பாவிற்கு முன் உள்ள பெருந்திணையின் பொருள்களாகச் சொல்லப்படுகின்ற ஏறியமடல் திறம், இளமை தீர்திறம், தேறுதலொழிந்த காமத்து மிகுதிறம், மிக்க காமத்து மிடல் என்பனவற்றைச் சுட்டிக் காட்டி இவற்றின் எதிரானவையே கைக்கிளைக்குரியது என்கின்றனர். அவை ஏறா மடற்றிறம், இளமை தீராத்திறம், தேறுதலொழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறாகாத்திறம்**[2] என்பது இளம்பூரணர் தரும் உரை விளக்கமாகும். நச்சினார்க்கினியர், **இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழ்ந்த காட்சியும், ஐயமும், தெரிதலும் தேறலும் என்ற குறிப்பு நான்கும் கைக்கிளைக்குரியன**[3] என்பர்.

காட்சி, ஐயம், தெரிதல், குறிப்பறிதல் ஆகியவற்றைத் தொல்காப்பியர் களவியல் பகுதியில் சுட்டுகின்றார். அதனை நச்சினார்க்கினியர் இங்கு தொடர்புபடுத்தி

உரை செய்துள்ளார். ஆனால் சோமசுந்தர பாரதியார் இவ்விருவர் உரையினும் வேறுபட்ட உரையினை எழுதுகின்றார். **'காமஞ்சாலா' எனத் தொடங்கும் நூற்பாவிற்கு முன் உள்ள நான்கு நூற்பாக்களைக் காட்டி அவற்றை சோம சுந்தர பாரதியார் கைக்கிளைக்குரியன**[4] எனக் கூறுகின்றார். இது பொருந்துவதாக இல்லை. இளம்பூரணரின் கருத்தே பொருத்தமுடையதாக உள்ளது.

கைக்கிளை என்பதை ஒருபாற் காதல், ஒரு தலைக் காமம், ஒரு மருங்கு பற்றிய கேண்மை என்றும் கூறுவர். **கைக்கிளை பெருந்திணை இரண்டும் தூய்மையான அகப் பொருள் ஆக மாட்டா இவை அகத்துக்குச் சிறிது புறமாக இருப்பவை. ஆதலின் இவற்றை இலக்கண ஆசிரியர்கள் அகப்புறம் எனக் குறிப்பிடுவது வழக்கம். தாமரையின் புறவிதழ் போலவும் வாழைப் பழத்தின் தோல் போலவும் இவை அகப்பொருளில் அமைந்திருக்கின்றன.**[5] என ந.சுப்புரெட்டியார் கைக்கிளை பற்றிக் கூறுகின்றார்.

**காமஞ்சாலா இளமையோள் வயின் என்று தொடங்கும் கைக்கிளைக்குரிய உரிப்பொருள் நூற்பாவிற்குப் பருவம் எய்தாத இளையாளிடத்து ஆடவன் கொள்கின்ற காதல் என்றே பெரும்பான்மையோர் விளக்கம் எழுதுகின்றனர். தொல்காப்பியர் காதலை, அகத்தைக் காமம் என்றே குறிப்பிடுவார். இதனை,**

**"காமக்கூட்டம் காணுங்காலை" (தொல்.1038)**

**"காமஞ்சான்ற கடைக்கோட் காலை" (தொல்.1138)**

**என்பன போன்ற பகுதிகள் விளக்கும். எனவே காமஞ்சாலா என்பதற்குப் பருவம் எய்தாத இளையாள் என்பது பொருளன்று. சாலா என்பதனை ' மிகுதியில்லாத' என்ற பொருளிலேயே தொல்காப்பியர் கூறுகின்றார். இதனை மெய்ப்பாட்டியலில் மருட்கை மெய்ப்பாட்டை விளக்கும்**

**“மதிமை சாலா மருட்கை நான்கே”        (தொல்.1201)**

**என்ற நூற்பாவும் விளக்கும். இவ்விடத்து சாலா என்பதற்கு நிரம்பாத என்றே பொருள் எழுதுகின்றனர். எனவே காதல் உணர்வு நிரம்பப்பெறாத இளையவள் என்பது பொருத்தமாகும்**[6] என்பர் சே.செந்தமிழ்ப்பாவை.

**கைக்கிளை வகைகள்**

ஒத்த அன்பில்லாத ஒருத்தியை ஓர் ஆடவன் காதலித்தலும் அதுபோலவே பெண் ஒருத்தி ஓர் ஆடவனை விரும்புதலும் முற்றிலும் அன்பில்லாத இருவர் ஒருவரையொருவர் விரும்புதலும் கைக்கிளையின் பாற்படும்




## ஆண்பாற் கைக்கிளை

‘காமஞ் சாலா இளமை யோள்வயின்’ எனத் தொடங்கும் நூற்பாவில் கூறப்படும் உரிப்பொருளின் வாயிலாகத் தொல்காப்பியர் ஆண்பாலாரிடத்து மட்டுமே நிகழும் காதலாகக் கைக்கிளையினைக் கூறுகின்றார் என்பதை அறியமுடிகின்றது.

கைக்கிளை என்ற சொல்லே ஒருதலைக் காதலை உணர்த்துவதோடு அதனை விளக்குகின்ற நிலையில் கூறப்படும் நூற்பாவின் பொருளும் ஆடவரின் காதலுணர்வினைச் சுட்டுவதாக அமைவதாலேயே உரையாசிரியர்கள் இதனை **ஒரு மருங்கு பற்றிய கேண்மை**[7] என்றும் **ஒரு தலை வேட்கை**[8] என்றும் கூறுகின்றனர்.

கலித்தொகையில் காணப்படுகின்ற கைக்கிளைப் பாடல்கள் பெரும்பாலும் ஆண்பாற் கைக்கிளையினைக் கூறுவனவாக உள்ளன. இதில் ஐயம், ஒப்புமைகோடல், பாராட்டெடுத்தல், உடம்புநனி சுருங்கல், காதல் கைம்மிகல், போன்ற மெய்ப்பாடுகள் ஆண்பாற் கைக்கிளைக்குரியன.

## பெண்பாற் கைக்கிளை

தலைவன் காணாத சூழலில் அவனைக் கண்டு காதல் வயப்படுதல் என்பது பெண்பாற் கைக்கிளையாகும். பெரும்பாலும் முல்லைக்கலியில் ஏறுதழுவலின் போது பெண்பாற் கைக்கிளையானது தோன்றுகின்றது. ஆண்பாலரிடத்தே தோன்றுகின்ற கைக்கிளையினைக் கூறிய தொல்காப்பியர் பெண்பாற் கைக்கிளையினைக் கூறவில்லை. 'முந்நீர் வழக்கம் மகடூவோடு இல்லை', 'மகடூஉ மடலேறுதல் பொற்புடை நெறியில்லை' என்பனவற்றைப் போன்று பெண்களிடம் நிகழ்கின்ற கைக்கிளையினைக் கூறாமல் விட்டிருக்கலாம். பெண்கள் தாமே தலைவனை முதலில் கண்டு ஆசைப்படுவது பெண்பாற் கைக்கிளையாகும்.

## கலித்தொகையில் கைக்கிளைக்குரிய மெய்ப்பாடுகள்

கலித்தொகையில் கைக்கிளைத் திணை அடிப்படையில் பாடப்பட்ட பாடல்களின் எண்ணிக்கையில் உரையாசிரியர்களிடையே வேறுபாடு உள்ளது. அவை

| எண்கள் | உரையாசிரியர்கள் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1. | நச்சினார்க்கினியர் | 56,61,101,112,113 (5) |
| 2. | மாணிக்கம் | 56,57,58,112,113 (5) |
| 3. | சுப.அண்ணாமலை | 56,57,58,101,108,109,112,113,117 (9) |
| 4. | ஆ.விசுவநாதன் | 56,57,58,100,112,113 (6) |

என்பனவாகும். இதில் சுப.அண்ணாமலை அவர்களின் கருத்தின் படி 56,57,58,101,108,109,112,113,117 என்னும் ஒன்பது பாடல்கள் கைக்கிளைக்குரியவையாக எடுத்துக் கொள்ளப் பெற்றுள.

## ஆண்பாற் கைக்களைக்குரிய மெய்ப்பாடுகள்

தலைவன் தலைவியைக் கண்டு காதல் வயப்படுகிறான். அதைத் தலைவி உணராமல் இருக்கின்றாள். அப்போது தலைமகனிடம் தோன்றுகின்ற மெய்ப்பாடுகளை கைக்கிளைக்குரிய மெய்ப்பாடுகளாக எடுத்துக்கொள்ளலாம்.

## பாராட்டெடுத்தல்

பாராட்டெடுத்தல் என்பது களவுக்குரிய மெய்ப்பாடுகளுள் நான்காம் நிலை அவத்தைக்குரிய மெய்ப்பாடுகளுள் ஒன்றாகும்.

**"அகல் அல்குல், தோள், கண் என மூவழிப்பெருகி,**

**நுதல், அடி, நுசுப்பு, என மூவழிச் சிறுகி" (கலித்.108.2-3)**

என்னும் பாடலடிகளில் தலைவியின் தோள், கண், அல்குல் என்ற மூன்றிடமும் பெருத்தும் நெற்றி, அடி, இடை என மூன்றிடமும் சிறுத்தும் இருப்பதாகப் பாராட்டுகின்றான். தலைவியின் கூந்தல், பருத்த மெல்லிய தோள்கள், மலர் போன்ற குளிர்ந்த கண், தளிர் போன்ற மேனி, ஒளி விளங்கும் நெற்றி, முகை போன்ற கூரிய பற்கள், கொடி போன்ற இடை போன்றவற்றை பலவாறாகப் பாராட்டுகின்றான். ஆனால் தலைவனின் பாராட்டிற்குத் தலைவி செவிசாய்க்கவில்லை. (கலித்.58:1-4) இதனால் தலைவனின் பாராட்டு மொழிகள் எல்லாம் கைக்கிளைக்குரிய மெய்ப்பாடுகளாக அமைகின்றன.

## காதல் கைம்மிகல்

காதல் கைம்மிகல் என்னும் நிலையில் நெட்டுயிர்த்தல், காதலைத் தாங்காது எடுத்துரைத்தல், புலம்புதல் போன்ற மெய்ப்பாடு குறிப்புகளாகத் தோன்றுகின்றன. தலைவியைக் கண்டு காதலுற்ற தலைவன் அவள் தந்த காம நோயினால் உடல் மெலிந்து சோர்ந்து காணப்பெறுகிறான் பின்னரே இவை எல்லாம் அவளின் மடமையால் பேதைமைத் தன்மையால் நிகழுகின்றன. தலைவி மேல் எந்த தவறுமில்லை என உணருகின்றான். இதனை,

**“உளனா, என் உயிரை உண்டு, உயவு நோய் கைம்மிக,**

**இளமையான் உணராதாய்! நின் தவறு இல்லானும்” (கலித்.58:7-8)**

**“நடைமெலிந்து, அயர்வு உறீஇ, நாளும் என் நலியும் நோய்**

**மடமையான் உணராதாய்! நின் தவறு இல்லானும்” (கலித்.58:11-12)**

**“அல்லல் கூர்ந்து அழிவுற, அணங்காகி அடரும் நோய்**

**சொல்லினும் அறியாதாய்! நின் தவறு இல்லானும்” (கலித்.58:15-16)**

**“பேதுற்றாய் போலப் பிறர் எவ்வம் நீ அறியாய்**

**யாது ஒன்றும் வாய் வாளாது இறந்தீவாய்! கேளினி” (கலித்:56:28-29)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். தலைவியின் மேல் தலைவனுக்குக் காதலானது அளவுக்கு அதிகமாக இருந்ததையும் அதைத் தலைவி உணராமைக்கு அவளது இளமைத் தன்மை காரணம் என்பதையும் அறியமுடிகின்றது.

## பெருந்திணை

தொல்காப்பியர் பெருந்திணைக்குரிய இலக்கணத்தை,

**“ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்**

**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**

**மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்**

**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே” (தொல்.997)**

என்றுரைப்பர். இதில் **தான் விரும்பிய தலைவியைப் பெற முடியாத சூழலில் தலைவன் மடலேறி மணந்து கொள்ளும் நிலை, மனம் ஒத்தவர்கள் நீண்ட நெடுங்காலம் பிரிந்திருத்தல், மிகுதியான காம உணர்வால் எதனையும் செய்யத் துணியும் மனம்**[10] என இலக்கணம் வரைகின்றார். ஆண்மை, பெண்மை, அறம், சமூகக் கட்டுப்பாடு, ஒழுக்கம், வாழ்க்கை முறை முதலியவற்றிற்கு மாறான காமம் சார்ந்த நடத்தைகள் அனைத்தும் பெருந்திணைக்குள் அடங்குகின்றன.

மேலும் தலைவன் தலைவியைப் பொருந்தா முறையில் காமுறுவதும் தலைவி தலைவனைப் பொருந்தா முறையில் காமுறுவதும் காமத்தினின்று தெளிவு பெற முடியாத அறிவிழந்த குணம் உடையவராதல், மிக்க காமம் காரணமாக உடலாலும் உள்ளத்தாலும் பேச்சாலும் எதிர்ப்படுவோரை வல்லுறவு கொள்ளல் என்பவையும் பெருந்திணையுள் அடங்கும்.

**நச்சினார்க்கினியர், சோமசுந்தரபாரதியார், புலவர் குழந்தை, மு.அருணாசலம் பிள்ளை போன்ற உரையாசிரியர்கள் பெருந்திணை ஆண்பாற்கு மட்டுமே உரியது என்ற கருத்துடையவர். ஏறிய மடற்றிறத்தைப் போலவே, மிகு வயதாகி மனைவி மாட்டும், மற்றோர் மாட்டும் இன்பம் துய்த்தல், அளவிற்கு அடங்காக்காமம், காம வெறியால் வலிதிற் புணர்தல் ஆகிய நிகழ்வுகள் திருமணத்திற்குப் பின் நிகழ்வன. கடல் அன்ன காமம் உழந்தும் பெண் தன் உடல் தினவை வெளிப்பட முழங்காள் என்பர் க.ப.அறவாணன். மேற்சுட்டிய உரையாசிரியர்களின் கருத்தோடு தொல்காப்பியரின் "எத்திணை மருங்கினும்" (தொல்.981) என்ற வலியுறுத்ததும் பெண்பாலர் பெருந்திணைக்குரியார் அல்லர் என்பதைப் புலப்படுத்தும் என்றுரைப்பர்[11]** சே.செந்தமிழ்ப்பாவை.

## பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள்

தொல்காப்பியர் பெருந்திணைக்கு என்று தனியே மெய்ப்பாடுகளைச் சுட்டவில்லை. ஆனால் உரையாசிரியரான இளம்பூரணர் பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளாக,

**"இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல்,**
**எதிர்பெய்து பரிதல், ஏதம் ஆய்தல்**
**பசியட நிற்றல், பசலை பாய்தல்,**
**உண்டியிற் குறைதல், உடம்பு நனிசுருங்கல்,**
**கண்துயில் மறத்தல், கனவொடு மயங்கல்,**

**பொய்யாக் கோடல், மெய்யே என்றல்,**

**ஐயம் செய்தல், அவன்தமர் உவத்தல்,**

**அறன் அழித்துரைத்தல், ஆங்கு நெஞ்சழிதல்,**

**எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்,**

**ஒப்புவழி உவத்தல், உறுபெயர் கேட்டல்,**

**நலத்தக நாடின் கலக்கமும் அதுவே" (தொல்.நூ.1216)**

என்னும் நூற்பாவினைச் சுட்டி அதற்கு உரையும் வரைந்துள்ளார். ஆனால் இவரின் கருத்திற்கு மாறாகப் பேராசிரியரும் சோமசுந்தர பாரதியாரும் இந்நூற்பாவானது கற்பிற்குச் சிறந்து களவிற்கும் கொள்ளப்படும் என உரைப்பர்.

இந்நூற்பாவினை ஆராயும் போது அனைத்து மெய்ப்பாடுகளும் களவு மற்றும் கற்பு வாழ்வில் மனம் ஒத்த தலைவன் தலைவியரிடம் பிரிவுத் துயரால் ஏற்படுகின்ற உணர்வுகளே (அல்லது) மெய்ப்பாடுகள் என்ற முடிவினைத் தருகின்றன. ஆகவே பேராசிரியர் மற்றும் சோமசுந்தர பாரதியாரின் கருத்துகளைக் கொண்டே பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளை வரையறுக்கலாம்.

களவு மற்றும் கற்பிற்குரிய மெய்ப்பாடுகள் பெருந்திணையின்பாற் செல்லும் போது அதனையே பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள் எனக் கொள்ளலாம்.

## கலித்தொகையில் பெருந்திணைப் பாடல்கள்

கலித்தொகையில் பெருந்திணைக்குரிய பாடல்களாக உரையாசிரியர்கள்,

| எண்கள் | உரையாசிரியர்கள் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1. | நச்சினார்க்கினியர் | 99,100 (2) |
| 2. | மாணிக்கம் | 62,94,99,100,142,143,144,145,146,147 (10) |
| 3. | சுப.அண்ணாமலை | 62,94,99,100,113,138,142,143,144,145,146,147 (12) |
| 4. | ஆ.விசுவநாதன் | 62,99,100,138,139,140,141,142,143,144,145,146,147(13) |

என்பனவற்றைக் குறிப்பிடுகின்றனர். இதில் 62,94,99,100,113,138,142,143,144,145,146,147 என்ற பன்னிரெண்டு பாடல்களில் பெருந்திணைக்குரிய குறிப்புகள் காணப்பெறுகின்றன.




## இராக்கத மணம் (ஆண்பாற் பெருந்திணை)

எண்வகை மணத்துள் இராக்கத மணமும் ஒன்று. இது பெருந்திணையின் பாற்படும். தலைவி விரும்பாத சூழலில் கடத்திச் சென்று வலுக்கட்டாயமாக மணம் செய்தலே இராக்கத மணம் ஆகும். கலித்தொகையில் ஒருபாடலில் தலைவி விரும்பாத சூழலில் தலைவன் வலிந்து வந்து அவளது கரம் பற்றி எப்படியேனும் திருமணம் புரிவேன் என்பதை,

**"மைஇல் மதியின் விளங்கும் முகத்தாரை**

**'வெளவிக் கொளலும் அறன்'எனக் கண்டன்று" (கலித்.62:14-15)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இத்திருமண முறையை அறச்செயல் என மக்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

## தலைவனுக்குரிய மெய்ப்பாடு (ஆண்பாற் பெருந்திணை)

தலைவியை விரும்புகின்ற தலைவன் அவளை அடைய வேண்டும் எனப் பிறரால் விரும்பத்தகாத அருவருக்கத்தக்க செயல்களைச் செய்கின்றான். ஊரில் பலர் அறிய மடலேறி வருகின்றான். அதனைக் கண்ட மக்கள் தலைவனை எள்ளி நகையாடுகின்றனர். இதனைப் பொருட்படுத்தாமல் செல்கின்றான் இருப்பினும் அவனது மனதில் ஏற்பட்ட சலனம் வெகுளியாக மாறுகின்றது. போரிலே பலவகையான போர்க்குதிரையின் மீதேறி போர்புரியும் ஆற்றலுடைய என்னைப் பிறர் இகழ

மடற்குதிரை ஏறி மன்றத்தில் நிற்கும்படி செய்துவிட்டாளே என நினைக்கின்றான். இதனை,

“எழில் மருப்பு எழில் வேழம் இருதரு கடாத்தால்
தொழில் மாறித் தலைவைத்த தோட்டி கைநிமிர்ந்தாங்கு,
அறிவும், நம் அறிவு ஆய்ந்த அடக்கமும், நாணொடு,
வறிதாக - பிறர்என்னை நகுபவும், நகுபு உடன்,
மின் அவிர் நுடக்கமும் கனவும் போல், மெய் காட்டி-
என் நெஞ்சம் என்னோடு நில்லாமை நனிவெளவி,
தன்நலம் கரத்தாளைத் தலைப்படும் ஆறு எவன் கொலோ?
மணிப்பீலி சூட்டிய நூலொடு, மற்றை
அணிப் பூளை, ஆவிரை, எருக்கொடு, பிணித்து, யாத்து,
மல்லல் ஊர் மறுகின்றகண் இவட்பாடும், இ∴து ஒத்தன்-
எல்லீரும் கேட்டீமின் என்று.
படரும், பனை ஈன்ற மாவும் - சுடர்இழை,
நல்கியாள் நல்கியவை.
பொறை என் வரைத்து அன்றி, பூநுதல் ஈத்த
நிறை அழி காமநோய் நீந்தி, அறை உற்ற
உப்பு இயல் பாவை உறை உற்றது போல,
உக்குவிடும் - என் உயிர்.
பூளை, பொலமலர் ஆவிரை- வேய் வென்ற
தோளாள் எமக்கு ஈத்தபூ.
உரிது என் வரைத்து அன்றி, ஒள்ளிழை தந்த
பரிசு அழி பைதல் நோய் மூழ்கி, எரி பரந்த
நெய்யுள் மெழுகின் நிலையாது, பைபயத்
தேயும்- அளித்து- என்உயிர்.

**இளையாரும், ஏதிலவரும்- உளைய, யான்**

**உற்றது உசாவும் துணை. (கலித்.138:1-25)**

என்னும் பாடல் விளக்கும். இப்பாடல் ஆண்பாற் பெருந்திணைக்கு சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றது. இதில் தான் விரும்பிய தலைவி எனக்குத் தந்தவை துன்பமும் பனங்கருக்குக் குதிரையும் என்கிறான். மேலும் பலரைப் பாதுகாக்கும் பொறுப்பில் உள்ள என்னைப் பிறரிடம் இரந்து நிற்கும் சூழலுக்கு ஆளாக்கிவிட்டாள் என்றும் தெளிந்த வாக்கு வன்மையுடைய சான்றோர்கள் நிறைந்த சபையிலே சொல்வல்ல ஒருவனாக இருந்த என்னைச் சாதாரண மனிதர்களின் முன்னிலையில் அறியாமை உடையவனாக மாற்றிவிட்டாள் என்றும் தலைவன் உரைக்கின்றான். தலைவன் பிறரால் எள்ளி நகையாடப்படுகின்றான், தனது செயலை எண்ணித் தன்னைத் தானே இகழ்ந்து கொள்கின்றான், இது ஏறிய மடல்திறம் என்னும் சூழலுக்கு உரிய மெய்ப்பாடாகும்.

## துன்பத்துப் புலம்பல்

காதலர்கள் பிரிவின் போது ஏற்படும் துன்பத்தை வாய்விட்டுக் கூறிப் புலம்புதல் துன்பத்துப் புலம்பல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவி தன்னை விட்டு நீங்கியதால் தன் துன்பத்தைத் தலைவன் வாய்விட்டு ஊரார் முன் புலம்புகின்றான் (கலித்.138:16-17). நீரில் உப்பு கரைவது போல என் உயிரும் அவளால் கரைகின்றது என்கிறான். இரவும் பகலும் மாறி மாறி வந்து எனக்குத் துன்பத்தைத் தந்ததால் இன்று மடலேறி வந்துள்ளேன். எனக்கு இந்த மடலைத் துணையாகத் தந்து சென்றவள் தலைவி என்றும் (கலித்.139:14-15) தனது துன்பத்தைத் தலைவன் வெளிப்படுத்தியதைக் காணமுடிகின்றது.

## கண்துயில் மறத்தல்

தலைவனிடம் கண்துயில் மறத்தல் என்னும் மெய்ப்பாடு தோன்றியதை,

**“ஒளியோடு உரு என்னைக் காட்டி, அளியள், என்**

**நெஞ்சு ஆறு கொண்டாள்; அதற்கொண்டும் துஞ்சேன்” (கலித்.139:6-7)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

## காதல் கைம்மிகல்

தலைமக்கள் ஒருவர் மற்றொருவர் மேல் கொண்டுள்ள அளப்பறிய காதலை வெளிப்படுத்த உதவுவது காதல் கைம்மிகல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவியை எண்ணி எண்ணிக் காம நோயானது மிகுந்த நிலையில் எனவே தலைவன் மடலேறி ஊரார் முன் வந்துள்ளதை,

**“பரிசு அழி பைதல் நோய் மூழ்கி, எரி பரந்த**

**நெய்யுள் மெழுகின் நிலையாது, பைபயத்**

**தேயும்- அளித்து- என் உயிர்” (கலித்.138:21-23)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். மேலும் தலைவி தன்மேல் காதல் கொள்ளாமல் என்னை மட்டும் காதல் கடலில் தள்ளிவிட்டாள். அந்தக் காமக்கடலினை நீந்திக் கடக்க முயல்கின்றேன் எனத் தலைவன் கூறுவதில் காதல் கைம்மிகல் என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

## வாழ்த்தல்

நற்குணங்கள் நிரம்பப் பெற்ற சான்றோர்களை மடல் ஏறச் செல்லும் தலைவன் **‘வாழி சான்றீர்’** (கலித்.141:10, 141:20) எனவும் **‘வாழீய கேளிர்’** எனவும் (கலித்.147:22) வாழ்த்துகின்றான். இது தவிர பெருந்திணைப் பாடல்களில் வாழ்த்தல் என்னும் மெய்ப்பாடு இடம்பெறவில்லை.

## தலைவிக்குரிய மெய்ப்பாடுகள் (பெண்பாற் பெருந்திணை)

தலைவனைப் பிரிந்து நெடுங்காலம் வாழும் தலைவிக்குத் துன்பம் மேலிடுகின்றது. அத்தகைய துன்பத்தில் பெண்ணுக்குரிய இயல்புகளை மறந்து பலர்

கூடியிருக்கும் இடம் என்பதையும் மறந்து திடீரெனச் சிரிப்பது, அழுவது போன்ற பல முன்னுக்குப்பின் முரணான செயல்களைத் தலைவி செய்கின்றாள். இதனை,

**"கண்ணினும் முகத்தினும் நகுபவள்; பெண் இன்றி**
**யாவரும் தண்குரல் கேட்ப, நிரை வெண்பல்**
**மீஉயர் தோன்ற, நகாஅ நக்காங்கே,**
**பூ உயிர்த் தன்ன புகழ் சால் எழில் உண்கண்**
**ஆயிதழ் மல்க அழும்"** **(கலித்.142:8-12)**

என்னும் நெய்தல் திணைப் பாடல் விளக்கும். தலைவனைப் பிரிந்த தலைவி தான் எந்த செயல்கள் செய்கின்றோம் என்பதனை அறியாது உண்ணாமலும் உறங்காமலும் பெண்களுக்கே உரிய நாணத்திணையும் மறந்து புலம்புவதைப் பல பாடல்கள் குறிப்பிடுகின்றன. (கலித்.142,143,144,146,147)

தலைவி தலைவனுக்கோ தலைவன் தலைவிக்கோ தம்பலம் (தாம்பூலம் - வெற்றிலைப் பாக்கு) தருவது பண்டையத் தமிழர் மரபு. ஆனால் முறையல்லாத பிறர் கொடுத்தால் பெற்றுக்கொள்ள மாட்டார்கள். மருதக்கலியில் தலைவி தலைவனைச் சந்திக்க இரவு நேரத்தில் காத்துக் கொண்டிருந்த நேரம் ஊரில் உள்ள முதிய பார்ப்பான் தலைவியை கண்டு காதல் வசனம் கூறுகின்றான். பின் இடையிடையே அவள் பெண் அணங்கோ என அஞ்சுகின்றான்.

தலைவி பிரிந்து சென்ற தலைவனை எண்ணிப் பெருமூச்சு விடுகின்றாள். தலைவனைக் கனவில் கண்டு தெருண்டும் மருண்டும் மயங்கியும் வாடுகின்றாள். எதிர்ப்படுவோர்களிடம் ஏதேதோ முன்னுக்குப் பின் முரணாகக் கூறிக் கொண்டே செல்கின்றாள். இதனை,

**"நன்னுதாஅல்! காண்டை; நினையா, நெடிது உயிரா,**
**என் உற்றாள் கொல்லோ? இ∴து ஒத்தி - பல்மாண்**
**நகுதரும் - தன் நாணுக்கைவிட்டு, இகுதரும்**

**கண்ணீர் துடையா, கவிழ்ந்து நிலன் நோக்கி,**

**அன்ன இடும்பை பலசெய்து, தன்னை**

**வினவுவார்க்கு ஏதில சொல்லி, கனவுபோல்,**

**தெருளும் மருளும் மயங்கி வருபவள்" (கலித்.144:1-7)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். தலைவிக்கு உயிர்ப்பு,இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல், கண்டவழி உவத்தல், ஐயம், காதல்கைம்மிகல், துஞ்சல், போன்ற மெய்ப்பாடுகள் பெண்பாற் பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளாக கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன.

## கண்டவழி உவத்தல்

கண்டவழி உவத்தல் என்னும் மெய்ப்பாடானது பெருந்திணைப் பாடல்களில் ஏழு இடங்களில் (கலித். 142:61-62, 147:67-71, 145:62-66, 138:37-31, 142:57-60, 144:68-73, 146:51-55) காணப்பெறுகின்றது. குடிக்கும் நீர் கலங்கியிருந்தாலும் அது இருக்கும் பாத்திரத்தில் தேற்றாவின் விதையைத் தேய்த்ததும் அந்நீர் தெளிந்து விடுவது போல அழகுடைய மார்பனான தலைவனைச் சேர்ந்ததும் தலைவி மீண்டும் பழைய அழகுநலத்தைப் பெற்றாள். (கலித்.142:61-62) காமநோயோடு மயங்கிப் பிதற்றிக் கொண்டிருந்த தலைவி பல மலைகள் கடந்து சென்ற காதலன் பணிந்து வந்து சேரவும் பாண்டியன் மன்னனின் கீழ் உள்ள நிலம் எல்லாம் வளம் நிறைந்தது போல தலைவனைக் கண்ட தலைவியின் நலமானது மீண்டது என்பதில் இம்மெய்ப்பாடு நன்கு வெளிப்படுகின்றது. இதனை,

**"மன்னிய நோயோடு மருள் கொண்ட மனத்தவள்,**

**பல் மலை இறந்தவன் பணிந்து வந்து அடி சேர,**

**தென்னவன் தெளித்த தேஎம் போல,**

**இந்நகை எய்தினள், இழந்த தன் நலனே" (கலித்.143:57-60)**

என்னும் பாடலடிகள் நன்குணர்த்தும். தலைவனைப் பிரிந்த தலைவியின் துயரானது அவனைக் கண்டதும் மாயவன் மார்பில் விளங்கும் திருமகள் போல சென்று சேர்ந்து கொண்டாள். அவளது துன்பமெல்லாம் சூரியனைக் கண்ட இருள் போல மறைந்தது எனப் பதிவு செய்துள்ளனர். (கலித்.145:62-66)

தலைவியைக் கண்ட தலைவனுக்கும் இம்மெய்ப்பாடு தோன்றியதை,

**“என்று யான் பாடக் கேட்டு**
**அன்புறு கிளவியாள் அருளி வந்து அளித்தலின்-**
**துன்பத்தில் துணையாய மடல்இனி இவள் பெற**
**இன்பத்துள் இடம்படல் என்று இரங்கினள்- அன்புற்று,**
**அடங்கு அருந் தோற்றத்து அருந்தவம் முயன்றோர் தம்**
**உடம்பு ஒழித்து உயர் உலகு இனிது பெற்றாங்கே” (கலித்.138:26-31)**

என்னும் நெய்தற்கலிப் பாடலடிகள் விளக்கும். இதன்வழி தலைவன், தலைவி ஆகிய இருவரும் பெருந்திணைக்குரிய மெய்ப்பாட்டிற்குரியவராகின்றனர். தம் குடும்பச் சூழலால் காதலை மறுத்திருந்த தலைவி தலைவனின் உண்மையான அன்பைத் தனக்காக அவன் தன்னையே துன்புறுத்திக் கொள்ளக் கூடிய செயல்பாட்டைக் கண்டு குடும்பத்தையும் சமூகத்தையும் கண்டு அஞ்சாமல் தன் உணர்வை வெளிப்படுத்தி அவனை ஏற்கிறாள். மடல் ஏறித் தலைவியை அடைவதால் இப்பாடல் பெருந்திணையின் பாற்பட்டது.

## கையறவுரைத்தல்

தனிமையில் வாடும் தலைவியின் எண்ணங்கள் அனைத்தும் தலைவனைப் பற்றியதாகவே இருக்கின்றது. தலைவி தலைவனைக் காணாத நிலையில் குழப்பத்துடன் இருப்பாள், கலங்கி மொழிவாள், சில சமயங்களில் செயலறவு தோன்றக் கூறவும் செய்வாள். இதுவே கையறவுரைத்தல் என்னும் மெய்ப்பாடாகும்.

பெருந்திணைப் பாடல்களில் ஏழு இடங்களில் (கலித். 139:14-27, 140:13-27, 142:17-23, 143:10-16, 145:35-36, 143:51-55, 146:11-16) இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

தலைவன் பிரிந்து சென்ற நிலையில் ஞாயிறும் மலையிடையே சென்று மறைந்ததால் தலைவியின் செயலற்ற நிலையை,

**"ஒள் வளை ஓடத் துறந்து, துயர் செய்த**

**கள்வன்பால் பட்டன்று, ஒளித்து, என்னை உள்ளி"   (கலித்.145:35-36)**

என்னும் பாடலடிகள் விளக்கும். இதில் ஞாயிறு மறைந்தவுடன் துன்பம் தரும் மாலைக் காலம் வந்துவிடும்; கூடவே தலைவனைப் பற்றிய நினைவும் அதிகம் வரும் என தனது செயலற்ற தன்மையைக் கூறி தலைவி புலம்புதல் இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

## இன்பத்தை வெறுத்தல்

இன்பம் தருகின்ற அனைத்தும் தலைவன் இல்லாத நேரத்தில் துன்பம் தருவதால் அதனை வெறுத்தலே இன்பத்தை வெறுத்தல் என்னும் மெய்ப்பாடாகும். பெருந்திணைப் பாடல்களில் ஒரு பாடலில் மட்டுமே இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. பிரிந்தவர் அனைவருக்கும் துன்பம் தரும் மாலைக் காலமும் தீயின் சுடர் போலச் சுட்டு வருத்துகின்ற இரவுப் பொழுதும் வந்துவிட்டதை தலைவியின்

**"மருள்கூர் பிணை போல் மயங்க, வெந் நோய் செய்யும்**

**மாலையும் வந்து, மயங்கி, எரி நுதி**

**யாமம் தலை வந்தன்று ஆயின், அதற்கு என் நோய்**

**பாடுவேன், பல்லாருள் சென்று"   (கலித்.146:32-35)**

என்னும் கூற்றுப் புலப்படுத்தும். பிரிந்து வாழ்வோருக்கு இன்பம் கூட துன்பமாகவே தோன்றும் என்பது உளவியல் சார்ந்த உண்மை.

**துன்பத்துப் புலம்பல்**

கடலானது கானற் பறவைகள் இன்றித் தனித்திருப்பதைப் போல தானும் தலைவன் இன்றி தனித்திருப்பதாகத் தலைவி புலம்புவதை,

**“பெருங் கடல் புல்லென, கானல் புலம்ப,**

**இருங்கழி நெய்தல் இதழ் பொதிந்து தோன்ற”** (கலித்.145:37-38)

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். ஊரார் முன் தலைவனைக் காணாது தேடித் திரியும் தலைவியைக் காண்போரை நோக்கி இதற்கு முன்பு தலைவனால் கைவிடப்பட்டு துன்பத்தில் புலம்பும் எந்தப் பெண்ணையும் இதுவரை கண்டது இல்லையோ எனத் தலைவி வினவுதல் (கலித்.147:13-15) இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும். துன்பத்தில் தாம் என்ன கூறுகிறோம், எந்த செயல் செய்கின்றோம் என்று அறியாமல் இருத்தலே இம்மெய்ப்பாட்டின் நிலையாக ஆகும்.

**பசியட நிற்றல்**

பசி இருந்தும் உணவை உண்ணாமல் இருத்தலே பசியட நிற்றல் என்னும் மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடு பெருந்திணைப் பாடல்களில் ஒரு பாடலில் மட்டும் இடம்பெற்றுள்ளது. தன் தோள் நலனை உண்டு காணாமல் போன காதலனை எண்ணி உணவு உட்கொள்ளாமல் தலைவி தெருவில் அலைந்து திரிவதை,

**“தோள் நலம் உண்டானைக் கெடுத்தாள்போல், தெருவில் பட்டு,**

**ஊண்யாதும் இலள் ஆகி, உயிரினும் சிறந்த தன்**

**நாண் யாதும் இலள் ஆகி, நகுதலும் நகூஉம்;”** (கலித்.147:7-9)

என்னும் பாடலடிகள் உரைக்கும். ஊன்யாதும் இலள் ஆகி என்பது இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்.

**உடம்புநனி சுருங்கல்**

தலைவனது பிரிவால் தலைவிக்கு ஏற்படும் இம்மெய்ப்பாடானது பெருந்திணைப் பாடல்களில் மூன்று இடங்களில் (கலித்.100:13-14, 145:47-50; 57-58) இடம்பெற்றுள்ளது.

தலைவனின் பிரிவால் தலைவியின் தொடியானது முன் கையினின்று கழன்று வீழ்கின்றது (கலித்.100:13-14) வேண்டுபவர்களுக்கு அனைத்தையும் கொடுக்கும் தன்மையுடையவன் என அனைவராலும் போற்றப்பட்ட தலைவன் தலைவியின் வளை நெகிழச் செய்ததால் அத்தகைய பெருமைக்கு இழுக்கு நேராதோ என வினவுமிடத்தில் தலைவியின் உடல் மெலிவு சுட்டப்பெற்றுளது.

தலைவனைப் பிரிந்த தலைவியின் உடல் கவலையால் மெலிவு பெறுகின்றது. இதனால் ஆராய்ந்து அணிந்த அணிகலன்கள் கழன்று வீழ்கின்றன (கலித்.145:47-50; 57-58) உடம்புநனி சுருங்கியதால் தொடிகள் நெகிழுதல் எனும் மெய்ப்பாடு நிகழுகின்றது.

## கண்துயில் மறத்தல்

கண்துயில் மறத்தல் என்னும் மெய்ப்பாடானது பெருந்திணைப் பாடல்களில் இரண்டு இடங்களில் இடம்பெற்றுள்ளது. காமநோய் மிக்குற்ற நிலையில் தலைவி இரவிடம் நீயும் என்னைப் போல் துயில் கொள்ளாமல் இருக்கின்றாய் (கலித்.146:36-37) என்று உரைப்பது இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

## கனவொடு மயங்கல்

கனவொடு மயங்கல் என்பதற்கு தான் கண்டது கனவா, நனவா என அறிய முடியாத நிலை ஆகும். காதலரின் உணர்ச்சி வெளிப்பாட்டை கனவுக் குறிப்புகள் காட்டுகின்றன. கனவில் தலைவனைக் கண்ட தலைவி நனவு என நினைத்து அணைத்துக் கொள்ள முயலும் போது தலைவன் அங்கு இல்லை. விழித்த பின்பு தான் கண்டது கனவு என எண்ணிக் கலங்கியதை,

**“மாந்தர் கடி கொண்ட கங்குல், கனவினான்,**
**தோன்றினனாக, தொடுத்தேன் மன், யான்; தன்னைப்**
**பையெனக் காண்கு விழிப்ப, யான் பற்றிய**
**கையுளே மாய்ந்தான், கரந்து”** **(கலித்.142:33-36)**

என்னும் பாடலடிகளில் நல்லந்துவனார் எடுத்துரைப்பர்.

## ஒப்புமை கோடல்

எந்த ஒரு பொருளாக இருந்தாலும் அதனை மற்றொன்றுடன் ஒப்புமைப்படுத்திப் பார்த்தல் ஒப்புமைக் கோடல் என்னும் மெய்ப்பாடாகும். தலைவன் காமனைப் போன்றவன் எனத் தலைவி ஒப்புமைப்படுத்துவதை,

**"நெய்தல் நெறிக்கவும் வல்லன்; நெடுமென் தோள்**
**பெய்கரும்பு ஈர்க்கவும் வல்லன்; இள முலைமேல்**
**தொய்யில் எழுதவும் வல்லன்; தன்கையில்**
**சிலை வல்லான் போலும் செறிவினான்; நல்ல**
**பல வல்லன் - தோள் ஆள்பவன்" (கலித்.143:32-35)**

என்னும் பாடலடிகளின் வழி அறியமுடிகின்றது. மேலும் நண்டுகள் தம்முள் கூடி விளையாடும் காட்சியைக் காணும் போது தலைவன் தேரின் சக்கரம் போல அவை புள்ளிகளுடைய நண்டுகளாக இருந்தன எனத் தலைவி கூறுகின்றாள். இவ்வாறாக பல இடங்களில் ஒப்புமை கோடல் என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளமை சுட்டத்தக்கது.

## கலக்கம்

கலக்கம் என்னும் மெய்ப்பாடானது பெருந்திணைப் பாடல்களில் பதினொரு இடங்களில் இடம்பெற்றுள்ளது. தலைவனைப் பிரிந்த தலைவி கலங்குகின்றாள். (கலித்.100:11-14)

**"கோடு வாய் கூடாப் பிறையை, பிறிது ஒன்று**
**நாடுவேன், கண்டனென்; சிற்றிலுள் கண்டு, ஆங்கே,**
**ஆடையான் மூஉய் அகப்படுப்பேன்; சூடிய**
**காணான், திரிதரும் கொல்லோ- மணிமிடற்று**
**மாண் மலர்க் கொன்றையவன்?" (கலித்.142:24-28)**

என்னும் பாடலடிகளில் தலைவி தலைவனைக் காண்பேனா? மாட்டேனா? எனக் கலங்கும் மெய்ப்பாடு வெளிப்படுகின்றது.

நள்ளிருள் நேரத்தில் தலைவன் என்னைத் தழுவி மகிழ்ந்தான் அவனை நான் வளைத்துப் பிடித்துக் கொண்டேன் ஆனால் கண்விழித்துப் பார்க்கும் போது அவனைக் காணவில்லை. இதனால் தலைவன் வந்தானா வரவில்லையா எனத் தோன்றும் நிலையே கலக்கம் ஆகும். (கலித்.142:35-36) காலன் போல வந்த என் கலக்கத்துடன் என் தலையிலே இந்த மாலைக் கொடுமையும் வந்து வீழ்கின்றது (கலித்.143:40-41) என்று தலைவி வெளிப்படையாக உரைக்குமிடத்து கலக்கம் என்னும் மெய்ப்பாடானது இடம்பெறுகின்றது.

## அருளல்

பெருந்திணைப் பாடல்களில் தலைவன், தனக்கு தலைவி அருள் செய்ததை, மழை கருவிலே தோன்றும் மின்னலைப் போல தலைவி என் முன் தோன்றி எனக்கு அருள் செய்து விட்டுச் சென்றாள். அது முதல் என் நெஞ்சு அவள்பாற் சென்றுவிட்டது எனும் போதும் (கலித்.139:5-7) மகளிரின் தோள் சேர்ந்த ஆடவர்கள் அவர்களை துன்புற கைவிடுதலும் பின்பு அருள் செய்தலும் (கலித்.145:13-16) அருளல் எனும் மெய்ப்பாட்டிற்கு உரியது.

மேலும் தீமையை விலக்கி அருள் கொண்டு உதவ வரும் தலைவனின் முகமானது கடலலைகளின் மேல் தோன்றிய திங்கள் போன்றிருந்ததாக உவமிக்கப்பட்டுள்ளது. (கலித்.148:3-4) இவ்வாறாக கலித்தொகையில் அருளல் என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

## ஐயம்

தலைவனைக் கண்டு தலைவி ஐயம் கொள்ளுதல் என்பது இயல்பான ஒன்றில்லை. தொல்காப்பியரும் தலைவி ஐயம் கொள்வதாக இலக்கணம் வகுக்கவில்லை. இது பெண்களுக்கு முரண்பாடான செயலாதலால்

பெருந்திணைக்குரியதாகக் கொள்ளலாம். தலைவனைக் கண்டு தலைவி ஆயர்மகனா? அல்லது ஞாயிற்று தேவனின் மகனா? என ஐயப்படுதலையும் (கலித்.108:12-13) தலைவனைக் கண்டாயா காணவில்லையா (கலித்.123:7-8; 10-11; 13-14) எனத் தலைவி அ.்.றிணை உயிர்களிடம் சந்தேகமாக வினவுவதும் இம்மெய்ப்பாட்டிற்கு உரியதாகும்

தலைவன் நமக்குத் தூது கூட அனுப்பவில்லையே நம்மைத் துறந்திருப்பாரோ நீங்காமல் உடனிருப்பாரோ என ஐயம் கொள்ளுதலை,

**"காதலின் பிரிந்தார் கொல்லோ? வறிது, ஓர்**

**தூதொடு மறைந்தார் கொல்லோ? நோதக,**

**காதலர் காதலும் காண்பாம் கொல்லோ?**

**துறந்தவர் ஆண்டு ஆண்டு உறைகுவர் கொல்லோ? யாவது?"**

**(கலித்.36:18-21)**

என்னும் பாடலடிகளில் தலைவிக்கு ஐயஞ் செய்தல் என்னும் மெய்ப்பாடு தோன்றுகின்றமை சுட்டத்தக்கது.

**நாணம்**

பெருந்திணைத் தலைவி, தலைவன் தன்னை விட்டுச் சென்றதால் நாணம் தன்னை விட்டு நீங்கிவிட்டதாகக் கூறுவதை,

**"அறிவும், நம் அறிவு ஆய்ந்த அடக்கமும், நாணொடு,**

**வறிதாக - பிறர்என்னை நகுபவும், நகுபு உடன்**

**மின் அவிர் நுடக்கமும் கனவும் போல்"        (கலித்.138:4-5)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். தலைவன் தன்னைப் பிரிந்ததால் சிறந்த குணத்தையும் நாணத்தையும் கைவிட்டுக் காமம் ஒன்றையே பெரிதாக நினைத்து தலைவி வருந்துகிறாள். (கலித்.146:10-11) இதில் தலைவியின் நாணமில்லாதத் தன்மை வெளிப்படுகின்றது.

**“மிக்க என் நாணும் நலனும், என் உள்ளமும்,**

**அக்கால் அவனுழை அங்கே ஒழிந்தன!”** **(கலித்.146:20-21)**

என்னும் பாடலடிகளில் தன் நாணம் தலைவனுடன் சென்று மறைந்தது எனத் தலைவி உரைக்கின்றாள்.

## நினைத்தல்

நினைத்தல் என்பதற்கு ஒருவரை விருப்புற்று நினைத்தல் ஆகும். கலித்தொகையில் தன்னை பிரிந்து சென்ற தலைவன் தன்னை நினைத்து விரைவில் திரும்பி வருவானா என நினைப்பதை,

**“அவரை நினைத்து, நிறுத்து என்கை நீட்டித்**

**தருகுவை ஆயின், தவிரும்”** **(கலித்.142:38-39)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். ஊர்க்காவலையும் தாண்டி இரவு நேரத்தில் வந்த தலைவனை தழுவி மகிழத் தலைவி நினைத்தமை ஆனால் பின்னர் அது கனவென அறிந்து வருந்தியமை போன்றவையும் இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

## உயிர்ப்பு

உயிர்ப்பு என்பதற்கு முன்பு விடும் அளவின்றிச் மூச்சினை நீள விடுதல் ஆகும். தலைவன் தன்னை விட்டுப் பிரிந்த நிலையில் அவனை நினைத்து பல இடங்களில் தேடி அலையும் தலைவியிடம் இம்மெய்ப்பாடுகள் தோன்றியதை,

**“ஒருத்தி, உயிர்க்கும்; உசாஉம்; உலம்வரும்; ஓவாள்,**

**கயல் புரை உண்கண் அரிப்ப அரி வார”** **(கலித்.145:4-5)**

என்னும் பாடலடிகள் விளக்கும். மற்றோரு தலைவி தலைவனை நினைத்து பெரு மூச்செறிந்ததையும் (கலித்.144:1-2) காணமுடிகின்றது. மேலும்

**“இனைந்து நொந்து அழுதனள் நினைந்து நீடு உயிர்த்தனள்**

**எல்லையும் இரவும் கழிந்தன என்று எண்ணி”** **(கலித்.142:60-61)**

என்னும் பாடலடிகளிலும் உயிர்ப்பு, நினைத்தல் என்னும் இரண்டு மெய்ப்பாடும் இணைந்து வருவதைக் காணமுடிகின்றது. தலைவியை பிரிந்த தலைவன் மடன்மா மேல் ஏறி வரும் போது உயிர்ப்பு, நினைத்தல் என்னும் இரண்டு மெய்ப்பாடும் இணைந்து வருவதைக் காணமுடிகின்றது. (கலித்.139:9-13)

## துஞ்சல்

துஞ்சல் என்பது மெய்யில் தோன்றும் வேறுபாடுகளால் உணரப்படும் மெய்ப்பாடாகும். தலைவி தனக்கு அருள் செய்து என் நெஞ்சினை அவளிடமே கொண்டு சென்றுவிட்டாள். அதிலிருந்து நான் தூங்கவில்லை (கலித்.139:6-7) எனத் தலைவன் கூறுமிடத்தும். தலைவி தன் உறக்கத்தைத் தலைவன் தன்னுடன் கொண்டு சென்றுவிட்டான் தலைவன் என்றுரைப்பதை,

**"கண்பாயல் கொண்டு உள்ளாக் காதலன் செய்த**
**பண்பு தர வந்த என் தொடர் நோய் வேது**
**கொள்வது போலும், கடு பகல்? ஞாயிறே!" (கலித்.145:24-26)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும்.

## அடியவர், வினைவலருக்குரிய மெய்ப்பாடுகள்

தொல்காப்பியர் பெருந்திணைக்குரிய மாந்தர்களாகத் தலைமக்களை மட்டுமின்றி அடியவர் மற்றும் வினைவலரையும் குறிப்பிடுகின்றார்.

**"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**

**கடிவரை இல; புறத்து என்மனார் புலவர்" (தொல்.)**

அடியோரைத் தலைமை மாந்தராகக் கொண்டு கலித்தொகையில் ஒரு பாடல் உள்ளது. பிறரின் பார்வையாலே எள்ளி நகையாடக் கூடிய தோற்றம் கொண்ட கூனியும் குறளனும் தங்களுக்குள்ளேயே இகழ்ந்தும், எள்ளல் செய்தும் கூற்றுகளை நிகழ்த்துகின்றனர். அவர்களைப் பொது மக்கள் காணும் போது,

**“பேயும் பேயும் துள்ளல் உறும் எனக், கோயிலுள் கண்டார்” (கலித்.94:39)**

என அவர்களின் தோற்றத்தைப் பேய் என உரைக்கின்றனர். அடியவர், வினைவலருக்குரிய மெய்ப்பாடு பிறரால் எள்ளப்படுதல் என்னும் நிலைக்களனில் நகைக்குரியதாக விளங்குகின்றது.

## தொகுப்புரை

- கைக்கிளை, பெருந்திணைக்கு எனத் தொல்காப்பியர் மெய்ப்பாடுகளைத் தனியே வகுக்கவில்லை. எனினும் களவு கற்புக்குரிய மெய்ப்பாடுகள் கைக்கிளை, பெருந்திணைக்குரிய சூழலில் தோன்றும் போது அம்மெய்ப்பாடுகள் கைக்கிளை, பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளாகின்றன.

- தலைவன் மடலேறுவேன் எனக் கூறுவது கைக்கிளைக்கும் மடலேறி வருதல் பெருந்திணைக்கும் உரிய மெய்ப்பாடாக அமைகின்றது.

- கலித்தொகையில் கனவு, உயிர்ப்பு, பசலை பாய்தல், இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல் போன்ற மெய்ப்பாடுகள் சூழ்நிலைக்கேற்ப பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளாக வருகின்றன. இதில் துன்பத்துப் புலம்பல் என்னும் மெய்ப்பாடு தான் மிகுதியாகக் காணப்பெறுகின்றது.

- கலித்தொகையில் ஆண்பாற் கைக்கிளைப் பாடல்கள் மிகுதியாகக் காணப்பெறுகின்றன. இதில் தலைவனுக்குரியதாக பாராட்டெடுத்தல், பொய்யாக் கோடல், மெய்யே என்றல், காதல் கைம்மிகல் ஆகிய மெய்ப்பாடுகள் இடம்பெற்றுள்ளன.

- பெருந்திணையில் ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல், கண்டவழி உவத்தல், கையறவுரைத்தல், இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல், பசியட நிற்றல், பசலை பாய்தல், உடம்புநனி சுருங்கல், கண்துயில் மறத்தல், கனவொடு மயங்கல், ஒப்புமை கோடல், கலக்கம், காதல் கைம்மிகல், அருளல், கனவு, நாணல், வாழ்த்தல், நினைத்தல், உயிர்ப்பு, ஐயம், விரைவு, துஞ்சல், அன்பு ஆகிய மெய்ப்பாடுகள் தலைவிக்குரியதாக இடம்பெற்றுள்ளன.

- துன்பத்தை மிகுவிக்கக் கூடிய மெய்ப்பாடுகளே கைக்கிளை பெருந்திணைப் பாடல்களில் மிகுதியாகக் காணபெறுகின்றன.

## சான்றெண்விளக்கம்

1. மு.இராகவையங்கார், தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ப.45
2. இளம்பூரணர் (உ.ஆ) தொல்காப்பியம், பொருளதிகாரம். ப.69
3. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம். ப.69
4. சோமசுந்தர பாரதியார், பொருட்படலப் புத்துரை (அகத்திணையியல்) ப.195
5. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப.63
6. இளம்பூரணர் (உ.ஆ) தொல்காப்பியம், பொருளதிகாரம். ப.69
7. நச்சினார்க்கினியர் (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம். ப.120

## கலித்தொகை மெய்ப்பாடுகளும் உளவியலும்

மனிதன் செய்யக்கூடிய ஒவ்வொரு செயல்களுக்கும் அடிப்படை மனம் ஆகும். மாந்தரின் செயல்களுக்கும் பண்புகளுக்கும் மனத்தின் வேறுபட்ட உணர்வுகளே அடிப்படைக் காரணிகளாகும். அறிவியலின் உன்னதமான ஒரு துறையாக விளங்கும் உளவியல், மனிதன் தன்னைத் தானே அறிந்து கொள்ள உதவுகிறது. இதன் மூலம் நாகரிகமான வாழ்க்கைக்கு உறுதுணையாக இருக்கின்றது. வாழ்க்கையில் ஏற்படும் ஏமாற்றம், தோல்வி, போராட்டம் ஆகியவை உள்ளத்தைப் பாதிக்கின்றன. இப்பாதிப்பானது மனிதர்களுக்குக் காலங்காலமாகக் காணப்படுகிறது. இவையே மெய்ப்பாடுகளாக வெளிப்படுகின்றன. அவ்வகையில் கலித்தொகையில் காணலாகும் மெய்ப்பாடுகள் உளவியல் அடிப்படையில் இவ்வியலில் ஆராயப்பெறுகிறது.

### உளவியல் பொருள் விளக்கம்

**உளவியல் என்பதை ஆங்கிலத்தில் 'சைக்காலஜி' (Psychology) என்று குறிப்பிடுவர். இது 'ஸைக்கி' (Psyche), லோகஸ் (Logus), என்னும் இரு கிரேக்கச் சொற்களால் உருவானது. 'ஸைக்கி' என்பது ஆன்மாவையும் (Soul), லோகஸ் என்பது அறிவியல் (Science) அல்லது ஆராய்ச்சியையும் உணர்த்துவதால் உளவியல் (Psychology) என்பது மனிதனின் ஆன்மா அல்லது ஆவியின் தன்மை, இயல்பு ஆகியவற்றை விளக்கும் சொல்லாகப் பொருள்கொள்ளப்பட்டது.**[1]

மனிதனின் புறச்செயல்களை உற்று நோக்கி முறையாக ஆராய்ந்து. அதன் மூலம் அவை எவ்வாறு அகத்தே நிகழும் சிந்தனை ஓட்டங்களுடன் தொடர்பு கொண்டுள்ளன என்றும் சுற்றுச்சூழலில் ஏற்படும் நிகழ்வுகளால் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்றும் விளக்குவது உளவியலாகும்.

## உளவியல் - உளவியலாளர்கள் கருத்து

சிக்மென்ட் பிராய்டு, **உளவியல் என்பது நனவுநிலையை மட்டும் குறிப்பதன்று நனவற்ற நிலையையும் குறிக்கும் என்கிறார். கனவுகள், சித்தம் கலங்கிய மனச்செயல்கள், தூங்கு நிலை (Hibnatism) போன்ற நனவற்ற செயல்களுக்கும் உள்ளம் அடிப்படையாகும் என்பதை நனவிலி ஊக்கக் கோட்பாட்டின் (Unconcious Motivation) மூலம் விளக்கினார்**[2].

ஜே.பி.வாட்சன் என்பவர், **தன் உள்ளத்தைத் தான் மட்டுமே அறிந்து கொள்ள முடியுமே தவிர மற்றவர்கள் புரிந்து கொள்ள முடியாது. எனவே உளவியல் என்பது மனித நடத்தையைப் பற்றிய அறிவியல்**[3] என்கிறார்.

ஆர்தர்கேட்ஸ், **உளவியல் என்பது உயிர்களின் நடத்தையைக் கண்டறியும் இயலாகும்**[4] என்கிறார்.

நார்மன் எல்.மன், **மனிதனின் புறச்செயல்களை உற்றுநோக்கி அகச்செயல்களை ஆராய்வதே உளவியல்**[5] என்கிறார்.

**உடல்நலம் பேணுவதற்கு உடலியல் அறிவு இன்றியமையாது வேண்டப்படுவது போல உளவளத்தைப் பேணி வளர்ப்பதற்கு உளவியல் அறிவு மிகவும் இன்றியமையாதது என்பது கல்வி முறை வல்லார் கண்ட முடிவு**[6] என்பர் ந.சுப்புரெட்டியார்.

உள்ளத்தைப் பற்றி ஆராயும் அறிவியல் உளவியல் எனப்படும். **உளவியல் உள்ளத்தின் கோலங்களையும் கோணங்களையும் அதன் விழைவுகளையும் விளைவுகளையும் ஆராய்கிற ஓர் அறிவியலாகும்**[7] என்பர் தி.சு.நடராசன்.

உள்ளத்தை உள்ளம், மனம், அகம், நெஞ்சம் எனத் தமிழிலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இவ்வுள்ளம் கண்ணுக்குப் புலப்படாத ஓர் உருவமற்ற பொருளாக

உள்ளது. இதனை, அதன் செயல்பாடுகள் வழியேதான் நாம் உணர்ந்து கொள்ள இயலுவதாக இருக்கிறது. இவ்வாறிருப்பினும் மனித நடத்தைகளை ஆராய்வதே இவ்வுளவியல் என்பது அறிவியலார் கொள்கை. **ஜே.பி.வாட்சனின் நடத்தைக் கொள்கையில் இதை நடத்தையை ஆராயும் அறிவியல் எனப் பொருள்படுத்திச் 'சைக்காலஜி' என்பது உள்ளத்தை ஆராய்வதன்று அது நடத்தையை ஆராய்வது எனப்பொருள் வரையறை செய்தனர்**[8]

நடத்தையை ஆராய்தல் என்பது பேசுதல், ஓடுதல் போன்ற அகச்செயல்களையும் உணர்தல், கற்றல், சிந்தித்தல், கற்பனை செய்தல், கனவு காணுதல் போன்ற அகச்செயல்களையும் குறிப்பதாக இருக்கிறது. இவ்வாறு கொண்டால் உளவியல் என்பது உள்ளத்தையும் அதன் அகச் செயற்பாடுகளையும், அதன் தூண்டுதலால் செயற்படும் அகச்செயல்களையும் இவற்றின் விளைவால் ஏற்படும் நடத்தையையும் விவரிப்பது என்பது புலனாகும்.

## இலக்கியமும் உளவியலும்

உளவியலுக்கும் இலக்கியத்திற்கும் உள்ள தொடர்பு இலக்கியம் ஒரு கலைப்படைப்பாக இருந்தாலும் அது படைப்பாளியின் உள்ளத்தினின்றே எழுவதாகும். மனிதனின் வாழ்க்கையையும் அனுபவங்களையும் மனித நடத்தையையும் மனத்தையும் ஆழமாகவும் அழகாகவும் சித்திரித்துக் காட்டுவதாகும். வாழ்க்கை என்பது உள்ளத்தைச் சார்ந்து அமைவதால் வாழ்க்கையைப் படம் பிடிக்கும் இலக்கியத்துக்கும் உளவியலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பது தெளிவாகிறது. சங்க இலக்கியங்கள் அனைத்தும் அக்கால மக்களின் உள்ளத்தையே வெளிப்படுத்துகின்றன. குறிப்பாக அகத்துறைப் பாடல்கள் முழுவதும் உளவியல் சார்ந்த பாடல்களே. உளவியல் பற்றிய சிந்தனை தமிழருக்குத் தொன்றுதொட்டே இருந்திருக்கின்றது என்பதற்கு இப்பாடல்கள் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன.

**பரந்துபட்ட அறிவுத்துறையாக இருக்கும் உளவியல் மனிதனின் நடத்தை பற்றிய நுட்பங்களை விளக்குவது என்று மிகச் சுருக்கமாகச் சொல்லலாம். இந்த உளவியல் நடத்தை நுட்பங்களுக்கும், இலக்கியப் பொருளுக்கும் தொடர்பு இல்லாமல் இல்லை. ஏனென்றால் இலக்கியமும், அறிவியலும் கூட மனித உள்ளத்தில் இருந்துதான்தோன்றுகிறது. உளவியலோ மனிதனின் உள்நடத்தை முறைமைகளை ஆராய்வது. எனவே, உளவியல் இலக்கிய ஆய்வில் இயல்பாகவே பயன்பட முடியும்**[9] என்கிறார் புகழ்பெற்ற உளவியல் அறிஞர் சி.ஜி.யுங்.

**உளப்பொருத்தப்பாட்டினைச் (Adjustment) சிதைக்கும் உளச்சிக்கல்களைச் சங்க இலக்கியத்தில் பரக்கக் காண்கிறோம். 'உடையும் என் உள்ளம்' 'இணர் இறுபு உடையும் நெஞ்சம்' 'உகுவது போலும் என் நெஞ்சம்' ஆகிய தொடர்களில் உள்ளமுறிவு என்னும் உளவியற்கூறு காணப்படுகிறது. உள்ளமுறிவு எவ்வகைத் தீர்வும் இன்றித் தொடருமானால் உள்ள இறுக்கம் (Stress) தோன்றும் உள்ள முறிவின் காரணமாக எதிர்மறையான உள்ளக் கிளர்ச்சிகள் (Emotion) தோன்றுகின்றன. அவற்றுள் மூன்றினைச் சிறப்பாக உளவியலார் குறிக்கின்றனர். அவை 1. சினம் (Anger) 2. அச்சம் (Fear) 3. கவலை (Anxiety)**[10] என்பனவாகும்.

**சினம், அச்சம், கவலை என்னும் இம்மூன்றையும் சங்கப் புலவராகிய மாங்குடி மருதனார், அச்சமும், அவலமும், ஆர்வமும் நீங்கிச் செற்றமும் உவகையும் செய்யாது காத்து"**[11] என்னும் சொற்களால் குறிப்பிடுகின்றார்.

இலக்கியத்தை ஆராயுங்கால் இலக்கியத் திறனாய்வில் உளவியலின் பங்கு இன்றியமையா ஆறு நிலைகளில் இருப்பதை அறியலாம்.

1. இலக்கியப் படைப்பாக்கத்தின் அல்லது தோற்றம் பெறுவதன் வழிமுறைகளை உளவியல் நிலையில் புலப்படுத்தல்.

2. படைப்பாளியின் உள்ளத்து நிலையையும் அதற்குரிய காரணங்களையும் அறியக் கொண்டு வருதல். அதாவது படைப்பாளியின் சுயவரலாற்றைப் படைப்பில் காணுதல்.

3. குறிப்பிட்ட இலக்கியத்தில் காணப்பெறுகின்ற கதைமாந்தர்களின் உணர்வுகளையும், செயல்களையும் விளக்குதல்.

4. இலக்கியத்தில் தொல்படிமம் (Archetype) முக்கிய இடம் பெறுகிறது என்பதைக் கருதுகோளாகக் கொண்டு அதன் உருவாக்கத்தைப் புலப்படுத்துதல்.

5. குறிப்பிட்ட இலக்கியப் படைப்பிலுள்ள தனிச்சிறப்பான சொற்களையும் தொடர்களையும் மற்றும் சிறப்பான உத்தி முறைகளையும் உள்ளத்து உணர்வுப் பிரதிபலிப்புகளாக இனங்கண்டு விளக்குதல்.

6. வாசகரிடம் இலக்கியம் ஏற்படுத்துகிற உறவையும் தாக்கத்தையும் காணுதல்.

**இலக்கிய வடிவங்கள், உள்ளடக்கம், மரபுகள் ஆகியவற்றைப் பற்றி உணர்ந்து கொள்ளவும் மரபில் காலூன்றிப் புதுமையில் காலெடுத்து வைத்துப் புத்திலக்கியங்களைப் படைக்கவும் தொல்காப்பியப் பொருளதிகாரம் உதவுகிறது. மெய்ப்பாட்டியலில் தொல்காப்பியர் குறிப்பிடும் எண்வகை மெய்ப்பாடுகளான நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை ஆகியன உள்ளத்தில் எழும் உணர்வுகளையே குறிக்கின்றன. இவ்வெட்டு மெய்ப்பாடுகள் எவ்வெக்காரணங்களால் எழுகின்றன என்பதையும் அவர் குறிப்பிட்டிருக்கும் தன்மை, அவரின் உளவியல் வல்லாண்மையையும் காட்டுகிறது. சில செயல்களைத் தாம் செய்யும்போதும் பிறர் செய்யும் போதும் உள்ளத்து உணர்வுகளை அப்படியே வெளிக்காட்டுவது மெய்ப்பாடு. இன்று நம்மைச் சுற்றி நடக்கின்ற பல நிகழ்வுகள் தொல்காப்பியர் குறிப்பிடும் மெய்ப்பாடுகளின் குறியீடாக இருக்கின்றன. அவற்றை உளவியல் நோக்கில் ஆராயலாம்**[12] என்பர் பெ.கண்ணதாஸ்

## மனத்தின் மூன்று நிலைகள்

மனத்தின் மூன்று நிலைகள் மனித நடத்தைக்கு அடிப்படையானது. மனம் மனித வாழ்வின் விளைநிலம். மனத்தின் தன்மை எதுவோ அதுதான் மனிதனின் தன்மை.

இம்மனம் மூன்று தொடர்புடைய நிலைகளைக் கொண்டதாகக் கருதப்படுகிறது. 1. நனவுப்பகுதி 2. இடைநிலை மனம் 3. நனவிலி மனம்

**நனவுப்பகுதி: மனம் விழிப்பு நிலையில் இருக்கும் போது பெறும் அனுபவங்களை உள்ளடக்கியது. இடைநிலை மனம் : இடைநிலை மனத்தில் நனவுப்பகுதியில் பெற்ற அனுபவங்கள் சில பதிந்து கிடக்கும். நமக்குத் தேவையான போது வேண்டிய செய்திகளை வரவழைத்துப் பயன்படுத்திக் கொள்ளலாம். நனவிலிமனம் : பண்படாத ஊக்கிகள், வெற்றி பெறாது ஒடுக்கப்பட்ட எண்ணங்கள், சமூகத்தில் வெளிப்படுத்த முடியாத மனவெழுச்சிகள் ஆகியவை நனவிலி மனத்தில் புதைந்து கிடக்கின்றன[13].**

பிராய்டின் கருத்துப்படி மனம் தனிமனிதப் பண்பியல் தொகுப்பினை இத் (Id), ஈகோ (Ego) சூப்பர் ஈகோ (Super Ego) என்று பிராய்டு பிரிக்கின்றார்.

**இத்: இந்த இன்பக் கொள்கை (Pleasure Principle) உள்மனதைச் சார்ந்ததாகும். இன்பமான வாழ்வைத்தேடி அலையும் மனிதர்க்குத் தேவையான உணவு, உறைவிடம், சுவாசிக்கக் காற்று ஆகியவை முதலிடத்தே நிற்கின்றன. பல நிலைகளிலும் இன்பத்தை நாடும் மனிதனுக்குப் பகையுணர்வு போன்றவற்றிற்கு அடித்தளமானது இந்த இன்பக் கொள்கையாகும்.**

**ஈகோ: வெளிமனத்துடன் தொடர்புடைய ஈகோ எனப்படும் நடைமுறைக் கொள்கை (Reality Principle) சுற்றுச்சூழலை அறிவதிலும், எண்ணங்கள், செயல்கள், உணர்ச்சிகள் போன்றவற்றை ஒழுங்குபடுத்துவதிலும் முக்கியப் பங்கு வகிக்கின்றது.**

**சூப்பர் ஈகோ: சூப்பர் ஈகோ எனப்படும் நீதிக் கொள்கை (Moral Principle) உலக நடைமுறைகளையும், பண்பாட்டு ரீதியான நடைமுறைகளையும் சீர்தூக்கிப் பார்க்கின்றது. இதனையே மனசாட்சி என்கிறோம். நடைமுறைக் கொள்கையின் சிறந்த செயல்களை ஊக்குவிப்பதும், உற்சாகப்படுத்துவதும் இந்நீதிக் கொள்கையின் செயலாகும்[14].**

ஒருவனது மெய்ப்பாடு தூண்டப்பட்டால், சுரப்பிகள் விரைந்து வேலை செய்யத்தொடங்குகின்றன. இரத்த அழுத்த மாறுபாடுகள் போன்ற உடலில் வேறுபாடுகள் ஏற்படுதல் என மொத்தத்தில் ஒருவரது இயல்பான பண்புகள் மாறுபட்டுக் காணப்படும். ஒருவன் பிறப்பால் அச்சம், சினம், பால் என மூன்று மெய்ப்பாடுகளை உடையவனாயிருக்கின்றான் எனவே ஒருவன் பிறப்பிலேயே மெய்ப்பாடு தோற்றம் உறும் என்பர். தொல்காப்பியர் குறிப்பிடும் மெய்ப்பாட்டியலைத் தமிழ் நாட்டு உளவியலாகவும், தமிழ் உளவியல் கோட்பாடாகவும் கொள்ளலாம். உள்ளத்திலிருந்து வெளிப்படும் உணர்வுகளையே தொல்காப்பியர் 'மெய்ப்பாடு' என்னும் பெயரில் சுட்டியுள்ளர். இவை மனிதர்களிடத்தில் சூழ்நிலைக்குத் தக வெளிப்படுவனவாகும்.

தொல்காப்பியரது, மெய்ப்பாட்டியல் கொள்கை உளவியல் கோட்பாட்டின் வளர்ச்சி நிலையாகக் கொள்ளலாம். மேலும், இன்றைய உளநூலார் குறிப்பிடும் உணர்ச்சிகளின் வெளிப்பாடு தொல்காப்பியர் குறிப்பிடும் உணர்ச்சிகளின் வெளிப்பாடு இரண்டும் ஒப்புமையுடையன என்பது புலனாகும்.

## மெய்ப்பாடும் - உளவியலார் கோட்பாடுகளும்

புறத்தார்க்குப் புலனாகும் வகை வெளிப்படுதலின், இதனை வெளிப்பாடு எனவும் அழைக்கலாம். **மெய்ப்பாடு இலக்கியத்தில் வரும்போது மெய்மைப் பாடாகிறது. மனித உணர்வு அருவம்; அதனைப் பருப்பொருளாக்கித் தர இலக்கியம் முயல்கிறது. மீண்டும் படிக்கும் உள்ளம் அதனை உள் வாங்கிக் கொண்டு அருவமாகவே உணர்கிறது.**

**மெய்ப்பட – உருப்பட – மெய்மைப்படத் தோன்றிப் படிப்பவருக்குச் சென்று சேர்வதற்கு உதவுதலால் இது மெய்ப்பாடு எனப்பட்டது[15].** என்பர் தமிழண்ணல். **சுவையுணர்ச்சியே விருப்பு, வெறுப்பு முதலியவைகளைத் தந்து கண்ணீரரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலிய மெய்க்குறிகளுடன் வெளிப்படுதலின் சுவையெனினும், மெய்ப்பாடு எனினும் ஒக்கும்[16]** என்பர். ஒவ்வொருவரது மனநிலைக்கேற்ப மெய்ப்பாடனது வெளிப்படும். இத்தகைய மெய்ப்பாட்டினை உணரும் ஆற்றலும் மக்களது மனநிலைக்கு ஏற்ப புலப்படும் என்பது நம் இலக்கியங்கள் வழி தெளிவாகின்றது.

நகை (Humar), அழுகை (Cry), இளிவரல் (Disgust), மருட்கை (Surprise), அச்சம் (Fear), பெருமிதம் (Pride), வெகுளி (Anger), உவகை (Joy) எனத் தொகை நிலையில் மெய்ப்பாடுகள் எட்டென்பர் தொல்காப்பியர். **உளவியலறிஞர்கள், தொல்காப்பியர் குறிக்காத கவலை, சினம், அறிவார்வம், சோர்வு, வலி ஆகிய ஒரு சிலவற்றையே இயம்பினர்[17].**

**நகை**

நகைச்சுவையுடன் கேலி செய்வதும், நேரடியாகச் சாடுவதும் ‘அங்கதம்’ எனப்படும். இவ்வங்கதம் ‘சங்கப் பாடல்களில் தொடங்கி இக்கால இலக்கியங்கள் வரை இடம்பெற்றுள்ளன. தனிமனிதனின் குறைகள், சமுதாயத்தின் குறைகள் என இரண்டையும் உள்ளவாறு கூறுவதைக் காட்டிலும் நகைச்சுவை தோன்றக் கூறுவதன் மூலம் சமுதாயத்தை எளிதில் சென்றடைகின்றன. எள்ளல், இளமை, பேதைமை, மடன் என்ற நான்கும் நகையின் நிலைக்களன்களாகும். கல்வியறிவின்மை, உலகத்தோடொட்ட ஒழுகாமை, ஆளுமைக் குறைபாடு ஆகிய சூழல்களிலேயே நகை தோன்றும் என்பது ஆசிரியர் கருத்து. ஏனைய உயிரினங்களினின்றும் மனிதனை உயர்த்தி, நாடகம் போன்று கலைகட்கு உயர்நிலையாக விளங்கிச் சிறப்பித்தலால் நகை முற்கூறப்பட்டது. இது முறுவலித்து நகுதல், அளவே சிரித்தல், பெருகச்

சிரித்தல் என மேலும் மூவகைப்படும். ஃப்ராய்டு, நகைச்சுவையை அறிவு சார்ந்தது; அறிவு சாராதது; சூழலால் தோன்றுவது எனப்பகுத்து அவை தம்முள் நுண்ணிய வேறுபாடு கொண்டவை எனவும் கூறினார்.

**சிந்தனையைச் செலவு செய்யும்போது கிட்டும் சிக்கனச் செயல்பாடே நகை**[18] என்பர் பிராய்டு. **நகைச்சுவையுணர்வு இல்லாதவனே 'அகமுகத்தனாக' மாறுகிறான் என யூங் கூறுகிறார்**[19]**.** இவ்விரு மேலைநாட்டு அறிஞர்களின் கூற்று நம் தொல்காப்பியரின் சிந்தனைக்கு வலுசேர்க்கிறது எனலாம். உளத்தொடர்பு (Rapport) இல்லாதபோழ்தும் நகை, பகையுணர்வினையே தூண்டும் என்ற செய்தியை 'உள்ளப்பட்ட நகை' எனும் தொடர் வழி உணர்த்துகிறார் தொல்காப்பியர். நகை என்பது இன்பத்தின் உடனடி வெளிப்பாடாக அமைவதாகும்.

**பெரும்பாலும் உடலின் நலத்திற்கும் மனத்தின் எழுச்சிக்கும் நகைப்பு ஓர் அறிகுறியாகும் என்று நகைச்சுவையை ஆராய்ந்த மேனாட்டு அறிஞர்கள் கூறுகின்றனர். உயிரினங்களுள் மனிதன் மட்டுமே நகைத்து மகிழக்கூடியவன் என்று ஹாஸ்லிட் கூறுகிறார்**[20] என்பர் எஸ்.வையாபுரிப்பிள்ளை. இத்தகைய நகைச்சுவையே மாந்தர்களின் உள வெளிப்பாடாக இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது. **ஒருவன் உதட்டில் சிரிப்பு மலர்கிறது என்றால் உள்ளத்தில் எதையோ மறைக்கிறான் என்பது பொருள் என்பார் கார்லைல்**[21] என்பர் ராம சௌந்தரவல்லி. அவர் குறிப்பிடுவது தன் துன்பத்தைப் பிறர் அறியாத வகையில் மறைக்கும் மேலான நாகரிகத்தின் பாற்பட்ட நகை வெளிப்பாடெனலாம். தனது மைந்தனைக் காணத் தலைவன் கள்வனைப்போல வருவதைத் தலைவி கண்டாள் (கலித்.81:16-17). இதில் தலைவனின் செயல் நகைப்பை உண்டாக்கியது. இது பிறரை ஏளனப்படுத்தியமையால் உண்டான எள்ளல் ஆகும். பரத்தையர் இல்லம் சென்று திரும்பிய தலைவன் தனது இல்லத்திற்கு வருவதற்கே மறைந்து வரும் நிலையில் உள்ளான். இதற்கு தலைவனின் நடத்தையே காரணமாகிறது.

ஒருவரைக் கேலி செய்தோ மனதைப் புண்படுத்தியோ நகையானது பிறக்குமானால் அது கேலிக்கு ஆளாக்கப்படுபவர்களை மனரீதியாகப் பாதிக்கின்றது. இதனால் மனஅழுத்தமானது உண்டாகின்றது. தலைவனை எள்ளல் செய்தாலும் தலைவியின் மனதும் இதனால் பாதிக்கப்படுவது இங்கு குறிப்பிடத்தக்கது.

## அழுகை

அறிஞர் பெருமக்கள் பலரும் 'அழுகையைக் குறிக்க "அவலம்" என்ற சொல்லையே பயன்படுத்தி உள்ளனர். இலக்கியங்களில் அவலம் என்று குறிக்கப்படும் அழுகை, நகைக்கு எதிரான மெய்ப்பாடு. உள்ளத்தில் துன்பம் மிகும் போது வெளிப்படும் உணர்வு நிலை அழுகை ஆகும். இந்நிலை ஓசையுடன் அல்லது ஓசை அற்ற நிலையில் ஒருவரிடம் வெளிப்படலாம். இவ்வுணர்வு வெளிப்பாட்டின் போது அவரது துன்பத்தை மற்றவர் உணரவோ அல்லது பங்கு கொள்ளவோ முடியும். **அழுகை என்பது மனத்தில் பட்ட காயத்திலிருந்து புறப்பட்ட செந்நீர் கண்கள் வழியாகக் கண்ணீராக உருமாற்றம் பெறுவது, சில நேரங்களில் மௌனமாய்க் கரைந்து போவது, சில நேரங்களில் ஒப்பாரிப் பாடல்களாய் ஓய்ந்து போவது, நாம் நமக்காகவும் அழலாம்; பிறருக்காகவும் அழலாம்**[22]

தலைவன் தன்னை மறந்து சென்றுவிட்டான் என்று எண்ணித் தலைவி அழுது புலம்புகின்றாள் (கலித்.122:4-6). தலைவனின் பிரிவு தலைவிக்கு அச்சத்தைத் தோற்றுவிக்கின்றது. அதனை ஆழ்ந்து நோக்கும் போது தலைவன் மீது கொண்ட அன்பின் வெளிப்பாடே அச்சத்தைத் தோற்றுவித்து, அழுகையாக மாறி வெளிப்படுவதை உணரமுடிகிறது.

## இளிவரல்

உடல்நலக் குறைவு, மனநல மாறுபாடு, ஆளுமைச்சிதைவு காரணமாக ஒருவனுக்குத் தாழ்வு மனப்பான்மை தோன்றும் நிலையை இளிவரல் என்று

தொல்காப்பியர் எடுத்துரைக்கிறார். மூப்பு, பிணி, வருத்தம், மென்மை ஆகியனவற்றை நிலைக்களன்களாகக் கொண்டு இம்மெய்ப்பாடு தோன்றும். சமுதாயம் தன்னைப் புறக்கணித்து விடுமோ என்ற பாதுகாப்பின்மை உள்ளத்தில் எழுந்த நிலையில் இத்தகைய நிலை ஒருவனிடத்தில் தோன்றுகிறது என்பது உளவியலார் கருத்து

உள்ளத்தில் தோன்றும் ஓர் அருவருப்பு உணர்வு 'இளிவரல்' ஆகும். விருப்பமில்லாத காட்சிகள், நிகழ்ச்சிகள், அனுபவங்கள் போன்றவை இத்தகைய உணர்ச்சியை ஒருவர் மனத்தில் ஏற்படுத்துகின்றன.

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு மாலை நேரமானது காம நோயினை மிகுவிக்கின்றது. எனவே தலைவி இரவெல்லாம் கொடுமை செய்கின்ற தீராத காம நோயினால் வருந்தி வாடுகின்றாள். அதனால் வாழாது இறந்துபடுவாள் போலுள்ளது (கலித்.53:20-22). இதில் தலைவனின் பிரிவால் தலைவிக்கு ஏற்படும் துன்பத்தால் பசலை பாய்தல் அதீத அன்பு என்னும் உளவியல் நிலையைப் புலப்படுத்தும்.

## மருட்கை

மருட்கை என்பதை வியப்பு என்ற சொல்லால் குறிப்பிடலாம். மனிதனின் உணர்ச்சிகளில் மருட்கையும் ஒன்றாகும். மனிதனின் வியப்புக்களும் வியப்பிற்குக் காரணமான பொருட்களும் மகிழ்ச்சி என்னும் மன உணர்வினை வழங்குவதுடன் சில வியப்புகள் துன்பத்தையும் வழங்குகின்றன. சாதாரண மனிதர்களுக்கு மட்டுமே உலகமும் வாழ்க்கையும் வியப்புத் தன்மை கொண்டதாக அமைகின்றன. அவ்வித வியப்புகள் நிகழும் போது அல்லது உணரும் போது மருட்கை என்னும் மெய்ப்பாடு வெளிப்படுகிறது.

ஒரு மனிதனின் அறிவு, உறங்கும் நிலையில் மருட்கை தோன்றும் என்பது தொல்காப்பியரின் உற்றுநோக்கலாகும். அவனுடைய பட்டறிவிற்கும் பழக்கப்பட்ட புலன் காட்சிக்கும் (Perception) உட்படாத ஒன்றினைக் காண நேரும் போதுதான் மருட்கை

தோன்றும் என ஆசிரியர் நூற்பா யாத்தமையால் பிறழ்நிலை நடத்தை பற்றிய சிந்தனையோட்டம் அவரிடமிருந்ததாகக் கருதலாம்.

பொதுவாக, நிலத்தின் வளத்தினைப் பொறுத்தே மனித வாழ்வுக் களங்களின் பண்புகள் மாறுபட்டு வந்துள்ளன என்பதைக் கலித்தொகைப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. பெண் ஒருவள் தான் கருவுற்ற போது அடைந்த துன்பம் குழந்தை பிறந்தவுடன் ஏற்படும் மகிழ்ச்சியில் அவள் பட்ட துன்பம் அனைத்தும் போய்விடும். அது போல் பல விளைபொருள்களைத் தந்து உதவும் நிலமானது. புது நலத்துடன் அழகாகக் காட்சியளித்தது என்பதில் புதுமை என்னும் நிலைக்களனைக் கொண்ட மருட்கை என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுளது. (கலித்.28:4) இதில் பெண் தாய்மை அடையும் போது அவள் உள்ளத்தில் தோன்றும் மாற்றத்திற்கு மகிழ்ச்சி என்னும் உளவியல் கூறு காரணமாகின்றது.

**அச்சம்**

மனிதனிடம் இடம்பெற்றுள்ள உணர்வுகளில் அச்சமும் ஒன்றாகும். இயற்கை சக்திகளைக் கண்டு முதலில் அச்சம் கொண்ட மனிதன் பின்னர், அவற்றிற்கான அடிப்படையை உணர்ந்துக் கொண்டு தன்னுடைய அறிவைப் பெருக்கிக் கொண்டான். **அண்மைக்காலத்து உளவியலார் அச்சம் குறித்துப் பல்வேறு நிலைகளில் ஆய்வு நிகழ்த்தி அதனைப் பயன்படுத்தும் முறைகள் பற்றியும் விளக்கியுள்ளனர். இஃது இயல்பூக்கம் (Instinct) நிலையில் தொடங்கி மெய்ப்பாட்டு நிலைக்குயர்ந்ததென்றே தெரிகிறது[23].**

அச்ச உணர்ச்சியானது, தற்காப்பு மனப்பான்மையின் வெளிப்பாடாகும் பாதுகாப்பு உணர்ச்சி குறைவாக உள்ளவர்களிடத்தும், தன் பாதுகாப்பிற்காகப் பிறரைச் சார்ந்திருப்பவர்களிடத்தும் அச்ச உணர்வு மிகுதியாகத் தோன்றும்.

திருமணத்திற்கு முன் களவு வாழ்வு வெளிப்பட்டு விடுமோ என்ற அச்சம், இரவுக்குறிக்கண் தலைவன் வரும் வழி குறித்த அச்சம், தலைவன் பிரிந்து விடுவானோ என்ற அச்சம், திருமணத்திற்கு பின் பொருளீட்டச் செல்லும் வழியில் தலைவனின் பாதுகாப்பு பற்றிய அச்சம் என அனைத்து சூழ்நிலையிலும் அச்சத்துடனேயே காணப்படுகிறாள் கலித்தொகைத் தலைவி.

இரவுக்குறிக்கண் தலைவியைச் சந்திக்க வரும் தலைவன் மணம் கமழும் மார்புடன் மேகந் தவழும் மலையடுக்குகளின் இடை வழியாக அணங்குகள் சுற்றித்திரியும் பயங்கரமான பாதையைக் கடந்து வருவதை நினைத்தால் தான் அச்சம் ஏற்படுகின்றது எனத் தலைவி கூறுவது (கலித்.49:16-17) தலைவன் மீது கொண்ட அன்பினையும் விரைவில் வரைவுக்குத் தலைவனை உடன்பட வைக்க வேண்டும் என்று சமூக உளப்பாங்கினையும் உள்ளடக்கியதாய் அமைகிறது.

## பெருமிதம்

ஒருவருக்குத் தன்னைக்குறித்து ஏற்படுகின்ற மனநிறைவே பெருமிதம் ஆகும். இந்நிலையை அடைவதே உளவியலில் உச்சமாகக் கருதப்படுகிறது. **அடிப்படைத் தேவைகள் அனைத்தையும் பெற்றவுடன் மனித மனம் தன் மதிப்பு குறித்த பெருமித நிலையை அடைகிறது. இந்நிலையை அடைந்த மனித மனம் அமைதி அல்லது தன்னிறைவு கொள்கிறது. இப்பெருமித நிலை ஒருவர் தனக்குத் தானே வழங்கிக் கொள்வதாகவோ அல்லது சமூக அங்கீகாரமாக பிறரிடமிருந்து பெறுவதாகவோ அமைகிறது. உளவியல் அடிப்படையில் புதினங்கள் எழுதிய ஜேன் ஆஸ்டின் (1775-1813) "பெருமிதமும் காழ்ப்பும்" என்பதில், பெருமிதம் ஏற்றற்குரிய ஓர் உணர்வு என்கிறார். எரிக்பர்ன் இதனை ஃபிராய்டு அவர்களுடைய 'தான்' என்பதனுள் அடக்குவர். தொல்காப்பியனார் உரைத்ததைப் போன்று உளவியலார், பெருமிதத்தினை ஒரு மெய்ப்பாடாகக் கூறவில்லை. மனிதர்கள் அனைவரிடத்தும் உளவியல் நிலையில் 'தான்' எனும் நினைப்பு இருத்தல் வேண்டும் என்றும், அது இல்லாமற் போனால்**

**மனநலம் குன்றிச் சமுதாயத்திற்கு சுமையாவர் என்பதே உளவியலாளர்களின் கருத்தாகும். நான் நினைப்பதாலேயே வாழ்கிறேன் என டேகார்ட்டும், நான் எனக்குரியதனைத் தேர்ச்சி செய்கிறேன், எனவே வாழ்கிறேன் என ஃப்ராய்டும் கூறினர். தான் எனும் உணர்வினைக் காட்டிலும் பெருமிதம் ஒருபடி உயர்ந்தது என்பதே தொல்காப்பியனாரின் முடிந்த முடிபாகும்[24].** உளவியலாளர் உரைக்காத பெருமிதம் பற்றிக் குறித்த பெருமை தொல்காப்பியனாருக்கேயுண்டு. தம்முடைய அல்லது பிறருடைய தகுதிகளின் நிறைவைப் பெருமையுடன் பிறருக்கு உணர்த்துதல் பெருமிதம் ஆகும்.

கடல்கோளால் பாண்டிய நாடு அழிந்த போதும் தன் மனந் தளராமல் நாட்டை விரிவாக்கப் பகைவர்களை நோக்கிப் படையெடுத்துச் சென்றதில் பாண்டிய மன்னனின் வீரம் குறிப்பிடப்படுகிறது (கலித்.104:1-4) சேரர் மற்றும் சோழர்களை வென்று அந்நாட்டில் தனது மீன் கொடியினை நிலை நாட்டியவன் பாண்டியன் என்பதிலும் பாண்டிய மன்னனின் வீரம் உரைக்கப்பெற்றுள்ளது. முல்லைக்கலியில் ஏறுதழுவலின் போது ஆயர்களின் வீரமானது அழகாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. எனவே வீரத்தின் வழி பெருமிதம் என்னும் உணர்வு புலப்படுகிறது.

## வெகுளி

வெகுளியினை ஒரு நேர்முக (Postive) மெய்ப்பாடாகக் கொள்ளலாம். “தற்காப்பிற்கு” இ∴து இன்றியமையாதது, ஆயினும் அளவினை விஞ்சி சீற்றமாகும் போழ்து, அது தனியவனை அழித்துவிடும். **அறிவும், புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தலே கொலையென்றார் அவர். ஊடலினை விட உள்ளத்திற்கு அவர் முன்னுரிமை தந்தார். மானவுணர்விற்குக் குறைபாடு வாராமல் வாழ்தலே விழுமியது எனவும், விலங்குகளைப் போல் வயிறு வளர்த்தல் இழிந்தது எனவும் கருதும் ஆசிரியரிடத்து ஆழப்பதிந்தமையால், தன்னைத்தான் அடித்துக்கொள்ளல் அல்லது பிறரால் அழிக்கப்படல் என்பதனை விடப் புகழ்க்கொலையே” (Collins Dictionary, p.254)**

**கொடியது என்று தெளிவுபடுத்தினார்**[25] என்று உளவியலாளர் குறிப்பிடுவர். உடம்புநிலையில் சிதைக்கப்படும் உயிர்க்கொலையை உறுப்பறையினுள் அடக்கினார் தொல்காப்பியர்.

வெகுளி என்பது எப்பொழுதும் பிறபொருள் பற்றியே வரும். அகவாழ்வில் தன்னை வெகுண்டான் என்பது கிடையாது. உறுப்பறை என்பது ஒருவர் மேல் மற்றொருவர்க்கு சினம் மிகுந்து தோன்றும் நேரத்தில் அவரின் உடலுறுப்புகளான கை கால்களைக் குறைத்தல் என்பது நிகழும். மன்னர் முறைசெய்தலில், தம்குறை கண்ட போது உறுப்பறை செய்தலை கலித்தொகை உரைக்கின்றது (கலித்.52:1). தன்வசம் உள்ள பொருளைப் பிறர் கவரும் பொழுது மனதில் ஏற்படும் உணர்வு நிலையே இத்தகு மெய்ப்பாடாக மாறுகிறது.

**உவகை**

உவகை (அல்லது) நுகர்ச்சி எட்டாவது மெய்ப்பாடாகக் குறிக்கப்பெற்றது. உள்ளம், உடல் ஆகிய இரு நிலைகளிலும் துய்த்தலே நுகர்ச்சி. அஃது பிறருக்குத் தீதறியாத ஒன்று. நகை என்னும் மெய்ப்பாட்டை அவ்வப்போது தோன்றுவது, தோன்றி மறைவது என இரண்டாகக் கொண்டால் உவகை என்னும் மெய்ப்பாட்டையும் மனத்தில் நிலைத்து நிற்பது, நினைக்கும் தோறும் தோன்றி இன்பம் பயப்பது என இரண்டாகக் கொள்ளாலம். காமம் என்ற இயல்பூக்கத்தினால் கிட்டும் இன்பமே உளவியல் நிலையில் நிறைவான இன்பம் என்று ஃப்ராய்டு கூறுவது போலக் கூறாமல் ஏனைய செயல்களைச் செய்வதனால் விளையும் இன்பமும் நுகர்ச்சியினுள் அடங்கும் என்பது தொல்காப்பியர் கருத்தாகும்.

**மனம் என்பது பிறரால் காணமுடியாத மாயநிலையில் இருந்தாலும், அதில் எத்தனையோ குமுறல்களும், கொந்தளிப்புகளும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. மனிதனது சூழலுக்கேற்ப அவை இன்பமாகவோ துன்பமாகவோ வெளிப்படுகின்றன**[26] உவகை என்னும் மெய்ப்பாடு உளவியலோடு பெரிதும் தொடர்புடையதாக உள்ளது.

முல்லைநிலத் தலைவியைப் பொதுவனோடு இணைத்து ஊர் மக்கள் அலர் தூற்றியதற்கு அவள் மகிழ்ந்ததை,

**“இன்ன உவகை பிறிது யாது - யாய் என்னைக்**
**கண்ணுடைக் கோலள் அலைத்தற்கு, என்னை**
**மலர் அணி கண்ணிப் பொதுவனோடு எண்ணி,**
**அலர் செய்துவிட்டது இவ்வூர்” (கலித்.105:62-65)**

என்னும் பாடலடிகள் புலப்படுத்தும். இதில் ஊராரின் அலரால் நொதுமலர் வரைவு என்பது இருக்காது; இதனால் தனக்கும் தலைவனுக்கும் விரைவில் திருமணம் நடைபெறும் என்ற எண்ணத்தால் தலைவி மகிழ்கிறாள். பிறர் கூறும் அலரைத் தனக்குச் சாதகமாகக் கொண்டு தலைவி மகிழ்ந்தமை தலைவியின் உளவியல், சமூக உளவியல் ஆகிய இரண்டையும் உள்ளடக்கியதாகும்.

## புகுமுகம் புரிதல்

இருவர் சந்திப்பின் ஆரம்பமே புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடாகும். இருவர் பார்த்துக் கொள்ளும் நேரம் தலைவன் தலைவியின் மனதை அறிய முற்படுவான். அப்போது அவளின் காதல் உணர்ச்சியானது முறுவலாக வெளிப்படுகின்றது. இதுவே தலைவியின் மனதைத் தலைவன் அறிந்து கொள்ள ஏதுவாகின்றது. இக்காதல் மெய்ப்பாட்டில் கண்களும் இதயமும் முதன்மை பெறுகின்றன.

தலைவன் ஒருவன் தினமும் வயமான் அடியைத் தேடுவது போல வந்து தலைவியைப் பார்த்துக் கொண்டே செல்வதை (கலித்.37:1-5) குறிஞ்சிக்கலிப் பாடலடிகள் உரைக்கும். இதில் தலைமக்கள் இருவரும் ஒருவரை ஒருவர் தினமும் பார்த்துக் கொள்வதால் இங்கு புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடானது தோன்றுகின்றது.

தலைவன் நோக்கிய வழித் தலைவிக்கும் தலைவி நோக்கிய வழி தலைவனுக்கும் இடையே ஏற்படும் பார்வைப் பரிமாற்றமே இம்மெய்ப்பாடு தோன்றக் காரணமாகின்றது. அதனால் ஒருவர் மற்றொருவர் மீது கொண்ட அன்பு எனும் அகமனச் செயல்பாட்டின் உளவியல் தன்மை புலப்படுகிறது.

## பொறிநுதல் வியர்த்தல்

தலைவியை விரும்பி நோக்கிய நிலையில் அச்சமும் நாணமும் ஒருங்கே வந்தடைந்தலால் தலைவி வியர்வை அரும்பிய நெற்றியை உடையவளாகத் திகழ்ந்தாள் என்ற குறிப்புள்ளது.

பாலைக்கலியில் தலைவன் ஒருவன் தலைவியைப் பார்த்துக் கொண்டே இருந்தான். அவனின் காதல் பார்வையின் வீச்சைத் தாங்காமல் தலைவியின் நெற்றியில் வியர்வை அரும்ப, தலைவன் அதைத் துடைத்தமை பாடப் பெற்றுள்ளது. (கலித்.4:18-19) தலைவனது காதற் குறிக்கண்டு தலைவி மகிழ்ந்தாள். மன உள்ளுணர்வு பொங்க புறம் வியர்த்தல் இயல்பாதலின் அவளது சிறுநுதலில் குறுவியர்வை தோன்றியது. நுண்ணிய மனஉணர்வு உளவியல் இதுவாகும்.

## நகுநய மறைத்தல்

தலைவி தலைவனிடம் தோன்றிய குறிப்பினைத் தன்னுள்ளத்தே அடக்கி, அம்மன மகிழ்ச்சியினைப் புறத்தே வெளிப்படாதபடி மறைத்தமை இம்மெய்ப்பாடாகும். தலைவி ஒருத்தி தோழிகளுடன் ஒரு சேரக் கூடி விளையாடும் போது பல்லின் நுனி தோன்றாதவாறு முறுவல் செய்ததையும் அதனைப் பிறர் அறியா வண்ணம் மறைத்ததையும் (கலித்.142:6-8) நெய்தற்கலிப் பாடல் சுட்டுகின்றது. இதில் தலைவியின் மகிழ்ச்சி வெளிப்பாட்டிற்கு அன்பு என்னும் உளவியல் கூறு அடிப்படையாகிறது.

## பாராட்டெடுத்தல்

தலைவன் தலைவியின் கண், நுதல், பல், தோள், கூந்தல், முலை, அல்குல் என்பன போன்ற உறுப்பு நலன்களைப் பாராட்டுகின்றான் (கலித்.14:1-5, 20:15, 55:7). தலைவி தலைவனின் குணநலன், வீரம், பண்பு ஆகியவற்றைப் பாராட்டும் நிலையில் இம்மெய்ப்பாடு வெளிப்படுகின்றது. தலைவன் போரிலே பகை அரசனைக் கொன்று அவன் நாட்டைக் கைப்பற்றி களிற்றின் மேலேறி அமர்ந்து வரும் அழகையும், பகை நாட்டை வென்று குதிரையின் மேலமர்ந்து வரும் அழகையும், பகையை வென்று திறையைப் பெற்றுப் பாய்ந்து வரும் தேர் மேலேறி வரும் தலைமைச் சிறப்புடைய வீரத்தால் பிறந்த அழகையும் பாராட்டுகின்றாள் (கலித். 26:11-12, 26:15-16, 26:19-20).

களவு, கற்பு என்னும் இரண்டு நிலையிலும் பாராட்டுதல் என்பது அன்பினையும் மகிழ்ச்சியினையும் தரத்தக்கது எனக் கூறமுடிகிறது. தலைவி, களவில் தலைவன் மீது அளவுகடந்த அன்புடையளாகத் திகழ்ந்ததைப் போன்று கற்புக் காலத்திலும் மாறாத அன்புடையவளாகத் திகழ்கிறாள். இந்நிலையில் கற்பு வாழ்வில் இன்பம் மேலிடுகின்றது. மகிழ்ச்சி என்னும் மெய்ப்பாடு வெளிப்பட வேண்டுமெனில் தலைவன், தலைவி என்ற இவ்விருவரும் ஒருவர் மற்றொருவரிடமுள்ள பெருமையை நினைந்து போற்றுதல் என்னும் உளவியற் கூறு அடிப்படையாகிறது.

இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர் தலைவன் தலைவியைப் பாராட்டுதல், மனநிறைவு, இன்பத்தால் ஏற்பட்ட மகிழ்ச்சி போன்றவை நுண்ணிய உளவியலின் பாற்பட்டதாகும்.

## கையறவு உரைத்தல்

உள்ளத்தால் பிணிப்புண்ட தலைமக்களுக்குப் பிரிவு நேர்ந்தால் தம் உயிரைக் கூடப் பொருட்படுத்துதல் இல்லை. உண்மையில் பிரிவு என்பது தலைவன் தலைவியின் உள்ளத்தில் இல்லை. காலமும் இடமுமே அவர்களைப் பிரித்தன. தோழி இடமும்

காலமும் ஏற்ற வகையில் இல்லை என உணர்த்தித் தன்னைச் சேட்படுத்திய வழி ஊர்மக்களால் தூற்றப்படும் மடலேறுதலும் தனக்கு இனிதாகும் எனத் தலைவன் உணர்த்தினான். ஊரார் பழியுரைக்க மடலேறுதல் உணர்த்தும் தோழியிடம் தான் உயிர் வாழ்தலும் தனக்குப் பழியே என்கிறான் தலைவன்.

தலைவன் பிரிந்த சென்ற நிலையில் தலைவி தன் மனத் துயரத்தை அ.்.றிணை உயிர்களைக் கொண்டு ஒப்புமைப்படுத்திக் கூறுகின்றாள். வெள்ளத்தில் அகப்பட்டுத் தவிக்கும் மானைக் கண்டு இரக்கம் கொள்ளாமல் அதனைக் கொல்லக் கணை எடுத்துத் தொடுத்து விடும் கொடியவனைப் போல மாலைக் காலமானது என்னைத் துன்புறுத்துகின்றது (கலித்.120:10-12) என்கிறாள் தலைவி இதன்வழி உள்ள முறிவு என்னும் உளவியல் புலனாகும்.

உள்ள முறிவு என்பது விரும்பிய இலக்கினை அடைவதில் நேரும் தடைகளாலோ குறிக்கீடுகளாலோ நேரிதான குறிக்கோள் ஒன்று இன்மையாலோ விளைவதாகும் என்பர் உளவியலாளர். ஓர் அழுத்தமான தேவையும் அதனை எய்தி நிறைவுற இயலாத உணர்வும் உடனியையும் போது ஏற்படும் அனுபவமே உள்ள முறிவு ஆகும்.

## இன்பத்தை வெறுத்தல்

தலைவன் இல்லாத சூழலில் மாலைப்பொழுது, கோவலர் ஊதும் குழல், அன்றில் பறவை, பிறை போன்றவை எல்லாம் தலைவிக்கு வெறுப்பினைத் தோற்றுவித்தது.

**விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் வாழ்வில் நிகழும் போது விருப்பங்கள் முறிவுற்று உள்ளப் போராட்டம் ஏற்படுகின்றது. உள்ளம் தன்னையறியாமல் இறந்த காலத்தின் இயல்பிற்குச் சென்றுவிடுகிறது. இத்தகைய நிலையைப் பின்னோக்கம் என்று குறிப்பிடுவர். தொடக்கநிலை வாழ்க்கைக்கு குறிப்பாக குழந்தைப் பருவத்துக்குரிய**

**உளவியல் சார்ந்த செயல்முறைகளாகிய பழைய நிலைக்குத் தன்னியக்கமாகவும் தன் விருப்பாற்றலையும் மீறிச் சென்றுவிடுதலைப் பின்னோக்கம் என்று உளவியலார் வரையறை செய்வர்[27].**

தலைவன் இல்லாத இளவேனில் காலத்தைத் தலைவி வெறுப்பதையும் மாலைக் காலத்தை மருள் மாலை எனக் கூறுவதையும் அறிய முடிகின்றது. கோவலர்கள் ஊதும் இனிய குழலோசையானது தலைவியின் துயரை மிகுதிப்படுத்தியதை (கலித்.118:13-14, 130:15-16) என்னும் கலித்தொகைப் பாடல்களில் காணமுடிகிறது.

தலைவனோடு சேர்ந்து வாழும் காலத்தில் ஏற்படும் துன்பம் கூடத் தலைவிக்கு இன்பமாகத் தோன்றும். ஆனால் பிரிந்து வாழும் சூழ்நிலையில் எத்தகைய இன்பம் தரக்கூடியவையாக இருந்தாலும் அது துன்பமாகவே உணர வைக்கும். யாழ், குழல், நிலவு, மலர் முதலான இன்பம் தரக்கூடிய அனைத்தையும் வெறுத்தல் என்பது உளவியல் ரீதியிலும் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

### துன்பத்துப் புலம்பல்

அன்பினால் ஏற்பட்ட துன்பத்தின்பாற் பிறந்த புலம்பலாகும். காதல் வயப்பட்ட தலைவி தனது உள்ளக் கருத்தினை, அதாவது தனது ஆற்றாமையை எவ்விதத்திலாவது தலைவனுக்கு உணர்த்த வேண்டும். தலைவன் தன்னை விரைவில் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற வேட்கையுடையவள் இவ்வேட்கையினைத் தனது புலம்பலின் வழி வெளிப்படுத்துகின்றாள்.

தலைவன் வரைவு நீட்டித்தவிடத்து பிரிவுத் துயர் தாங்காத தலைவி புலம்புவதை நெய்தற்கலியில் நல்லந்துவனார் பத்துப் பாடல்களில் (கலித்.124, 125, 126, 127, 128, 131, 132, 133, 134, 135) பதிவு செய்துள்ளார். தலைவியின் துன்பத்திற்குத் தலைவன் மீதுள்ள அன்பின் வெளிப்பாடு காரணமாகும்.

## எதிர்பெய்து பரிதல்

தலைவி, தலைவன் மீது கொண்ட அன்பின் பெருக்கத்தால் தலைவனின் தேர் வாராதாயினும் வருவது போல உள்ளம் உணர அவ்வுணர்வினால் துயிலாதிருக்கிறாள். இன்பம் துய்த்தற்குரிய தலைவி, தலைவன் அருகில் இல்லாதபோதும் அவன் இருப்பதாகவே எண்ணி ஆற்றியிருந்தாள். தலைவன் வரைவுச் செய்தியோடு வரும் நாளுக்காக அவன் தேர் ஓசையை எதிர்பார்த்து உறங்காது காத்திருந்தாள்.

**வாழ்வின் நிகழ்வுகளை ஏற்க இயலாத சூழலில் உள்ளம் தன்னிச்சையாக ஒரு கற்பனை விளையாட்டில் ஈடுபடுவதுண்டு. அங்கு உலகையும் வாழ்வையும் உள்ளம் தான் விரும்புமாறு படைத்துக் கொண்டு தன்போக்கில் மகிழ்வதுண்டு இதனை பகற்கனவு என உளவியலார் கூறுவர்[28].** உண்மை வாழ்க்கையில்பெற இயலாத தேவைகளைக் கற்பனை செய்து மனநிறைவு கொள்ளுதலே இவ்வுள்ளப் போக்கின் அடிப்படையாகும். இது எளிமையாகக் கிடைக்ககூடிய பொருத்தப்பாட்டு அமைப்பென உளவியலார் கூறுவர்.

**கனவிற்கும் பகற்கனவிற்கும் வேறுபாடுள்ளது தூக்கத்தில் நிகழ்வதுகனவாகவும் விழிப்பில்நிகழ்வது பகற்கனவாகவும் உள்ளது. இவை இரண்டிற்கும் பெரிய வேறுபாடுகள் இல்லை என்பதை உளவியல் அறிஞர் யங் குறித்துள்ளார்[29].** பகற்கனவு என்பதன் விளக்கத்தினை விழிப்புநிலையில் விருப்பமான போக்கில் கட்டுப்பாடற்ற சிந்தனையில் கற்பனை செய்து கனவு போல நினைவுப் பிம்பங்களைக் காண்பது எனத் தெளியலாம். தலைவனைப் பிரிந்து இருக்கும் தலைவி அவனையே எண்ணித் தூங்கியிருந்த போது தலைவன் தன் தோள் மேல் தழுவிக் கிடப்பதாக நினைத்ததை (கலித்.126:10-11) கலித்தொகைப் பாடல்கள் பதிவு செய்துள்ளன.

தலைவன் பொருள் காரணமாகப் பிரியக்கருதும் போதும் இடைச்சுரத்து அழுங்கும் போதும் வினைமுற்றி மீளும் போதும் தலைவியைப் பற்றி பலவாறாக எண்ணுகிறான். தலைவியை இன்பச் சூழலில் கருதுதல் காத்திருந்து வருந்தும் துன்பச்

சூழலில் கருதுதல் ஆகிய இருவகைப் போக்கிலும் தலைவியின் அழகும் அன்புடை நெஞ்சமும் அவள்பால் பெறலாகும் இன்பமும் கற்பனைச் சிந்தனையில் கனவென மலர்கின்றன. தலைவனின் உள்ளம் விரும்பத்தகாத இயல்புகளை விலக்கி மறக்கவும் இன்னவாறு இருக்க வேண்டும் என்னும் விழைவினை நிறைவுறச் செய்யவும் பகற்கனவு பயனளிக்கின்றது என்பத உளவியல் கருத்தாகும்.

உளவியலார் பகற்கனவுகள் மூன்றியல்புகளைப் பெற்றுள்ளமையைக் குறிப்பிடுவர். அவை உடனடிச் சூழ்நிலையுடன் கொள்கின்ற தொடர்பு வலுவற்றதாக இருக்கும் போது ஏற்படுதல்; மனநிறைவினை அளித்தல்; மனித வளர்ச்சியிலும் முதிர்ச்சியிலும் சிறப்பான பங்கினை வகித்தல் என்பனவாகும்.

அக இலக்கியங்களில் வரும் தலைவனின் கனவு உணர்வுகளில் இம்மூன்று இயல்புகளையும் காண இயலும். இத்தகைய எண்ணப் போக்கில் தலைவன் ஈடுபடுவதால் அவனது ஏமாற்றம் தவிர்க்கப்படுகிறது அவனது வினைச் செம்மையும் கைகூடுகிறது எனக் கொள்ளலாம். இதுகருதியே சங்கப் புலவர்கள் இத்தகைய உளக் கூறுகளைத் தமது பாடல்களில் பொதித்தனர் எனக் கருதமுடிகிறது.

வினைவயிற் செல்லும் தலைவன் இடைச்சுரத்துச் செலவழுங்குதல் தலைவியை பிரிந்து செல்ல மனமின்மையே ஆகும். இதன் காரணமாகத் தனது பயணத்தில் வெறுப்புத் தோன்றிச் செயலில் ஈடுபாடில்லாது திகழ நேரிடுகிறது. இந்நிலையில் தற்காலிக ஆதரவாகப் பகற்கனவில் தலைவியின் உருவத்தை அவன் மனத்தால் நாடிப் பெறுகிறான்.

## ஏதமாய்தல்

பிரிந்த தலைவன் இனி வருவானோ வாரானோ எனவும் பிரிந்தவர் மறந்தனரோ என்றும் எண்ணிக் கூட்டத்திற்கு வருவதற்கு ஏதுவான இடையூற்றை ஆராய்பவளாகத் திகழ்கிறாள் தலைவி. இரவில் தலைவன் தன்னைக் காண வரும் வழியில் ஏற்படும்

துன்பத்தினை ஆராய்ந்து விரைவில் தன்னை மணந்து கொள்ள வேண்டும் எனத் தூண்டுவாள் (கலித். 47:15-19, 52:7-14, 52:15-18 117:13-15). தலைவி தான் இவ்வாறு ஐயுறுவதற்கான காரணத்தைச் சற்று ஆய்ந்து அமைதியுறுவாள். இத்தகைய அமைதி தேடல் என்பதும் ஒருவகை உளவியல் கூறு ஆகும்.

## பசியடநிற்றல்

பசியட நிற்றல் என்பது தலைவன் தலைவி இருவரும் ஒருவரையொருவர் நினைந்து உண்ணாமல் இருத்தலாகும். இம்மெய்ப்பாட்டினை,

**இனியான் உண்ணலும் உண்ணேன் வாழலும் வாழேன்**

**தோள்நலமுண்டு துறக்கப்பட்டோர்**

**வேணீருண்ட குடையோரன்னர் (கலித்.23)**

என்னும் கலித்தொகையடிகளும் வெளிப்படுத்தும்.

தலைவனால் பிரிவு உணர்ந்தப்பட்ட தலைவி தன்னையும் உடனழைத்துக் கொண்டு செல்லுமாறு தலைவனைக் கேட்கிறாள். அதற்குத் தலைவன் உடன்படவில்லை. அப்போது தலைவி, தலைவனிடம் அவன் அவளை விட்டுப்பிரிந்து செல்வானேயானால் தான் உணவு உட்கொள்ளப்போவதில்லை என்கிறாள். இம்மெய்ப்பாட்டின் வழி தலைமக்களின் அன்பின் வெளிப்பாடு பெரிதும் புலனாகும்.

## பசலை பாய்தல்

கூட்டம் பெறாது ஆற்றாத் தலைவி காதல் நோயால் தன் கவின் இடிந்தெய்தும் நிற வேறுபாட்டினைத் தொல்காப்பியம் பசலை பாய்தல் என்று குறிப்பிடுகிறது. தலைவனைப் பிரிந்ததும் தலைவியிடம் தோன்றும் உடம்பின் நிற வேறுபாடு பசலையாகும். உள்ளத்தின் எழும் துன்பமானது உடலளவிலும் மாற்றத்தை

ஏற்படுத்துகிறது. உள்ளம் நோயுற்ற காலத்தில் மேனியில் ஏற்படும் மாறுபாடுகளில் தலையாயதாகத் தமிழ்ப் புலவர்கள் குறிப்பிட்டிருந்தது நிற மாற்றத்தையே என்பர்

**தலைவன் பிரிவதால் தன் உள்ளத்துயரத்தால் தனது மேனியில் பசலை ஏற்பட்டதென்றும் தலைவன் தன்னைப்பிரியாது உறைவதால் தன்மேனி அழகு பெற்றுத்திகழும் என்றும் கருதுபவள் தலைவி. அவளது இக்கருத்து தலைவன் எப்பொழுதும் தன்னுடையே இருக்க வேண்டும் என்ற அவளது உளப்பாங்கினை வெளிப்படுத்துகிறது. உள்ளத்தின் போராட்டமும் துன்பமும் உடலில் செயல்பாடாக நிலைமாற்றம் பெறுகின்றது**[30]

உள்ளத்தின் துயரத்தால் உடலின்உருவாகி உள்ளத்தின் துயரம் நீங்கும் போது மறைந்து போகும் மனநிலை மாற்றத்தில் உடல்நிலை மாற்றம் ஏற்படும் என்னும் உளவியல் கருத்துக்கு இதுபோன்ற பாடல்கள் ஏற்புடையனவாகின்றன. இந்நிலை மாற்றம் என்னும் உளவியல் உத்தி உளவியலாளர்களால் பேசப்படுகிறது.

கலித்தொகையில் முக ஒளியானது பாம்பு சேர் மதி போலவும் (கலித்.7:7-8) மேகம்மறைத்த நிலவு போலவும் (கலித்.15:16-17) தெளிவில்லாமல் பசலையால் உண்ணப்பட்டு மேனியின் நிறம் மங்கியுள்ளமை புலவர்களால் பாடப் பெற்றுள்ளது. ஆதலால் மெய்ப்பாடுகளுக்கும் உளவியற் கூறுகளுக்கும் நெருங்கிய தொடர்புடைமை புலனாகும்.

## கண்துயில் மறத்தல்

தலைவன் வரைவிடை வைத்துப்பிரிந்த வழி ஆற்றாளாகிய தலைவி தோழியிடம் உலகத்திலுள்ள உயிர்கள் இனிதுயிலும் வேளையிலும் தான் மட்டும் துயிலாது துன்புறுவதாகக் கூறுகிறாள். **தலைவனைப் பிரிந்துள்ளதால் தலைவிக்கு உண்டான மன அழுத்தமானது அவளைத்துயிலினின்றும் தவிர்த்தது பிரிவுத்துன்பத்தால் ஏற்படும் மன அழுத்தம் தலைவியின் உடலையும் தூக்கமில்லாமற்செய்து பாதிப்படையச்**

**செய்கிறது என்னும் கருத்து பெறப்படுகிறது. இதுகண்டு தோழி இரங்குவதுமுண்டு என்பதால் இவ்வுளவியல் கூறு அனைவராலும் அறிந்து கொள்ள வேண்டிய ஒன்று என்பது புலனாகிறது[31].**

தலைவியானவள் உறக்கமில்லாமல் கலங்குவது அவளது கைகளின் மெலிவிற்கு காரணமாகிறது. இம்மெலிவினால் அவளது கைகளிலுள்ள வளையல்கள் கழன்று வீழ்கின்றன. அவளது உள்ளத் துன்பத்தினால் ஏற்பட்ட அம்மெய்ப்பாடு தலைவியிடம் வெளிப்படுவதால் இதனைக் கண்ட தோழி உளத்துன்பம் அடைகின்றாள். எப்படியாவது தலைவியின் துன்பத்தை நீக்க வேண்டும் என்று கருதுகிறாள்.

எனவே ஒருவருடைய உளமாற்றம் தொடர்புடையவை அவரை மட்டும் தாக்காமல் அவரது மெய்ப்பாட்டின் விளைவாகப் பிறரது உள்ளத்திலும் மாற்றம் ஏற்படுத்துவது புலனாகிறது. இதனால் தான் தொல்காப்பியர் தோழியை ஒன்றித் தோன்றும் தோழி எனக் குறிப்பிடுகிறார்.

பொதுவாகத் தலைவன் பிரிந்த பின்னர் பிரிவின் துயரம் இரவில் தான் மிகுதியாக உணரப்படும் எனச் சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன. பகற்பொழுது சுற்றமும் சூழலும் இயக்கமும் மிக்கதாகக் காணப்படுவது. அதன் காரணமாகப் பிறதுறை வழி உள்ளம் செல்லலாம் துன்பத்தை மறக்கலாம். இரவோ தனிமை மிகுந்தது. காமநோய் மிகுதியாக உள்ள தலைவி நடுஇரவிலும் தூங்காமல் தலைவனை நினைத்து வாடுகின்றதைக் காணமுடிகின்றது. (கலித்.45:18-19). தனிமை என்பதே ஒரு நோய் என உளவியலார் கருதுகின்றனர்.

தனிமை என்னும் துயர் உள்ளத்தை வாட்டுவதுடன் உடலினையும் வருத்தும் நிலையினை உடையது. தனிமைத் துன்பத்தால் துயருறும் உள்ளம் தடுமாறும் பண்பினைப் பெறுகிறது. இப்பண்பு காலப்போக்கில் ஒருவனைத் தானே பேசிக் கொள்ளும் நிலைக்கு ஆளாக்கிவிடுகிறது. இத்தகைய மனநிலை களவு, கற்பு என்னும்

இருகைகோளிலும் குறிப்பாகக்களவில் ஏற்படும் எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இத்தகைய புலம்பலின் போது ஞாயிறு, திங்கள், அருவி, கடல், விலங்கு, மான், பறவை உள்ளிட்டவை சொல்லுவன போலவும் கேட்குநபோலவும் செயல்படும் மெய்ப்பாடு தோன்றும் என்பது தொல்காப்பியர் எண்ணம்

**கனவொடு மயங்கல்**

நயந்தோர் பிரிவால் அயர்ந்த காதலர் கனவில் துணைவரைக் கண்டு களித்து விழித்த பின் காணாது வெருளுதல் என்பது உளமாறக் காதல் கொள்வோரிடம் ஏற்படும் மெய்ப்பாடாகும். இது கனவொடு மயங்கல் என்னும் மெய்ப்பாடாய் இலக்கியங்களில் இடம்பெறும்.

கனவு என்பது மனிதனின் நிறைவேறாத எண்ணங்கள் ஆசைகள் போன்றவை அடிமனத்தில் புதைந்து அவை உறக்கத்திலும் விழிப்பிலும் வெளிப்படுவதாகும். அடிமனத்தில் உள்ளவைகளே கனவுகளாக வெளிப்படுகின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கனவும் உரித்தால் அவ்விடத்தான என்று பொருளியலில் கனவுப்பற்றிக் கூறியுள்ளார் தொல்காப்பியர்

வரைவிடைவைத்துத் தலைவியைப் பிரிகிறான் தலைவன் அப்போது ஆற்றாதிருக்கும் தலைவியிடம் அது குறித்து வினவுகிறாள் தோழி. அதற்குத் தலைவி தலைவன் தனது மெய்யின் ஊற்றின்பத்தைப் பெறுவதற்காக இரவுக்காலத்தில் பொய்யாகிய கனவில் வந்து முயங்கினான். இதனைத் தான் உண்மை நிகழ்ச்சியாக எண்ணியதாகக் கூறுகிறாள். பின்னர் அவள் மயக்கம் நீங்கித்துயிலெழுந்து தலைவன் அங்கு உள்ளான் எனக் கருதி கையாலே படுக்கை முழுதும் தடவிப்பார்த்ததாகவும் ஆனால் அவனைக் காணாது கலங்கியதாகவும் கூறி தனது ஆற்றாமைக்கு அக்கனவினால் ஏற்பட்ட மெய்ப்பாடே காரணம் எனத் (கலித்.126:10-17) தலைவி கூறுகின்றாள்.

தலைவனும் தலைவியும் அன்பார்ந்த நிலையில் கனவு காணுமிடத்து அதனை நனவென்று கருதுகின்றனர். ஆனால் கண்விழித்த நிலையில் அது பொய்யாய்ப் போனதற்காக வருந்தும் நிலை ஏற்படுகிறது. இந்நிலையில் கனவு என்னும் உளவியல் சார்ந்த ஒன்று தலைவன், தலைவியரின் களவுக்கால மெய்ப்பாட்டிற்கு அடிப்படையாகின்றது. இந்த அடிப்படையை வைத்து யாக்கப்பெறும் அகப்பாடல்கள் தலைவன் தலைவியின் அன்பினை உரியவாறு வெளிப்படுத்துவனவாக உள்ளன.

## பொய்யாக் கோடல்

பொய்யாகக்கொள்ளுதல் என்பதுவும் உளவியல் சார்ந்த ஒரு மெய்ப்பாடாகும். இம்மெய்ப்பாடு அகச்சுவையை மிகுதிப்படுத்திக் காட்டுவதற்கு உதவுகின்றது. பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவனோடு ஊடிய காமக்கிழத்தி தலைவனிடம் நீ விரும்பாத முயக்கம் எமக்குக் கனவின் கண் வரப்பெற்ற செல்வத்தை ஒப்பதொன்றாய் இருந்தது என்றுரைப்பாள். தலைவியும் தோழியும் வள்ளைப் பாட்டுப்பாடுமிடத்துத் தலைவி தான் சூளுற்ற சூளுறவினைப் பாதுகாவானாய்ப் பொய்த்தவருடைய மலையாயிருந்தும் வீழ்தலுற்று விளங்கும் அருவியை உடைத்து என்று தலைவனை இயற்பழித்தாள். தலைவன்மீது கொண்ட அன்பினால் நம்பிக்கையுடன் தலைவன் பொய் கூற மாட்டான் எனக் காத்திருக்கிறாள் (கலித்.41:18-20). ஆனால் அந்த நம்பிக்கை பொய்த்துப் போகும் போது உளச்சிதைவுக்கு ஆளாகின்றாள் தலைவி.

## மெய்யே என்றல்

**தலைவன் தன்னிடம் உண்மையான காதல் உடையவன் என்பதை உறுதியாக என்னும் போது தனது அன்பின் மிகுதியும் அவனை எதிர்மறையாகச் சிந்திக்காமல் நன்மை கருதியே சிந்திக்கச் செய்கிறது இவ்வாறு பொய்யைக்கூட மெய்யாக ஏற்றுக்கொள்ளும் உளவியல் சில வேளை மனத்தில் ஒருவித மகிழ்ச்சியை ஏற்படுத்துகின்றது**[32] என்பர்.

பருவ வரவின்கண் ஆற்றாளாகிய தலைவியிடம் தோழி, தலைவன் தான் வரும் நாளெல்லையை ஏற்கனவே நெஞ்சிலே நிற்கும்படி சொல்லிய சொல் பொய்யாகாதவாறு மாலை சூடிய அகன்ற மார்பை உடைய தலைவன் உறுதியாக வருவான் (கலித்.112:21-23) என்று கூறித் தலைவியை ஆற்றுவிப்பாள். இவ்வாறு ஆற்றுவிப்பதற்கு மெய்யே என்றல் என்னும் உளவியல் கூறு பயனுடையதாய் உள்ளது.

உள்ளப் போராட்டமும் இறுக்கமும் மிக்க சூழ்நிலைகளில் தலைவி துன்பங்களையோ குறைபாடுகளையோ இருப்பதாக ஏற்றுக்கொள்ள மறுத்த நிலை புலப்படுகிறது. காடு கூறும் பருவம் பொய்யென்றும் தன்கருத்து உணர்த்துவது மெய்யென்றும் நம்புவது தலைவிக்குப் பொதுவாக ஏற்படும் நிலையே எனலாம்.

**தலைவன் திரும்பி வருவதாய்க் கூரிய கார்காலம் வந்துவிட்டது என்பதைத் தலைவி நம்ப மறுக்கிறாள். தலைவன் வருவதாய்க் குறிப்பிட்டுச் சென்ற அக்காலம் வந்தும் தலைவன் வரவில்லையே என்னும் உள்ளப்போராட்டம் எழாமல் ஒடுக்க இயல்கின்றது. தலைவியின் மனமோ தலைவன் வந்தால்தான் கார்க்காலம் வருமென என்னும் அளவிற்குத் தலைவனோடு ஒன்றுதல் பெற்றுள்ளது. ஒன்றுதல் என்பது பிற மனிதனிடமோ குழுவினரிடமோ உள அமைப்பில் ஒற்றுமைச் சமநிலை கொள்ளுதலாகும். இந்தச் செயல்முறையின்படி ஒருவன் மற்றொருவனின் சாதனைகளையோ ஒரு குழுவின் சாதனைகளையோ தன்னுடைய சொந்தச் சாதனைகளாக எடுத்துக்கொண்டு தன்னுடைய மன இறுக்கத்தைத் தளர்த்திக் கொள்வதாக உளவியலார் கூறுவர்**[33] என்பர் மு.இராசமாணிக்கனார்.

மனிதர்கள் தங்களுடைய அனுபவங்கள் பயமுள்ளவையாகவோ, வெட்கப்பக் கூடியவையாகவோ இருக்குமானால் அவற்றை மறந்து விட வேண்டும் என்ற மனப்போக்கு உடையவர்களாக இருக்கின்றார்கள். அச்சுறுத்துவதும் நாணுறச் செய்வதுமான உள்துடிப்புகள் தோன்றும் போது அவற்றை உள்ளத்தின் ஆற்றல் மிகுந்த பிற போக்குகள் எதிர்க்கின்றன. அதன் விளைவாக அத்துடிப்புகள் நினைவு

மனத்தினின்று விலக்கப்படுகின்றன. இப்போக்கையே ஒடுக்கம் எனப் பிராய்ட் உரைப்பர். இவ்வுள் துடிப்பும் ஒடுக்கமும் ஒன்றுக் கொன்று தொடர்புடையன எனலாம்.

மனிதன் சில ஆசைகள் நினைவுகளைப்பற்றிப் பேசவோ அல்லது சில ஆசைகளை ஒட்டிச்செயல்படவோ மனத்தின் அமைப்பைச் சீர் குலைக்கும் சில நிகழ்ச்சிகளை நினைக்கவோமறுக்கலாம். இதனை அடக்குதல் என உளவியலார் கூறுவர். இவை நினைவு மனத்தின் தெளிவோடு நிகழ்வனவாகும். ஆனால் ஒடுக்கம் என்னும் தற்காப்பு இயங்குமுறை நனவிலி மனத்தின் ஏற்பாடாகக் கருதப்படுகிறது. எனவே அது அடக்கி மறைத்தல் என்னும் நடைமுறையோடு வேறுபட்டதாகும்.

அகம் விரும்பாத கரத்து பாதிப்பு உந்ததல் ஆகியவற்றிடமிருந்து நினைவு மனம் பின்வாங்கிக் கொள்கிறது. இதனால் ஒடுக்கப்பட்ட செய்தி நினைவு மனத்துள் இடம்பெறா வண்ணம் தடுத்து நிறுத்தப்படுகிறது. ஒடுக்கம் என்பது கவலையைத் தோற்றுவிக்கும் தூண்டுதல்கள் அவற்றைச் சார்ந்த எண்ணங்கள் கற்பனை உருவங்கள் நினைவுகள் ஆகியவற்றை அந்நிலையிலிருந்து விலக்கத் தன்னியக்கமாகவே நனவிலி மனத்தில் நிறுவப்பெற்றுள்ள ஒரு போக்காகும் என்பது ஓர் உளவியல் வரையறை ஆகும். இவ்வரையறைக்கு உட்படுத்தப் பெறும் அகப்பாடல்கள் தலைவன் தலைவியின் உளப்பண்புகளை எடுத்துக்காட்டுவனவாக உள்ளன.

## ஐயஞ்செய்தல்

இம்மெய்ப்பாடு கைக்கிளைக்குரியது அல்ல கற்பில் தலைவனின் உள்ளக்குறிப்பினைக் கண்டு தலைவி ஐயம் கொள்ளுவதாக அமைகின்றது. தலைவன் தான் பிரியக் கருதுவதைத் தலைவியிடம் எவ்வாறு உரைப்பதென்று மனப் போராட்டத்தில் இருந்த நிலையில் நம்மைப் பிரியப் போகிறானோ எனத் தலைவன் மீது கொண்ட அன்பின் காரணமாக ஐயமானது தோன்றுகிறது (கலித்.4:16,4:22). தலைவனுடைய செய்கைகளின் வழி அவனது மனதை அறிந்து கொள்ளுதல்

இருவர்தம் உள்ள ஒன்றிணைவைப் புலப்படுத்தும். இது தலைமக்களிடத்து உள்ள மிகை அன்பு உளவியலாகும்.

## அறன் அழிந்துரைத்தல்

ஒருவருக்கு நற்குணங்கள் மிகுந்திருந்தாலும் அக்குணங்கள் உரியவாறு பிறருக்குப் பயன்படாத பொழுது அவற்றின் இயல்புகள் பழிக்கப் பெறுவதுண்டு. இந்நிலையில் சங்கப் பாடல்களில்வரும் தலைவியும் தன் தலைவனின் பொருந்தாத செயலினால் மனம் வருந்தி அவனது செம்மையைக் கூடச் சிறுமையாகப் பார்ப்பதாகப் படைக்கப்பட்டுள்ளாள்.

இந்நடத்தை உடையவளாகப் படைக்கப்பட்ட தலைவியின் உளப்பாங்கின் வெளிப்பாடு தொடர்புடைய பாடலைச் சுவையுடையதாக்குகிறது. தலைவி, தலைவனை அடைதற்குத் தடைகள் பல இயற்றிய தன்மையை நினைத்து நற்றாயை அறனில்லாத தாயாகக் கூறுவாள்.

விரும்பிய தலைவனுக்குத் தன்னை மணம் முடித்துக் கொடுத்தலே அறம் எனக் கருதுகின்றாள் தலைவி. ஆனால் நொதுமலர் வரவால் மனம் நொந்து தலைவனுடன் தான் கொண்ட உறவை முதல் மணம் என்றும் தற்போது வரும் நொதுமலர் வரவு தனக்கு இரண்டாம் மணம் எனவும் கூறுகின்றாள் (கலித்.42:11-12). எந்த சூழ்நிலையிலும் ஆயமகள் இரண்டாம் மணம் புரிய ஒத்துக்கொள்ள மாட்டாள் என்பது மகளிரின் உளவியல் தன்மையைப் புலப்படுத்தும்.

## ஆங்கு நெஞ்சழிதல்

சொல்லளவில் அறனழிவது போலக் கூறிய தலைவி பின் அவ்வளவிற்கு உளம் வருந்துதலைத் தொல்காப்பியம் ஆங்கு நெஞ்சழிதல் என்கிறது. இவ்வாறு நெஞ்சழிதல் தலைவனை விடத் தலைவிக்குப் பெரும்பான்மையும் ஏற்படுவதுண்டு இது தலைவி கூற்றாக வரும் பாடல்களில் சுவைபடப் பொதிக்கப்பட்டுள்ளது.

தலைவி, தலைவனது பிரிவானது தன்னை வருத்தமிடத்தும் தலைவனுக்கு ஏதும் தீங்கு நேராதிருப்பின் உறுதியுடன் திகழ்பவள் தலைவன் வரைவிடைப் பிரிந்தவிடத்துத் தலைவி, ஆற்றாதவளாகித் தன்னை வருந்தியவனை ஞாயிறு வருத்தும் எனப் பிறர் கூறியதால் கவன்று ஞாயிறிடம் தன் தலைவனை வருத்தாது காக்குமாறு வேண்டுகிறாள். தலைவனுக்குத் துன்பம் ஏற்பட்டால் அதுகண்டு பொறுக்காத தன்மையை இம்மெய்ப்பாடு வெளிப்படுத்துகின்றது (கலித்.143:23-25).

தலைவன் தனக்குத் தாயாகவும் தந்தையாகவும் கருதத் தக்கவன் என்பதால் அவனுக்கு ஏற்படும் இழுக்கு தனக்கு ஏற்பட்டதாகவே கருதும் இயல்புடையவளாகத் தலைவி திகழ்வதை அறியமுடிகிறது.

பொருள்வயிற் பிரிவு பாடல்களிலும் பருவம் கண்டு ஆற்றாமை அடைந்ததாக அமையும் பாடல்களிலும் வன்புறை எதிரழிந்த துறைப் பாடல்களிலும் தலைவி நெஞ்சழிந்து கூறுவதைக் காணமுடிகின்றது (கலித்.129:24-25, 33:13-17, 130:12-13 123:16-19, 53:16-13, 123:16-19, 143:23-25).

இன்னொரு கோணத்திலும் இதனைச் சிந்திக்க முடிகிறது. அன்பில்லாத தலைவன் தலைவிக்குப் பெற்றோர் நிலையில் இருந்து காக்கும் வெறும் பாதுகாவலானேயன்றித் தன் மனைவியாகிய அத்தலைவியைத் துய்க்கும் உரிமை உடையவன் அல்லன் எனத்தலைவி கருவதுண்டு என்பதையும் அறிய முடிகிறது. எனவே அன்பு பொதிந்திருத்தல் என்னும் உளவியல் தன்மையில் மாறுபடாத நிலையில் மட்டுமே தலைவன் தலைவியின் இல்லறம் சிறக்கும் என்பது மெய்ப்பாட்டின்வழி அறிவுத்தப்படுகின்றது.

## எம்மெய்யாயினும் ஒப்புமை கோடல்

எப்பொருளைக் கண்டாலும் அதனுடன் தனக்கு விருப்பமான ஒன்றை ஒப்பிட்டுப் பார்ப்பது மனித மனத்தின் இயல்பு. இவ்வியல்பு சங்க அகப்பாடல்களில் தலைவன்

தலைவியரின் மன இயல்பாக வெளிப்படுத்தப்படுகின்றது. மழையின் வீழ்ச்சி போல் கரிய கூந்தலையும் மதர்த்த நோக்கையும் மையுண்ட கண்களையும் முத்தைப் போன்ற அழகிய முறுவலை உடையவளே எனத் தலைவி ஒப்புமைப்படுத்தப் பெறுதல் (கலித்.131:21-22) காணமுடிகின்றது. இம்மெய்ப்பாடு உளவியல் ரீதியாக தலைமக்களின் மிகை அன்பினை வெளிப்படுத்துகின்றது.

## தூது முனிவின்மை

புள்ளும் மேகமும் போல்வன கண்டு சொல்லுமின் அவர்க்கென்று தூதிரந்து பன்முறையானும் சொல்லுதல். இம்மெய்ப்பாடு பிரிவினை ஆற்றாத நிலையில் தன் ஆற்றாமையை எப்படியாவது தலைவனுக்கு உணர்த்தி அவனைப் பெறுதல் வேண்டும் என்று வேட்கையுடையவளாகத் தலைவி தோன்றுகின்றாள். தலைவி திங்களிடம் நீ எனக்காகத் தலைவனிடம் தூது சென்று வருவாயா என்று வினவுகின்றாள். (கலித்.145:45-50) இதில் தலைவன் மீது தலைவி கொண்ட அதீத அன்பு என்னும் உளவியல் கூறு வெளிப்படுகிறது.

## காதல் கைம்மிகல்

புணர்ச்சி பெறாமல் வரைவு நீட்டித்த வழிக் காதலுணர்வு வரம்பிகந்த நிலையில் நிகழும் உள்ளக் குறிப்பு. காதல் மிகுதியாக இருக்கும் நிலையில் வரைவு வேட்கையை நேரிடையாகத் தலைவனிடம் கூறவும் செய்வாள் அல்லது கூறாமலே மெய்ப்படு குறிப்புகளால் உணர்த்தி ஒழுகவும் முற்படுவாள். தலைவியின் காதல் கைம்மிகல் நெட்டுயிர்த்தல், காதலைத் தாங்காது எடுத்துரைத்தல், புலம்புதல் என்னும் மெய்ப்படு குறிப்புகளில் தோன்றும்.

தலைவி மிகுதியான காதல் நோயை மறைத்தாலும் அவளது தோற்றப் பொலிவானது அழிந்துபட்டதை நுதல், தோள், கண் ஆகிய உறுப்புகள் பிறருக்குக் காட்டிக் கொடுத்துவிட்டதை அறியமுடிகின்றது. (கலித்.124:5-6; 124:9-10; 124:13-14) இதனால் தலைமக்களின் அதீத காதலுணர்ச்சி என்பது வெளிப்படுகிறது.

## தெய்வமஞ்சல்

தலைவன் செய்த சூளுறவு பொய்த்து விடுமோ என்ற தலைவி அஞ்சுகின்ற நிலை சுட்டப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து தலைவி தலைவன் மேல் வைத்த அன்பின் வெளிப்பாட்டை அறிய முடிகிறது. தலைவன் கூறும் பொய்யானது (கலித்.75:18-19) அவனை மட்டுமல்லாது அவனது சுற்றத்தாரையும் பாதிக்கும் என்ற அச்ச உணர்வும் தலைவனுக்கு துன்பம் நேரக் கூடாது என அவன் மீது கொண்ட அன்பும் உளவியல் அடிப்படையில் பார்க்கும் போது இம்மெய்ப்பாடு தோன்றக் காரணமாகிறது.

## புரையறம் தெளிதல்

தலைவனது புறத்தொழுக்கத்தைப் பிறருக்குப் புலப்படுத்தாது விருந்தினரைவரவேற்றுப் பேணக்கூடிய இல்லற மாண்புடையவள் தலைவி. இவ்வாறு தனக்கு ஒத்த இல்லறம் இன்னதென்று தலைவியின் உள்ளத்தே புலப்படுதல் உண்டு. தலைவனின் பரத்தமையால் ஊடல் கொண்ட தலைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாக விருந்தினரைத் தலைவன் அழைத்து வந்தான். தலைவியும் இன்முகத்துடன் ஏற்றுக் கொள்கிறாள் (கலித்.75:14-17).

தலைவன் புதுப்புது பரத்தையை வதுவை அயர்ந்து வரும் நிலையில் தலைவி ஊடல்கொள்ளாது ஏற்றுக் கொள்கிறாள். இதனைத் தோழி தலைவியிடம் கேட்டதற்கு குதிரை பூண்ட தேரின்கண் கொண்டு வந்த விருந்தினரை எதிர்சென்று வரவேற்கும் முறையினால் நாளும் புலவியை மறப்பேன் என்றுரைப்பாள். இதில் இல்லறத்தில் திகழ்வோர் ஆற்ற வேண்டிய கடமைகள் பல; காம இன்பம் ஒன்றினை மட்டும் தனது வாழ்க்கையின் நோக்கமாகக் கருதக்கூடாது. தலைவன்காமத்தால் தன் கடமைகளில் நெகிழ்ந்தானாயினும் தலைவி அவற்றை அறியும் அறிவும் கடமைகளை நடுவுநிலையுடன் சிந்திக்கும் ஆற்றலும் பெற்றிருந்தாள். எனவே இம்மெய்ப்பாட்டிற்குள்ளே தலைவியின் குடும்பச்சூழல், சமூகச் சூழல் என்பன போன்ற பல்வேறு உளவியல் கூறுகள் காணக்கிடைக்கின்றன.

## இல்லது காய்தல்

இல்லது காய்தல் என்பது தலைவனிடத்து இல்லாத ஒன்றை இருப்பதாக எண்ணி அவன் மீது தலைவி ஊடல் கொள்வதைக் குறிப்பதாகும். பரத்தையரிடத்துச் சென்று வந்ததாகக் கருதி தலைவனிடம் ஊடல் கொண்ட தலைவியின் (கலித்.93:23-26) மன உணர்வை இம்மெய்ப்பாடு புலப்படுத்துகிறது மெய்ப்பாடாகும்.

## உள்ளது உவத்தல்

**வெய்யாரும் வீழ்வாரும் வேறாகத் கையின்**

**முகை மலர்ந்தன்ன முயக்கில் தகைஅன்றே**

**தண் பனி வைகல் எமக்கு (கலித்.78:25-27)**

என்னும் அடிகளில் பரத்தையரிடம் சென்று வந்த தலைவன் தலைவியைப் தழுவிப்பாராட்டவும் அவள் அதைப் பொய்யென வெறுப்பதும் கூறப்பட்டுள்ளது. தலைவி வெறுக்கும் இவ்வெறுப்பானது தலைவனின் பிழையொழுக்கத்தின் பாலுள்ள வெறுப்பாகும். எனினும் தலைவி பின் தலைவனை ஏற்றுக்கொள்ளும் நிலை அவளின் உள்ள அன்பினைப் புலப்படுத்தும்.

## பிரிவாற்றாமை

இதில் உள்ளப் பேராட்டத்தால் நேரும் ஆற்றாமை இடம்பெற்றுள்ளது. உள்ள இறுக்கம் என்பது ஒரு தனியால் வருவது அன்று. இருவேறு ஊக்கங்களின் போராட்டத்தால் விளைவதாகும். இடைச்சுரத்து நின்று உள்ளத்தில் ஊஞ்சலாடும் தலைவன், தலைவிபால் பெறலாகும் இன்பம் பற்றிய வேட்கையை அப்போது அடக்கி மறந்து புறக்கணித்தாலன்றி பொருளுக்கெனப் பயணத்தைத் தொடர இயலாது. பொருட்பயன் நோக்கிய பயணத்தை விட்டுவிட்டு ஊர் திரும்பினால் மனைவியின் துன்பம் தீர்க்கலாம். தானும் இன்பம் துய்க்கலாம். ஆனால் பொருள் இழப்போடு செய்வினை தவிர்த்த இழிவையும் ஏற்க வேண்டும். ஒரு வேட்கையின் நிறைவு

பிறிதொரு வேட்கையின் முறிவாகிறது. எனவே ஒவ்வோர் உள்ளப் போராட்டத்திலும் எவ்வகைத் தீர்வு கண்டாலும்உள்ள முறிவு ஒன்று தவிர்க்கஇயலாததாக உள்ளது.

கற்புக் காலத்தில் தலைவனது பிரிவைத் தாங்காத தலைவியின் நிலைக்குத் தலைவன் மீது அவள் கொண்ட அதீத காதலுணர்ச்சியே காரணம். இதுவே பிரிவின் போது துயர உணர்ச்சியாக மாறி பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடாக உருப்பெருகின்றது. இம்மெய்ப்பாடு தலைவியின் உள்ள முறிவு என்னும் உளவியலை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது.

கலித்தொகையில் அகமாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, பாணன், செவிலி, காமக்கிழத்தி, வாயில்கள், சான்றோர், சுற்றத்தார், கண்டோர், அடியோர், வினைவலர் ஆகியோர்தம் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன. இதில் தலைமக்கள், காமக்கிழத்தி, அடியவர், வினைவலர் ஆகியோர் தவிர மற்றவர்களுக்கு மெய்ப்பாடு இடம்பெறவில்லை.

ஆனால் தலைவி தலைவனைப் பிரிந்திருந்த சூழலில் தலைவியின் ஆற்றாமையையும் தலைவன் வந்த பின்பு அவளிடம் ஏற்பட்ட மாற்றத்தையும் கண்ட வாயில்களும் கண்டோரும் கையற உரைத்தல், காதல் கைம்மிகல், பசலை பாய்தல் கண்டவழி உவத்தல், போன்ற மெய்ப்பாடுகள் தலைவியிடம் தோன்றுவதை உரைக்கின்றனர். இது பிறன்கண் தோன்றிய துன்ப, இன்ப மெய்ப்பாடுகளுக்கு உரியவையாகும்.

தலைவியின் துன்பத்தைத் தனது துன்பமாகக் கொண்டு தோழியும் பாணனும் தலைவனிடம் விரைந்து வருமாறு கூறும் போது தலைவியின் துன்பம் எனும் மெய்ப்பாட்டைக் களைய இருவரும் செயல்படுவதைக் காணமுடிகின்றது.

தலைமக்களிடம் தோன்றும் வீரம், மகிழ்ச்சி ஆகிய மெய்ப்பாடுகள் சான்றோர், சுற்றத்தார், கண்டோர் ஆகியோர்தம் மெய்ப்பாடுகளாகவும் விளங்குதல் சுட்டத்தக்கது.

களவு, கற்பில் கூற்றுக்குரியோராகிய வாயில்கள், கண்டோர் ஆகியோர்தம் மெய்ப்பாடு தலைவியின் மெய்ப்பாட்டை அடிப்படையாகக் கொண்டு துன்பம், இன்பம், என்னும் இருநிலைகளில் அமைந்துள்ளன.

இல்லதுகாய்தல் என்னும் மெய்ப்பாடு தலைவி, காமக்கிழத்தி ஆகிய இருவருக்கும் உரியதாக கலித்தொகையில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. இதன்வழி மகளிரின் பொதுமனஉணர்வு புலப்படும்.

## தொகுப்புரை

❖ மனத்தில் தோன்றுகின்ற எண்ணங்களே உடலில் மெய்ப்பாடுகளாகத் தோன்றுகின்றன. எண்ணங்களுக்கும் மெய்ப்பாடுகளுக்கும் நெருங்கிய தொடர்பு காணபப்படுகின்றது.

❖ பிராய்டு தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தொல்காப்பியர் தொல்காப்பியத்தில் மெய்ப்பாட்டியலில் உள்ளம் பற்றியும் அதில் எழும் எண்ணங்கள் பற்றியும் அவற்றால் ஏற்படும் மெய்ப்பாடுகள் பற்றியும் விளக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது..

❖ எண்ணங்களை உளவியற் நோக்குடன் ஆராயும் போது அவை மெய்ப்பாடுகளாக வெளிப்படும் நுண்மையை உணரமுடிகிறது.

❖ உணர்வுகளை வெளிப்படுத்தும் திறன் அனைவருக்கும் உண்டு. ஆனால் அவற்றைப் புரிந்து கொள்ளுதல் என்பது அனைவராலும் இயலாது. பிறர் உணர்வுகளையும் தம் உணர்வுகளாக எண்ணி வெளிப்படுத்தும் பாங்கு புலவர்களுக்கே உரித்தானது ஆகும். அவ்வகையில் அகமாந்தர்களில் தலைவியின் எண்ணத்தை உணர்வை அப்படியே மெய்ப்பாடுகளின் வழி வெளிப்படுத்தியிருப்பது குறிக்கத்தக்க ஒன்றாகும்.

❖ ஒருவருடைய உளமாற்றம் தொடர்புடைய அவரை மட்டும் தாக்காமல் அவரது மெய்ப்பாட்டின் விளைவாகப் பிறரது உள்ளத்திலும் ஒரு மெய்ப்பாட்டைத் தோற்றுவிக்கிறது. இதற்குச் சான்றாக தோழியின் சில மெய்ப்பாடுகள் அமைகின்றன. இதனால் தான் தொல்காப்பியர் தோழியை ஒன்றித் தோன்றும் தோழி எனக் குறிப்பிடுகிறார்.

❖ தலைவிக்குரிய கையறவுரைத்தல், இன்பத்தை வெறுத்தல் என்னும் மெய்ப்பாடுகள் உள்ள முறிவு என்னும் உளவியல் தன்மையில் அமைந்துள்ளது.

ஏதமாய்தல் என்னும் மெய்ப்பாடு அமைதி தேடல் என்னும் உளவியல் தன்மைக்குரியதாகும். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர் தலைவன் தலைவியைப் பாராட்டுதல், மனநிறைவு, இன்பத்தால் ஏற்பட்ட மகிழ்ச்சி போன்றவை நுண்ணிய உளவியலின் பாற்பட்டதாகும்.

❖ கலித்தொகையில் அகமாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, பாணன், செவிலி, காமக்கிழத்தி, வாயில்கள், சான்றோர், சுற்றத்தார், கண்டோர், அடியோர், வினைவலர் ஆகியோர்தம் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன. இதில் தலைமக்கள், காமக்கிழத்தி, அடியவர், வினைவலர் ஆகியோர் தவிர மற்றவர்களுக்கு மெய்ப்பாடு இடம்பெறவில்லை.

❖ ஆனால் தலைவி தலைவனைப் பிரிந்திருந்த சூழலில் தலைவியின் ஆற்றாமையையும் தலைவன் வந்த பின்பு அவளிடம் ஏற்பட்ட மாற்றத்தையும் கண்ட வாயில்களும் கண்டோரும் கையற உரைத்தல், காதல் கைம்மிகல், பசலை பாய்தல் கண்டவழி உவத்தல், போன்ற மெய்ப்பாடுகள் தலைவியிடம் தோன்றுவதை உரைக்கின்றனர். இது பிறன்கண் தோன்றிய துன்ப, இன்ப மெய்ப்பாடுகளுக்கு உரியவையாகும்.

❖ தலைவியின் துன்பத்தைத் தனது துன்பமாகக் கொண்டு தோழியும் பாணனும் தலைவனிடம் விரைந்து வருமாறு கூறும் போது தலைவியின் துன்பம் எனும் மெய்ப்பாட்டைக் களைய இருவரும் செயல்படுவதைக் காணமுடிகின்றது.

❖ தலைமக்களிடம் தோன்றும் வீரம், மகிழ்ச்சி ஆகிய மெய்ப்பாடுகள் சான்றோர், சுற்றத்தார், கண்டோர் ஆகியோர்தம் மெய்ப்பாடுகளாகவும் விளங்குதல் சுட்டத்தக்கது.

❖ களவு, கற்பில் கூற்றுக்குரியோராகிய வாயில்கள், கண்டோர் ஆகியோர்தம் மெய்ப்பாடு தலைவியின் மெய்ப்பாட்டை அடிப்படையாகக் கொண்டு துன்பம், இன்பம், என்னும் இருநிலைகளில் அமைந்துள்ளன.

❖ இல்லதுகாய்தல் என்னும் மெய்ப்பாடு தலைவி, காமக்கிழத்தி ஆகிய இருவருக்கும் உரியதாக கலித்தொகையில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. இதன்வழி மகளிரின் பொதுமனஉணர்வு புலப்படும்.

**சான்றெண்விளக்கம்**

1. எஸ். சந்தானம், வி.கணபதி (நூ.ஆ) கல்வி உளவியல் ப.15
2. ஏ.என்.பஞ்சாட்சரம் (நூ.ஆ) கல்வி உளவியலும் ஆசிரியர் கல்வியும் ப.8
3. எஸ். சந்தானம், வி.கணபதி (நூ.ஆ) கல்வி உளவியல் ப.56
4. ஏ.என்.பஞ்சாட்சரம் (நூ.ஆ) கல்வி உளவியலும் ஆசிரியர் கல்வியும் ப.8
5. மேலது ப.8
6. ந.சுப்புரெட்டியார், கல்வி உளவியல் கோட்பாடுகள் ப.x (முன்னுரை)
7. தி.சு.நடராசன், திறனாய்வுக்கலை ப.85
8. செ.ரா.பரமேஷ், சமூக உளவியல் ப.3
9. இரா.ஜெயஸ்ரீ, உளவியல் நோக்கில் மெய்ப்பாட்டியல் - ஓர் ஆய்வு ப.116
10. து.சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல் ப.8
11. மேலது ப.34
12. பெ. கண்ணதாஸ், பாவை நூல்களில் உளவியலும் அறிவியலும் ப.74
13. இரா.ஜெயஸ்ரீ, உளவியல் நோக்கில் மெய்ப்பாட்டியல் - ஓர் ஆய்வு ப.64
14. தா.ஏ.சண்முகம், உளவியல் ப.14
15. தமிழண்ணல், தொல்காப்பிய இலக்கியக் கொள்கைகள் ப.53
16. இரா.ஜெயஸ்ரீ, உளவியல் நோக்கில் மெய்ப்பாட்டியல் - ஓர் ஆய்வு பக்.15-16
17. K.T.Strongman, The Pshycology of Emotions P.121-122
18. சங்க இலக்கியத்தில் பரத்தை - உளவியல் பார்வை, ப.121
19. மேலது ப.122
20. இரா.மோகன் (ப.ஆ) நகைச்சுவைக் களஞ்சியம் ப.19
21. சாலமன் பாப்பையா (ப.ஆ) கம்பனில் பல வண்ணங்கள் ப.59
22. மேலது ப.59
23. மேலது ப.133

24. மேலது ப.135-136

25. மேலது ப.136-137

26. தா.ஏ.சண்முகம், உளநலவியல் ப.40

27. து.சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல் பக்.240-241

28. மேலது ப.83

29. மேலது ப.107

30. மேலது ப.107

31. மேலது ப.206

32. மெய்ப்பாட்டியல் உளவியல் கூறுகள் ப.210

33. மு.இராசமாணிக்கம், உளவியல் துறைகள் 2ஆம் தொகுதி ப.338

## முடிவுரை

❖ ‘கலித்தொகையில் மெய்ப்பாடுகள்’ என்னும் இவ்வாய்வில் கண்ட முடிவுகள் பின்வருமாறு:

❖ மனிதர்களின் உள்ள உணர்ச்சிகளின் வெளிப்பாடாகத் தோன்றும் புற உடலசைவுகள் மெய்ப்பாடுகள் ஆகும். மெய்ப்பாடு என்பதற்கு, அக உணர்வுகளை ஆழ்ந்து ஆராயாமலே யாரும் இனிதறியப் புலப்படுத்தும் இயற்புறவுடற் குறி என்பர் சோமசுந்தர பாரதியார்.

❖ தொல்காப்பியர் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் எண்வகை மெய்ப்பாடுகளைச் சுட்டி, இவை ஒவ்வொன்றும் நன்நான்கு நிலைக்களன்களின் வழி மொத்தம் முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளாக வெளிப்படும் என்பர்.

❖ கலித்தொகையில் நகை என்னும் மெய்ப்பாடு 120 இடங்களிலும் அழுகை என்னும் மெய்ப்பாடு 126 இடங்களிலும் இளிவரல் என்னும் மெய்ப்பாடு 191 இடங்களிலும் மருட்கை என்னும் மெய்ப்பாடு 23 இடங்களிலும் அச்சம் என்னும் மெய்ப்பாடு 154 இடங்களிலும் பெருமிதம் என்னும் மெய்ப்பாடு 69 இடங்களிலும் வெகுளி என்னும் மெய்ப்பாடு 60 இடங்களிலும் உவகை என்னும் மெய்ப்பாடு 98 இடங்களிலும் பயின்றுவந்துள்ளன.

❖ தொல்காப்பியப்படி எள்ளல் மற்றும் பேதைமை காரணமாக நகை என்னும் மெய்ப்பாடு தோன்றும். ஆனால் கலித்தொகையில் எள்ளல் மற்றும் பேதைமையை நிலைக்களனாகக் கொண்டு பிறருக்கு வருத்தம் என்னும் மெய்ப்பாடு தோன்றுவதை அறிய முடிகின்றது. எள்ளலும் பேதைமையும் கணப் பொழுது நகைப்பைத் தந்தாலும் அடுத்த நொடி அது வருத்தமாக மாறுதல் சுட்டத்தக்கது.

❖ கலித்தொகையில் நகை என்னும் மெய்ப்பாடு நகைக்குரிய பொருளில் மட்டுமின்றி கேலிப் பொருளிலும் பயன்பட்டதை அறிய முடிகின்றது. மேலும் நகை என்னும் மெய்ப்பாட்டில் அது பெருநகையாக மாறுகின்ற போது தலைவியின் வருத்தத்தை உட்கொண்டு அமைகின்றது. தொல்காப்பியர் முறுவல், பெருநகை என்பதை நகை மெய்ப்பாட்டிற்குரிய நிலைக்களன்களில் குறிப்பிடவில்லை. ஆனால் பேராசிரியர் தமது உரையில் முறுவலித்து நகுதல், பெருகச் சிரித்தல் ஆகியவற்றை குறிப்பிடுகின்றார். கலித்தொகையில் 6 இடங்களில் முறுவல், முறுவலாய், முறுவலார், முறுவலாள் போன்ற பெயர்களில் முறுவல் மெய்ப்பாடு சுட்டப்பெற்றுளது. இம்மெய்ப்பாடானது கலித்தொகையில் பெண்களுக்கு மட்டுமே உரியதாக்கப்பட்டுள்ளமை சுட்டுதற்குரியது. பெருநகை என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 3 இடங்களில் பயின்று வந்துள்ளது. தன்னை விட்டுச் சென்ற தலைவனை நினைத்து அழுதும் சிரித்தும் வருந்தும் தலைவியை நெய்தற்கலி காட்சிப்படுத்துகிறது.

❖ மடன் என்னும் மெய்ப்பாடு உயர்திணைக்கு மட்டுமின்றி அ.்.றிணைக்கும் உரியதாகக் கலித்தொகையில் புலவர்களால் பாடப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது..

❖ கலித்தொகையில் தலைவியின் துயர் அழுகை வாயிலாக வெளிப்படுகின்றது. அழுகை என்பது தொல்காப்பியர் காலம் தொட்டு இன்றுவரை பெண்களுக்குரிய மெய்ப்பாடாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. இம்மெய்ப்பாடு தலைவியின் உள்ளத்து உணர்வை, உளவியலை அறியவும் துணைநிற்கின்றது.

❖ மூப்பு, பிணி, வருத்தம் மென்மை என்னும் நான்கினை நிலைக்களனாகக் கொண்ட இளிவரல் என்னும் மெய்ப்பாடே கலித்தொகையில் மிகுதியாகக் காணப்படுகிறது. தலைவனின் பிரிவைத் தாங்க இயலாத தலைவியின் பசலை நோயும் வருத்தமும் இம்மெய்ப்பாடு மிகுதியாகத் தோன்றக் காரணமாகின்றது.

❖ இன்றும் சில விலங்குகளைக் கண்டால் அஞ்சுதல் என்பது மக்கள் அனைவருக்கும் உரிய பொது மெய்ப்பாடாக உள்ளது. கலித்தொகையில் தலைவி தலைவன் வரும் வழியைக் கண்டு அஞ்சுதல், சுறாமீனின் மீது பிற உயிர்கள் கொண்ட அச்சம் போன்றவை அச்ச மெய்ப்பாட்டிற்குரியதாக உள்ளது.

❖ தவறு செய்தவர்களுக்குத் தாம் செய்யும் தவறுகள் குறித்து அரசன் அறிந்தால் தம்மைத் தண்டிப்பான் என்ற எண்ணம் எழும் போது அவர்களுக்கு அச்ச மெய்ப்பாடு தோன்றுகிறது. பொய், கொலை, களவு, கள், காமம் போன்றவற்றைச் செய்பவர்களுக்கு அரசன் என்றால் பயம் ஏற்படுவதால் அரசன் அஞ்சப்படும் பொருள் ஆயினான். கலித்தொகையில் மன்னனைக் கண்டு பிறநாட்டு மன்னர்களும் படை வீரர்களும் அஞ்சினர் என்று கூறும் போது அச்சம் என்னும் மெய்ப்பாடு சுட்டப்பெற்றுள்ளது. இம்மெய்ப்பாடு 40 இடங்களில் பயின்றுவந்துள்ளது.

❖ அரசர்களும், செல்வந்தர்களும் இரந்தோருக்குப் பல செல்வங்களை வாரி வழங்கியுள்ளதைக் கொடை என்னும் மெய்ப்பாட்டின் வழி அறிய முடிகின்றது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஒன்பது இடங்களில் இடம்பெற்றுளது. களிறு, தேர், குதிரை ஆகியவற்றைப் புலவர்களுக்குக் கொடுத்துக் கொடுத்துக் கை ஓயாத வள்ளல் அதனால் உன் கைகள் சிவந்துள்ளன எனப் பாண்டிய மன்னனை மக்கள் புகழ்வது இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

❖ வெகுளி என்னும் மெய்ப்பாடு எப்பொழுதும் பிறபொருள் பற்றியே வரும் தன்மையது. அகவாழ்வில் தன்னை வெகுண்டான் என்பது கிடையாது. உறுப்பறை என்பது ஒருவர் மேல் மற்றொருவர்க்குச் சினம் மிகுந்து தோன்றும் நேரத்தில் அவரின் உடலுறுப்புகளான கை கால்களைக் குறைத்தல் என்பது நிகழும். இது பெரும்பாலும் புறத்திற்குரிய மெய்ப்பாடாகும். கலித்தொகையில் விலங்குகளின் உடல் குறைத்தல் என்னும் நிலையில் இம்மெய்ப்பாடு பயிலப்பட்டுள்ளது.

❖ தொல்காப்பியர் கூறியுள்ள களவுக்குரிய மெய்ப்பாடுகள் இருபத்து நான்கனுள் சிதைவு பிறர்க்கின்மை, காதொன்று களைதல், ஊழணி தைவரல், உடைபெயர்த்துடுத்தல், அல்குல் தைவரல், திளைப்பு வினை மறுத்தல் என்னும் ஆறு மெய்ப்பாடுகள் தவிர்ந்த பதினெட்டு மெய்ப்பாடுகள் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன.

❖ பொதுவாக ஒருவரைக் கண்டு மற்றொருவர் புன்னகை புரிதல் என்பது இயல்பான ஒரு மெய்ப்பாடாகும். இதுவே காதலர்களுக்கிடையே நிகழ்கின்ற பொழுது அது காதலுக்குரிய நுழைவாயிலாக அமைகின்றது. கலித்தொகையில் தலைமக்கள் இருவரும் புகுமுகம் புரிதல், தலைவன் மட்டும் புகுமுகம் புரிதல், தலைவி மட்டும் புகுமுகம் புரிதல் என்னும் மூன்று நிலையில் இம்மெய்ப்பாடு நான்கு இடங்களில் காணப்பெறுகின்றது.

❖ கூந்தலின் மயிர்க்கால்கள் உணர்வு மிக்கனவாகும். காதல் வேட்கையால் தலைவியின் உள்ளம் நெகிழ்வடைகின்றது. வேட்கை மிகுதியாலும் உள்ள நெகிழ்வாலும் உணர்வுமிக்க மயிர்க் கால்கள் கொண்ட தலைவியின் கூந்தல் நெகிழ்வு அடைகின்றது. இத்தகைய சூழல் கூழை விரித்தல் என்னும் மெய்ப்பாடு தோன்ற இடமளிக்கிறது. களவுக்குரிய இம்மெய்ப்பாடு கலித்தொகையில் கற்புக்குரியதாக நான்கு பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

❖ இல்வலியுறுத்தல் என்னும் மெய்ப்பாடானது முல்லைநில மகளிரிடமே காணப்பெறுகிறது. களவுக் காலத்தில் ஏற்படுகின்ற சிறு சிறு ஊடலின் போதும் தலைவனோடு கொண்ட உறவை அறிந்த சுற்றத்தார் தலைவியைக் கண்டிக்கும் போதும் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது.

❖ கலித்தொகையில் துன்ப மெய்ப்பாடுகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. பெரும்பாலும் தலைவனைப் பிரிந்த தலைவியின் மனத் துயரை பாலைக்கலியும் மருதக்கலியும் நெய்தற்கலியும் பதிவு செய்துள்ளன.

❖ கற்புக்கால மெய்ப்பாடுகளில் பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடு மிகுதியாகக் காணப்பெறுகிறது. பிரிவினால் தலைவிக்குக் கையறவுரைத்தல், கலங்கி மொழிதல், நடுக்கம், பசலைபாய்தல், இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல் போன்ற மெய்ப்பாடுகள் தோன்றுகின்றன.

❖ தொல்காப்பியரால் களவுக்குரியதாகச் சொல்லப்பட்ட இருகையுமெடுத்தல் என்னும் மெய்ப்பாடு கற்புக்குரிய மெய்ப்பாடாகக் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளது.

❖ சங்ககாலச் சூழலில் தலைவன் தலைவியின் களவு வாழ்க்கையை வெளிக்கொணர அலர் தூற்றல் என்னும் மெய்ப்பாடு பெரிதும் பயன்பட்டது. கலித்தொகையில் ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல் என்னும் மெய்ப்பாடு இருபத்தியாறு இடங்களில் பயின்று வந்துள்ளது. ஆனால் இன்று ஒருவரின் வளர்ச்சியையோ, முகமலர்ச்சியையோ, வருத்தத்தையோ, கண்டவர்கள் அதைப்பற்றி புறங்கூறுவது என்ற நிலையில் அனைவருக்கும் பொதுவான மெய்ப்பாடாக இது வளர்ச்சி பெற்றுள்ளது.

❖ கலித்தொகையில் முல்லைக்கலியில் மட்டுமே தெரிந்துடம்படுதல் என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. இது ஏறுதழுவுதல் பாடல்களில் உள்ளமை குறிக்கத்தக்கது.

❖ மனிதர்களுக்குப் புற அழகைக் காட்டிலும் அக அழகே இன்றியமையாததாகும். மனமானது மகிழ்ச்சியாக இருந்தால் முகம் மலர்ச்சியாகவும் மனமானது துயரத்தில் இருக்கும் போது முகம் களையிழந்தும் காணப்படும். துன்பத்தில் இருக்கும் போது மனிதர்கள் வெளியே எவ்வளவு ஒப்பனைகள் செய்து கொண்டாலும் அகத்தில் உள்ள துன்பமானது கண்களின் வழியே காட்டிக் கொடுத்துவிடும் என்பது நிதர்சன உண்மை. தலைவனைப் பிரிந்து கலங்கி நிற்கும் தலைவி தனது மனதில் உள்ளதை மற்றவர்கள் அறிந்தால் எள்ளி நகையாடுவர் என்பதால் அஃறிணை உயிர்களிடம் கலங்கிக் கூறுகின்றாள். இதுவே கலங்கி

மொழிதல் என்னும் மெய்ப்பாடு தோன்ற இடமளிக்கிறது. இம்மெய்ப்பாடு கலித்தொகையில் ஏழு பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

❖ பிரிவுக் காலத்தில் தலைவி, தலைவனது உருவெளித் தோற்றங் கண்டும் தலைவன், தலைவியின் உருவெளித் தோற்றங் கண்டும் இரங்குதலே எதிர்பெய்து பரிதல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இரண்டு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

❖ இரவில் தலைவன் வரும் வழியில் அணங்கு, புலி, களிறு ஆகியவற்றால் தலைவனுக்குத் துன்பம் வரும் என அஞ்சும் நிலையில் ஏதமாய்தல் எனும் மெய்ப்பாடு தோன்றுகின்றது. கலித்தொகையில் நான்கு இடங்களில் இம்மெய்ப்பாடானது பதிவு செய்யப்பட்டுள்ளது. இது உளவியல் நிலையில் தலைவனை வரைவுக்குத் தூண்டுவதற்குத் துணைநிற்கிறது.

❖ தலைவியின் தோள் மெலிதல், கைவளை நெகிழ்தல் போன்றவற்றிற்குத் தலைவனின் பிரிவே காரணம். தலைவனை மீண்டும் தலைவி காண்பாளேயானால் அவள் நலமானது மீட்டெடுக்கப்படும். கலித்தொகையில் இருபத்தொரு இடங்களில் பசலைபாய்தல் என்னும் மெய்ப்பாடு பசந்த, பசந்து, பசந்தவர், பசந்தன்று, பசந்தன, பசப்ப, பசலை, பசலையள், பசப்பு, திதலை, மாமை என்ற பெயர்களில் சுட்டப்பெற்றுள்ளது. இக்காலத்திலும் பிரிவுத் துயரில் வாடும் பெண்களிடம் இம்மெய்ப்பாடு தோன்றுதல் சுட்டத்தக்கது.

❖ பிரிவின் கண்ணே நனவில் தோன்றும் இடையறாத நினைவால் கனவில் காதலரைக் கண்டு விழித்தபின் கனவுக்கும் நனவுக்கும் வேறுபாடு அறியாது மயங்குவதே கனவொடு மயங்கல் என்னும் மெய்ப்பாடாகும். காதல் உணர்வு அதிகமாக இருக்கும் போது மனதில் தலைவனை நினைத்துக் கொண்டு இருப்பதே கனவு தோன்றக் காரணமாகின்றது. கலித்தொகையில் கனவொடுமயங்கல் என்னும் மெய்ப்பாடானது ஏழு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

❖ கலித்தொகையில் பொருள்வயிற் பிரிவு பாடல்களிலும் பருவம் கண்டு ஆற்றாமை அடைந்ததாக அமையும் பாடல்களிலும் வன்புறை எதிரழிந்த துறைப் பாடல்களிலும் தலைவி நெஞ்சழிதல் எனும் மெய்ப்பாடு காணப்பெறுகின்றது.

❖ ஒப்புமைகோடல் எனும் மெய்ப்பாடு தலைமக்களுக்கு மட்டுமின்றி தோழிக்குரியதாகவும் கலித்தொகையில் சுட்டப்பெற்றுள்ளது.

❖ தலைவன் தன் தவறை மறைக்கத் தெய்வத்தின் மீது பொய்யாகச் சூளுறவு செய்கின்ற போது தெய்வம் அவனைத் தண்டிக்கும் எனத் தலைவி அச்சம் கொள்கிறாள். இதுவே தெய்வம் அஞ்சல் எனும் மெய்ப்பாடாக அமைகிறது. கொண்ட கொழுநனுக்குத் துன்பம் வந்தால் அதனால் பாதிக்கப்பெறும் முதல் ஆள் தலைவி. அதனாலேயே தொல்காப்பியர் இம்மெய்ப்பாட்டை தலைவிக்குரியதாக அமைத்துள்ளார். இம்மெய்ப்பாடானது கலித்தொகையில் ஆறு இடங்களில் காணப்பெறுகிறது.

❖ தலைவனின் புறத்தொழுக்கத்தைத் திருத்த முயலும் தலைவியின் முயற்சி உள்ளது உவத்தல் என்னும் மெய்ப்பாடு தோன்றக் காரணமாகின்றது. மருதக்கலியில் நாற்பது இடங்களில் இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

❖ கற்புக் காலத்தில் தலைவனது பிரிவைத் தலைவியால் தாங்க இயலாததற்கு தலைவன் மீது அவள் கொண்ட அதீத காதலுணர்ச்சியே காரணம். இதுவே பிரிவின் போது துயர உணர்ச்சியாக மாறி பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடாக வெளிப்பட்டுள்ளது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஐம்பத்து ஒன்பது இடங்களில் இடம்பெற்றுள்ளது.

❖ பிரிவுத் துயரால் தலைவியிடம் பசியட நிற்றல் என்னும் மெய்ப்பாடு தோன்றுகின்றது. இன்பத்தை வெறுத்து, துன்பத்துப் புலம்பிய தலைவி உணவையும் வெறுத்து ஒதுக்குவாள். உணவை உட்கொள்ளாமல் தனது உள்ளத்து உணர்வை இம்மெய்ப்பாட்டின் மூலம் புலப்படுத்துவாள். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஒரே ஒரு பாடலில் மட்டுமே இடம்பெற்றுள்ளது.

❖ நாணம் என்னும் மெய்ப்பாடு கலித்தொகையில் மனிதர்களுக்கு மட்டுமின்றி, பறவைகளுக்கும் உரியதாகப் புலவர்களால் பாடப்பெற்றுள்ளமை சுட்டத்தக்கது. ஒப்புவழி உவத்தல், கண்டவழி உவத்தல், நடுவுநிலை, வியர்த்தல், அரற்று ஆகிய மெய்ப்பாடுகள் களவு, கற்புக்காலத்திற்கு பொதுவான மெய்ப்பாடுகளாகும். ஆனால் கலித்தொகையில் கற்புக் கூற்றுப் பாடல்களில் மட்டுமே இம்மெய்ப்பாடு காணப்பெறுகின்றது.

❖ கைக்கிளை, பெருந்திணைப் பாடல்களில் கையறவுரைத்தல், காதல் கைம்மிகல், கலங்கிமொழிதல், புலம்பித்தோன்றல் என்பன போன்ற மெய்ப்பாடுகள் மிகுதியாகக் காணப்பெறுகின்றன.

❖ அச்ச உணர்ச்சியானது, தற்காப்பு மனப்பான்மையின் வெளிப்பாடாகும் பாதுகாப்பு உணர்ச்சி குறைவாக உள்ளவர்களிடத்தும் தன் பாதுகாப்பிற்காகப் பிறரைச் சார்ந்திருப்பவர்களிடத்தும் அச்ச உணர்வு மிகுதியாகத் தோன்றும் என்பது உளவியலை அடிப்படையாகக் கொண்டது. இரவுக்குறியில் தலைவன் வரும் வழியைக் கண்டு தலைவி அஞ்சுதல் தலைவன் மீது தலைவி கொண்ட அன்பினை மட்டுமின்றி விரைவில் தலைவனை வரைவுக்கு உடன்பட வைக்கவேண்டும் என்ற உளப்பாங்கினையும் சமூக உளவியலையும் உள்ளடக்கியதாய் உள்ளது.

❖ உடலில் தோன்றும் நோய் மட்டும் பிணியன்று. பிரிவினால் ஏற்படும் வருத்தமும் ஏக்கமும் பிணியே ஆகும். இது உள்ளப் பிணியாகும். இவ்வுள்ளப் பிணி பசலையாக வெளிப்படுகின்றது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இருபத்து நான்கு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

❖ கலித்தொகையில் அகமாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, பாணன், செவிலி, காமக்கிழத்தி, வாயில்கள், சான்றோர், சுற்றத்தார், கண்டோர், அடியோர், வினைவலர் ஆகியோர்தம் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன. இதில்

தலைமக்கள், காமக்கிழத்தி, அடியவர், வினைவலர் ஆகியோர் தவிர மற்றவர்களுக்கு மெய்ப்பாடு இடம்பெறவில்லை.

❖ களவு, கற்பில் கூற்றுக்குரியோராகிய வாயில்கள், கண்டோர் ஆகியோர்தம் மெய்ப்பாடு தலைவியின் கையற உரைத்தல், காதல் கைம்மிகல், பசலை பாய்தல் கண்டவழி உவத்தல், என்பன போன்ற மெய்ப்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு துன்பம், இன்பம், என்னும் இருநிலைகளில் அமைந்துள்ளன.

❖ தலைவியின் துன்பத்தைத் தனது துன்பமாகக் கொண்டு தோழியும் பாணனும் தலைவனிடம் விரைந்து வருமாறு கூறும் போது தலைவியின் துன்பம் எனும் மெய்ப்பாட்டைக் களைய இருவரும் செயல்படுவதைக் காணமுடிகின்றது.

❖ தலைமக்களிடம் தோன்றும் வீரம், மகிழ்ச்சி ஆகிய மெய்ப்பாடுகள் சான்றோர், சுற்றத்தார், கண்டோர் ஆகியோர்தம் மெய்ப்பாடுகளாகவும் விளங்குதல் சுட்டத்தக்கது. இல்லதுகாய்தல் என்னும் மெய்ப்பாடு தலைவி, காமக்கிழத்தி ஆகிய இருவருக்கும் உரியதாகக் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. இதன்வழி மகளிரின் பொதுமனஉணர்வு புலப்படும்.

❖ கலித்தொகையில் அனைத்து மாந்தர்தம் கூற்றிலும் மெய்ப்பாடானது இடம்பெற்றுள்ளது. கலித்தொகையில் காணப்பெறும் இன்ப, துன்ப மெய்ப்பாடுகள் அனைத்திற்கும் அடிப்படையாக அன்பு என்ற உளவியல் கூறு காணப்படுதல் குறிப்பிடத்தக்கது.

## மேலாய்வுக்களங்கள்

❖ கலித்தொகையைப் போன்று பிற அக இலக்கியங்களையும் தொல்காப்பிய மெய்ப்பாடுகளைக் கொண்டு ஒப்பிட்டு ஆராயலாம்.

❖ இக்காலப் புதுக்கவிதைகளையும் தொல்காப்பிய மெய்ப்பாடுகள் அடிப்படையில் ஆராயலாம்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்


1. **அண்ணாமலை.சுப** — **கலித்தொகை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்.
2003

2. **பேராசிரியர் (உ.ஆ)** — **தொல்காப்பியம் பொருளதிகாரம்**
மெய்ப்பாட்டியல்,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
லிமிடெட், திருநெல்வேலி.
சூன் - 1959

3. **அனந்தராமையர்.இ.வை** — **கலித்தொகை (நெய்தற்கலி)**
**மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்**,
நோபில் அச்சுக்கூடம்,
சென்னை
1931

4. **இளம்பூரணர் (உ.ஆ)** — **தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியல்,**
உவமையியல், செய்யுளியல் மரபியல்
திருநெல்வேலி வைச சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிட்
522. டி.டி.கே சாலை
சென்னை - 18


## துணைமைச் சான்றுகள்


5. **அருணாசலம்.ப** — **தொல்காப்பியர்,**
தமிழ்ப் புத்தகாலயம்.

6. **அறவேந்தன்.இரா** **தொல்காப்பியச் சிறப்புகள்**
காவ்யா பதிப்பகம்
16, இரண்டாம் குறுக்குத் தெரு,
டிரஸ்டுபுரம், கோடம்பாக்கம்
சென்னை 24. 2013

7. **இளவழகனார் ஆராய்ச்சி** **கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்,**
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி.
1999.

8. **இராகவையங்கார்.மு** **தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி,**
மு.ரா.நாராயணயங்கார் அடவகேட்
மானாமதுரை
1960

9. **இராசமாணிக்கம். மு** **உளவியல் துறைகள்,**
இரண்டாம் தொகுதி,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை, 1980.

10. **இராமநாதன்** **தொல்காப்பியச் செல்வம்**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
முத்தையா பதிப்பக வெளியீடு,
1966

11. **இராமசாமி.மு** **தெருக்கூத்து நடிப்பு,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
1988.

| | |
|---|---|
| **12. கண்ணதாஸ்.பெ** | **பாவை நூல்களில் உளவியலும் அறிவியலும்**<br>பாவை பப்ளிகேஷன்ஸ்,<br>142, ஜானி ஜான்கான் சாலை,<br>இராயபேட்டை, சென்னை 14 |
| **13. கமலா.பொ.நா** | **தொல்காப்பியர் முதல் தெரிதா வரை (நவீன கோட்பாட்டு ஆய்வுகள்)**<br>காவ்யா வெளியீடு<br>16, 2ஆம்குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம்,<br>கோடம்பாக்கம், சென்னை- 24 |
| **14. கருணாநிதி மு** | **தொல்காப்பியப் பூங்கா**<br>பூம்புகார் பதிப்பகம்,<br>127, பிரகாசம் சாலை,<br>சென்னை - 600 108<br>ஏப்ரல் - 2015 |
| **15. கதிரேசன்.குழ** | **சங்க இலக்கியம் எளிய தமிழில்**<br>பாலைக்கலி,<br>ஐந்திணைப் பதிப்பகம்<br>2989, 279, பாரதிசாலை,<br>திருவல்லிக்கேணி சென்னை -05<br>திசம்பர் - 2007. |
| **16. காசிவிசுவநாதன் செட்டியார்.பெரி.பழ.மு பாகனேரி (ப.ஆ)** | **கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்,**<br>திருநெல்வேலி தென்னிந்திய சைவ<br>சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>லிமிடெட், திருநெல்வேலி.<br>1938 |

**17. கோபிநாத்.அ** **தமிழ்க் காப்பியங்களில் அவலச்சுவை**
இந்திரா பதிப்பகம்,
80, கணபதி குடியிருப்பு,
மாம்பழச்சாலை
திருச்சிராப்பள்ளி -5
2000.

**18. கோதண்டபாணிபிள்ளை.கு** **கம்பரும் மெய்ப்பாட்டியலும்**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்,
சிதம்பரம்
1971

**19. சக்திதாசன் சுப்பிரமணியன்** **கலித்தொகை மூலமும் உரையும்**
முல்லை பதிப்பகம்,
323/10, கதிரவன் காலனி,
அண்ணாநகர் மேற்கு,
சென்னை- 40,
ஏப்ரல் - 2010.

**20. சண்முகம்.தா.ஏ** **உளவியல் பாகம் 2**
கழக வெளியீடு,
சென்னை
1953

**21. சண்முகம்.தா.ஏ** **உளநலவியல்**
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
சென்னை, 1970.

**22. சந்திரசேகரன்.இரா** **சிலப்பதிகாரத்தில் மெய்ப்பாடுகள்**
**சரவணன்.ப** ராமையா பதிப்பகம்,
10/14 தோப்பு வெங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி
சென்னை - 5
செப்டம்பர் - 2007

**23. சந்தானம்.எஸ், கணபதி.வி** **கல்வி உளவியல்**
சாந்தா பப்ளிஷர்ஸ்,
சென்னை.14

**24. சிவராஜ்.து** **சங்க இலக்கியத்தில் உளவியல்,**
சிவம் பதிப்பகம்,
விருப்பாட்சிபுரம்,
வேலூர்,
முதற்பதிப்பு, 1994.

**25. சிவலிங்கனார்.ஆ** **தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.டி.ஐ (அஞ்சல்) தரமணி,
சென்னை - 600 113
1998.

**26. சீநிவாசன்.அ** **குறிஞ்சி,**
பெரியநாயகி அச்சகம்,
184, தெற்குவெளி வீதி, மதுரை.
பிப்ரவரி - 1977.

**27. சுப்ரமணியன்.ச.வே** **தொல்காப்பியம் - தெளிவுரை**
மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர்தெரு பாரிமுனை,
சென்னை - 600 108
எட்டாம்பதிப்பு - சூலை 2006

**28. சுப்ரமணியன்.ச.வே** **சங்க இலக்கியம் எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் பாகம் 3,**
மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர்தெரு பாரிமுனை,
சென்னை - 600 108
எட்டாம்பதிப்பு - சூலை 2006

29. **சுப்புரெட்டியார்.ந** — **தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,**
பழனியப்பா பிரதர்ஸ்,
கோனார் நிலையம்,
25, பீட்டர்ஸ் ரோடு,
சென்னை - 142001

30. **சுப்புரெட்டியார்.ந** — **கல்வி உளவியல் கோட்பாடுகள்**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை 1

31. **சேதுபதி.சொ** — **திருக்குறளில் தொல்காப்பிய மெய்ப்பாடுகள்**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானிஜான்கான் சாலை,
இராயப்பேட்டை ,சென்னை- 600 014
திசம்பர் 2009

32. **சோமசுந்தரனார்.பொ.வே** — **கலித்தொகை மூலமும் உரையும்**
கழகவெளியீடு

33. **சோமசுந்தரபாரதியார்.ச** — **தொல்காப்பியம் பொருட்படலப் புத்துரை (மெய்ப்பாட்டியல்),**
நாவலர் புத்தக நிலையம்
59, ஏ மேலாவணி மூலவிதி
மதுரை - 1
1975

34. **ஞானமூர்த்தி.தா.ஏ** — **இலக்கியத் திறனாய்வியல்**
தமிழின்பம்,
கோவை.1980

**35. தட்சிணாமூர்த்தி.அ** **தமிழர் நாகரிகமும் பண்பாடும்,**
யாழ் வெளியீடு,
ஏபி1108, தென்றல் குடியிருப்பு
மூன்றாவது தெரு,
மேற்கு அண்ணா நகர்,
சென்னை 600 040
ஏப்ரல் 2014

**36. தமிழண்ணல்** **தொல்காப்பியம்**
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,
48, தானப்பமுதலி தெரு,
மதுரை 625001
திசம்பர் 2009

**37. தமிழண்ணல்** **தொல்காப்பியம்,**
மெய்ப்பாட்டியல் உவமவியல்,
தொகுதி - 3 மீனாட்சி புத்தக
நிலையம், மயூரா வளாகம்,
48, தானப்பமுதலி தெரு,
மதுரை 625001
திசம்பர். 2014

**38. தமிழண்ணல்** **உரை விளக்கு**
விழிகள் பதிப்பகம்,
8/எம் 139, 7ஆம் குறுக்குத் தெரு,
திருவள்ளுவர் நகர்,
திருவான்மியூர் விரிவு,
சென்னை 600041 2011

39. **தமிழண்ணல்**

**சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள்**
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,
48, தானப்பமுதலி தெரு,
மதுரை 625001
2008.

40. **தமிழண்ணல்**

**தொல்காப்பியர்**
சாகித்திய அகாதமி,
இரவீநதிர பவன்,35
பெரோஸ்ஷா சாலை,
புதுதில்லி 110 001
2012

41. **தமிழண்ணல்**

**தொல்காப்பிய இலக்கியக் கொள்கைகள் பாகம் - 1**
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,
48, தானப்பமுதலி தெரு,
மதுரை 625001
2008.

42. **தமிழமுதன்**

**கலித்தொகை மூலமும் உரையும்**
சாரதா பதிப்பகம்,
கௌரா ஏஜென்சிஸ்,
10/14 தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை
சூலை - 2012.

43. **தாமோதரம்பிள்ளை.சி.வை**

**கலித்தொகை (உரையுடன்)**
முல்லை நிலையம்,
9, பாரதி நகர் முதல் தெரு,
தி.நகர் சென்னை-17
2008

44. **திருஞானமூர்த்தி.தெ** — **தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்,**
செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், சென்னை -113
சனவரி - 2014.

45. **பஞ்சாட்சரம்.ஏ.என்** — **கல்வி உளவியலும் ஆசிரியர் கல்வியும்**
சாந்தா பப்ளிஷர்ஸ், சென்னை.14

46. **புலியூர்க் கேசிகன்** — **கலித்தொகை மூலமும் உரையும்**
சாரதா பதிப்பகம்,
கௌரா ஏஜென்சிஸ்,
10/14 தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை
சூலை - 2012.

47. **புலியூர்க் கேசிகன்** — **கலித்தொகை மூலமும் உரையும்**
ஸ்ரீசெண்பகா பதிப்பகம்,
தபால் பெட்டி எண்.8836
பாண்டிபஜார், சென்னை -17
2013

48. **பொன்னுச்சாமி.மு** — **சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள்,**
இந்து பதிப்பகம்,
கோயம்புத்தூர்.
திசம்பர்.1990

49. **மணிவேல்.மு** — **கைக்கிளைக்காதல்,**
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021
1992

**50. மாணிக்கம். வ.சுப** **தமிழ்க்காதல்,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை -600098
செப்டம்பர் 2012

**51. மீனாட்சிசுந்தரம்.தெ.பொ.** **நாடகக் காப்பியங்கள்**
சேகர் பதிப்பகம்,
சென்னை
1966.

**52. முருகேசன்.கு** **ஆய்வு முகங்கள் மணிவிழா மலர்**
ஆசிரியப் பேரவை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்,
செப்டம்பர் - 2006

**53. விசுவநாதன்.அ** **கலித்தொகை மூலமும் உரையும்**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை -600098
அக்டோபர் 2011.

**54. வெள்ளைவாரணன்.க** **தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம்,**
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021
1992

**55. வெள்ளைவாரணன்.க** **தமிழ் இலக்கிய வரலாறு தொல்காப்பியம்.**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
1957

**56. வேங்கடசாமிநாட்டார்.ந.மு** **கட்டுரைத்திரட்டு பகுதி**
நாட்டார் பதிப்பகம்,
சென்னை -14,
1972.

## அகராதிகள்

**57. ………….** **வாழ்வியற் களஞ்சியம் தொகுதி - 14**
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

**58. மம்மது.நா** **தமிழிசைப் பேரகராதி,**
தமிழிசைச் சொற்களஞ்சியம்,
இன்னிசை அறக்கட்டளை,
மதுரை -2010.

**59. கோபாலையர்.தி.வே** **தமிழ் இலக்கணப் பேரகராதி பொருள்- மெய்ப்பாடு,**
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை
2005

**60. இராமசாமிப்புலவர்.சு.அ** **தொகையகராதி**
தென்னிந்திய சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. 1969

**61. சிங்காரவேலு முதலியார்.அ** **அபிதான சிந்தாமணி**
சீதை பதிப்பகம்
சென்னை 2012

62. **கதிரைவேற்பிள்ளை.நா** — **தமிழ் மொழி அகராதி**
சாரதா பதிப்பகம்,
கௌரா ஏஜென்ஸீஸ்,
4ஏ 186, வி.ஆர்.பிள்ளை தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை -5
2014

63. **சந்தியா நடராஜன்** — **மதுரைத் தமிழ்ப் பேரகராதி**
சந்தியா பதிப்பகம்
பிளாட் ஏ நியூடெக் வைபவ்
57-53 ஆவது தெரு அசோக் நகர்,
சென்னை - 83
2015.

## ஆய்வேடுகள்

64. **மு.பொன்னுச்சாமி** — **சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்**
தமிழ்த்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்.
1982.

65. **தமிழ்மதி.ம** — **சங்கநூல்களில் மெய்ப்பாடுகள்**
தமிழ் உயராய்வுத்துறை,
தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி,
தருமபுரம், மயிலாடுதுறை 1
மார்ச்சு.2011

66. **செண்பகவள்ளி.மு** — **குறுந்தொகையில் துன்பியல் மெய்ப்பாடுகள்**
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-2012

**67. இரா.ஜெயஸ்ரீ** | **உளவியல் நோக்கில் மெய்ப்பாட்டியல் ஓர்ஆய்வு**

தமிழியல்துறை,

பாரதிதாசன் பல்கலைக்கழகம்,

திருச்சிராப்பள்ளி - 2010

**68. சாம்ராஜ்.இரா** | **சங்க இலக்கியத்தில் பரத்தை உளவியல் பார்வை**

தமிழ்த்துறை,

பாரதியார் பல்கலைக்கழகம்,

கோயம்புத்தூர்.

# கலித்தொகையில் மெய்ப்பாடுகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.,) பட்டத்திற்குப்

பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**வ.மீனாட்சி**

(பதிவு.எண்.0993)

நெறியாளர்

**பேராசிரியர் சே.செந்தமிழ்ப்பாவை**






**தமிழ்ப்பண்பாட்டு மையம்**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசிய தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+ (CGPA:3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பலகலைக்கழகத் தகுதி பெற்றது.)

**காரைக்குடி- 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**அக்டோபர் - 2020**

# முடிவுரை

❖ ‘கலித்தொகையில் மெய்ப்பாடுகள்’ என்னும் இவ்வாய்வில் கண்ட முடிவுகள் பின்வருமாறு:

❖ மனிதர்களின் உள்ள உணர்ச்சிகளின் வெளிப்பாடாகத் தோன்றும் புற உடலசைவுகள் மெய்ப்பாடுகள் ஆகும். மெய்ப்பாடு என்பதற்கு, அக உணர்வுகளை ஆழ்ந்து ஆராயாமலே யாரும் இனிதறியப் புலப்படுத்தும் இயற்புறவுடற் குறி என்பர் சோமசுந்தர பாரதியார்.

❖ தொல்காப்பியர் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் எண்வகை மெய்ப்பாடுகளைச் சுட்டி, இவை ஒவ்வொன்றும் நன்நான்கு நிலைக்களன்களின் வழி மொத்தம் முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளாக வெளிப்படும் என்பர்.

❖ கலித்தொகையில் நகை என்னும் மெய்ப்பாடு 120 இடங்களிலும் அழுகை என்னும் மெய்ப்பாடு 126 இடங்களிலும் இளிவரல் என்னும் மெய்ப்பாடு 191 இடங்களிலும் மருட்கை என்னும் மெய்ப்பாடு 23 இடங்களிலும் அச்சம் என்னும் மெய்ப்பாடு 154 இடங்களிலும் பெருமிதம் என்னும் மெய்ப்பாடு 69 இடங்களிலும் வெகுளி என்னும் மெய்ப்பாடு 60 இடங்களிலும் உவகை என்னும் மெய்ப்பாடு 98 இடங்களிலும் பயின்றுவந்துள்ளன.

❖ தொல்காப்பியப்படி எள்ளல் மற்றும் பேதைமை காரணமாக நகை என்னும் மெய்ப்பாடு தோன்றும். ஆனால் கலித்தொகையில் எள்ளல் மற்றும் பேதைமையை நிலைக்களனாகக் கொண்டு பிறருக்கு வருத்தம் என்னும் மெய்ப்பாடு தோன்றுவதை அறிய முடிகின்றது. எள்ளலும் பேதைமையும் கணப் பொழுது நகைப்பைத் தந்தாலும் அடுத்த நொடி அது வருத்தமாக மாறுதல் சுட்டத்தக்கது.

❖ கலித்தொகையில் நகை என்னும் மெய்ப்பாடு நகைக்குரிய பொருளில் மட்டுமின்றி கேலிப் பொருளிலும் பயன்பட்டதை அறிய முடிகின்றது. மேலும் நகை என்னும் மெய்ப்பாட்டில் அது பெருநகையாக மாறுகின்ற போது தலைவியின் வருத்தத்தை உட்கொண்டு அமைகின்றது. தொல்காப்பியர் முறுவல், பெருநகை என்பதை நகை மெய்ப்பாட்டிற்குரிய நிலைக்களன்களில் குறிப்பிடவில்லை. ஆனால் பேராசிரியர் தமது உரையில் முறுவலித்து நகுதல், பெருகச் சிரித்தல் ஆகியவற்றை குறிப்பிடுகின்றார். கலித்தொகையில் 6 இடங்களில் முறுவல், முறுவலாய், முறுவலார், முறுவலாள் போன்ற பெயர்களில் முறுவல் மெய்ப்பாடு சுட்டப்பெற்றுளது. இம்மெய்ப்பாடானது கலித்தொகையில் பெண்களுக்கு மட்டுமே உரியதாக்கப்பட்டுள்ளமை சுட்டுதற்குரியது. பெருநகை என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் 3 இடங்களில் பயின்று வந்துள்ளது. தன்னை விட்டுச் சென்ற தலைவனை நினைத்து அழுதும் சிரித்தும் வருந்தும் தலைவியை நெய்தற்கலி காட்சிப்படுத்துகிறது.

❖ மடன் என்னும் மெய்ப்பாடு உயர்திணைக்கு மட்டுமின்றி அ∴றிணைக்கும் உரியதாகக் கலித்தொகையில் புலவர்களால் பாடப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது..

❖ கலித்தொகையில் தலைவியின் துயர் அழுகை வாயிலாக வெளிப்படுகின்றது. அழுகை என்பது தொல்காப்பியர் காலம் தொட்டு இன்றுவரை பெண்களுக்குரிய மெய்ப்பாடாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. இம்மெய்ப்பாடு தலைவியின் உள்ளத்து உணர்வை, உளவியலை அறியவும் துணைநிற்கின்றது.

❖ மூப்பு, பிணி, வருத்தம் மென்மை என்னும் நான்கினை நிலைக்களனாகக் கொண்ட இளிவரல் என்னும் மெய்ப்பாடே கலித்தொகையில் மிகுதியாகக் காணப்படுகிறது. தலைவனின் பிரிவைத் தாங்க இயலாத தலைவியின் பசலை நோயும் வருத்தமும் இம்மெய்ப்பாடு மிகுதியாகத் தோன்றக் காரணமாகின்றது.

❖ இன்றும் சில விலங்குகளைக் கண்டால் அஞ்சுதல் என்பது மக்கள் அனைவருக்கும் உரிய பொது மெய்ப்பாடாக உள்ளது. கலித்தொகையில் தலைவி தலைவன் வரும் வழியைக் கண்டு அஞ்சுதல், சுறாமீனின் மீது பிற உயிர்கள் கொண்ட அச்சம் போன்றவை அச்ச மெய்ப்பாட்டிற்குரியதாக உள்ளது.

❖ தவறு செய்தவர்களுக்குத் தாம் செய்யும் தவறுகள் குறித்து அரசன் அறிந்தால் தம்மைத் தண்டிப்பான் என்ற எண்ணம் எழும் போது அவர்களுக்கு அச்ச மெய்ப்பாடு தோன்றுகிறது. பொய், கொலை, களவு, கள், காமம் போன்றவற்றைச் செய்பவர்களுக்கு அரசன் என்றால் பயம் ஏற்படுவதால் அரசன் அஞ்சப்படும் பொருள் ஆயினான். கலித்தொகையில் மன்னனைக் கண்டு பிறநாட்டு மன்னர்களும் படை வீரர்களும் அஞ்சினர் என்று கூறும் போது அச்சம் என்னும் மெய்ப்பாடு சுட்டப்பெற்றுள்ளது. இம்மெய்ப்பாடு 40 இடங்களில் பயின்றுவந்துள்ளது.

❖ அரசர்களும், செல்வந்தர்களும் இரந்தோருக்குப் பல செல்வங்களை வாரி வழங்கியுள்ளதைக் கொடை என்னும் மெய்ப்பாட்டின் வழி அறிய முடிகின்றது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஒன்பது இடங்களில் இடம்பெற்றுளது. களிறு, தேர், குதிரை ஆகியவற்றைப் புலவர்களுக்குக் கொடுத்துக் கொடுத்துக் கை ஓயாத வள்ளல் அதனால் உன் கைகள் சிவந்துள்ளன எனப் பாண்டிய மன்னனை மக்கள் புகழ்வது இம்மெய்ப்பாட்டிற்குரியதாகும்.

❖ வெகுளி என்னும் மெய்ப்பாடு எப்பொழுதும் பிறபொருள் பற்றியே வரும் தன்மையது. அகவாழ்வில் தன்னை வெகுண்டான் என்பது கிடையாது. உறுப்பறை என்பது ஒருவர் மேல் மற்றொருவர்க்குச் சினம் மிகுந்து தோன்றும் நேரத்தில் அவரின் உடலுறுப்புகளான கை கால்களைக் குறைத்தல் என்பது நிகழும். இது பெரும்பாலும் புறத்திற்குரிய மெய்ப்பாடாகும். கலித்தொகையில் விலங்குகளின் உடல் குறைத்தல் என்னும் நிலையில் இம்மெய்ப்பாடு பயிலப்பட்டுள்ளது.

❖ தொல்காப்பியர் கூறியுள்ள களவுக்குரிய மெய்ப்பாடுகள் இருபத்து நான்கனுள் சிதைவு பிறர்க்கின்மை, காதொன்று களைதல், ஊழணி தைவரல், உடைபெயர்த்துடுத்தல், அல்குல் தைவரல், திளைப்பு வினை மறுத்தல் என்னும் ஆறு மெய்ப்பாடுகள் தவிர்ந்த பதினெட்டு மெய்ப்பாடுகள் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளன.

❖ பொதுவாக ஒருவரைக் கண்டு மற்றொருவர் புன்னகை புரிதல் என்பது இயல்பான ஒரு மெய்ப்பாடாகும். இதுவே காதலர்களுக்கிடையே நிகழ்கின்ற பொழுது அது காதலுக்குரிய நுழைவாயிலாக அமைகின்றது. கலித்தொகையில் தலைமக்கள் இருவரும் புகுமுகம் புரிதல், தலைவன் மட்டும் புகுமுகம் புரிதல், தலைவி மட்டும் புகுமுகம் புரிதல் என்னும் மூன்று நிலையில் இம்மெய்ப்பாடு நான்கு இடங்களில் காணப்பெறுகின்றது.

❖ கூந்தலின் மயிர்க்கால்கள் உணர்வு மிக்கனவாகும். காதல் வேட்கையால் தலைவியின் உள்ளம் நெகிழ்வடைகின்றது. வேட்கை மிகுதியாலும் உள்ள நெகிழ்வாலும் உணர்வுமிக்க மயிர்க் கால்கள் கொண்ட தலைவியின் கூந்தல் நெகிழ்வு அடைகின்றது. இத்தகைய சூழல் கூழை விரித்தல் என்னும் மெய்ப்பாடு தோன்ற இடமளிக்கிறது. களவுக்குரிய இம்மெய்ப்பாடு கலித்தொகையில் கற்புக்குரியதாக நான்கு பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

❖ இல்வலியுறுத்தல் என்னும் மெய்ப்பாடானது முல்லைநில மகளிரிடமே காணப்பெறுகிறது. களவுக் காலத்தில் ஏற்படுகின்ற சிறு சிறு ஊடலின் போதும் தலைவனோடு கொண்ட உறவை அறிந்த சுற்றத்தார் தலைவியைக் கண்டிக்கும் போதும் இம்மெய்ப்பாடு தோன்றுகின்றது.

❖ கலித்தொகையில் துன்ப மெய்ப்பாடுகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. பெரும்பாலும் தலைவனைப் பிரிந்த தலைவியின் மனத் துயரை பாலைக்கலியும் மருதக்கலியும் நெய்தற்கலியும் பதிவு செய்துள்ளன.

❖ கற்புக்கால மெய்ப்பாடுகளில் பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடு மிகுதியாகக் காணப்பெறுகிறது. பிரிவினால் தலைவிக்குக் கையறவுரைத்தல், கலங்கி மொழிதல், நடுக்கம், பசலைபாய்தல், இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல் போன்ற மெய்ப்பாடுகள் தோன்றுகின்றன.

❖ தொல்காப்பியரால் களவுக்குரியதாகச் சொல்லப்பட்ட இருகையுமெடுத்தல் என்னும் மெய்ப்பாடு கற்புக்குரிய மெய்ப்பாடாகக் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளது.

❖ சங்ககாலச் சூழலில் தலைவன் தலைவியின் களவு வாழ்க்கையை வெளிக்கொணர அலர் தூற்றல் என்னும் மெய்ப்பாடு பெரிதும் பயன்பட்டது. கலித்தொகையில் ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல் என்னும் மெய்ப்பாடு இருபத்தியாறு இடங்களில் பயின்று வந்துள்ளது. ஆனால் இன்று ஒருவரின் வளர்ச்சியையோ, முகமலர்ச்சியையோ, வருத்தத்தையோ, கண்டவர்கள் அதைப்பற்றி புறங்கூறுவது என்ற நிலையில் அனைவருக்கும் பொதுவான மெய்ப்பாடாக இது வளர்ச்சி பெற்றுள்ளது.

❖ கலித்தொகையில் முல்லைக்கலியில் மட்டுமே தெரிந்துடம்படுதல் என்னும் மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது. இது ஏறுதழுவுதல் பாடல்களில் உள்ளமை குறிக்கத்தக்கது.

❖ மனிதர்களுக்குப் புற அழகைக் காட்டிலும் அக அழகே இன்றியமையாததாகும். மனமானது மகிழ்ச்சியாக இருந்தால் முகம் மலர்ச்சியாகவும் மனமானது துயரத்தில் இருக்கும் போது முகம் களையிழந்தும் காணப்படும். துன்பத்தில் இருக்கும் போது மனிதர்கள் வெளியே எவ்வளவு ஒப்பனைகள் செய்து கொண்டாலும் அகத்தில் உள்ள துன்பமானது கண்களின் வழியே காட்டிக் கொடுத்துவிடும் என்பது நிதர்சன உண்மை. தலைவனைப் பிரிந்து கலங்கி நிற்கும் தலைவி தனது மனதில் உள்ளதை மற்றவர்கள் அறிந்தால் எள்ளி நகையாடுவர் என்பதால் அஃறிணை உயிர்களிடம் கலங்கிக் கூறுகின்றாள். இதுவே கலங்கி

மொழிதல் என்னும் மெய்ப்பாடு தோன்ற இடமளிக்கிறது. இம்மெய்ப்பாடு கலித்தொகையில் ஏழு பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

- ❖ பிரிவுக் காலத்தில் தலைவி, தலைவனது உருவெளித் தோற்றங் கண்டும் தலைவன், தலைவியின் உருவெளித் தோற்றங் கண்டும் இரங்குதலே எதிர்பெய்து பரிதல் என்னும் மெய்ப்பாடாகும். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இரண்டு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

- ❖ இரவில் தலைவன் வரும் வழியில் அணங்கு, புலி, களிறு ஆகியவற்றால் தலைவனுக்குத் துன்பம் வரும் என அஞ்சும் நிலையில் ஏதமாய்தல் எனும் மெய்ப்பாடு தோன்றுகின்றது. கலித்தொகையில் நான்கு இடங்களில் இம்மெய்ப்பாடானது பதிவு செய்யப்பட்டுள்ளது. இது உளவியல் நிலையில் தலைவனை வரைவுக்குத் தூண்டுவதற்குத் துணைநிற்கிறது.

- ❖ தலைவியின் தோள் மெலிதல், கைவளை நெகிழ்தல் போன்றவற்றிற்குத் தலைவனின் பிரிவே காரணம். தலைவனை மீண்டும் தலைவி காண்பாளேயானால் அவள் நலமானது மீட்டெடுக்கப்படும். கலித்தொகையில் இருபத்தொரு இடங்களில் பசலைபாய்தல் என்னும் மெய்ப்பாடு பசந்த, பசந்து, பசந்தவர், பசந்தன்று, பசந்தன, பசப்ப, பசலை, பசலையள், பசப்பு, திதலை, மாமை என்ற பெயர்களில் சுட்டப்பெற்றுள்ளது. இக்காலத்திலும் பிரிவுத் துயரில் வாடும் பெண்களிடம் இம்மெய்ப்பாடு தோன்றுதல் சுட்டத்தக்கது.

- ❖ பிரிவின் கண்ணே நனவில் தோன்றும் இடையறாத நினைவால் கனவில் காதலரைக் கண்டு விழித்தபின் கனவுக்கும் நனவுக்கும் வேறுபாடு அறியாது மயங்குவதே கனவொடு மயங்கல் என்னும் மெய்ப்பாடாகும். காதல் உணர்வு அதிகமாக இருக்கும் போது மனதில் தலைவனை நினைத்துக் கொண்டு இருப்பதே கனவு தோன்றக் காரணமாகின்றது. கலித்தொகையில் கனவொடுமயங்கல் என்னும் மெய்ப்பாடானது ஏழு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

❖ கலித்தொகையில் பொருள்வயிற் பிரிவு பாடல்களிலும் பருவம் கண்டு ஆற்றாமை அடைந்ததாக அமையும் பாடல்களிலும் வன்புறை எதிரழிந்த துறைப் பாடல்களிலும் தலைவி நெஞ்சழிதல் எனும் மெய்ப்பாடு காணப்பெறுகின்றது.

❖ ஒப்புமைகோடல் எனும் மெய்ப்பாடு தலைமக்களுக்கு மட்டுமின்றி தோழிக்குரியதாகவும் கலித்தொகையில் சுட்டப்பெற்றுள்ளது.

❖ தலைவன் தன் தவறை மறைக்கத் தெய்வத்தின் மீது பொய்யாகச் சூளுறவு செய்கின்ற போது தெய்வம் அவனைத் தண்டிக்கும் எனத் தலைவி அச்சம் கொள்கிறாள். இதுவே தெய்வம் அஞ்சல் எனும் மெய்ப்பாடாக அமைகிறது. கொண்ட கொழுநனுக்குத் துன்பம் வந்தால் அதனால் பாதிக்கப்பெறும் முதல் ஆள் தலைவி. அதனாலேயே தொல்காப்பியர் இம்மெய்ப்பாட்டை தலைவிக்குரியதாக அமைத்துள்ளார். இம்மெய்ப்பாடானது கலித்தொகையில் ஆறு இடங்களில் காணப்பெறுகிறது.

❖ தலைவனின் புறத்தொழுக்கத்தைத் திருத்த முயலும் தலைவியின் முயற்சி உள்ளது உவத்தல் என்னும் மெய்ப்பாடு தோன்றக் காரணமாகின்றது. மருதக்கலியில் நாற்பது இடங்களில் இம்மெய்ப்பாடு இடம்பெற்றுள்ளது.

❖ கற்புக் காலத்தில் தலைவனது பிரிவைத் தலைவியால் தாங்க இயலாததற்கு தலைவன் மீது அவள் கொண்ட அதீத காதலுணர்ச்சியே காரணம். இதுவே பிரிவின் போது துயர உணர்ச்சியாக மாறி பிரிவாற்றாமை என்னும் மெய்ப்பாடாக வெளிப்பட்டுள்ளது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஐம்பத்து ஒன்பது இடங்களில் இடம்பெற்றுள்ளது.

❖ பிரிவுத் துயரால் தலைவியிடம் பசியட நிற்றல் என்னும் மெய்ப்பாடு தோன்றுகின்றது. இன்பத்தை வெறுத்து, துன்பத்துப் புலம்பிய தலைவி உணவையும் வெறுத்து ஒதுக்குவாள். உணவை உட்கொள்ளாமல் தனது உள்ளத்து உணர்வை இம்மெய்ப்பாட்டின் மூலம் புலப்படுத்துவாள். கலித்தொகையில் இம்மெய்ப்பாடு ஒரே ஒரு பாடலில் மட்டுமே இடம்பெற்றுள்ளது.

❖ நாணம் என்னும் மெய்ப்பாடு கலித்தொகையில் மனிதர்களுக்கு மட்டுமின்றி, பறவைகளுக்கும் உரியதாகப் புலவர்களால் பாடப்பெற்றுள்ளமை சுட்டத்தக்கது. ஒப்புவழி உவத்தல், கண்டவழி உவத்தல், நடுவுநிலை, வியர்த்தல், அரற்று ஆகிய மெய்ப்பாடுகள் களவு, கற்புக்காலத்திற்கு பொதுவான மெய்ப்பாடுகளாகும். ஆனால் கலித்தொகையில் கற்புக் கூற்றுப் பாடல்களில் மட்டுமே இம்மெய்ப்பாடு காணப்பெறுகின்றது.

❖ கைக்கிளை, பெருந்திணைப் பாடல்களில் கையறவுரைத்தல், காதல் கைம்மிகல், கலங்கிமொழிதல், புலம்பித்தோன்றல் என்பன போன்ற மெய்ப்பாடுகள் மிகுதியாகக் காணப்பெறுகின்றன.

❖ அச்ச உணர்ச்சியானது, தற்காப்பு மனப்பான்மையின் வெளிப்பாடாகும் பாதுகாப்பு உணர்ச்சி குறைவாக உள்ளவர்களிடத்தும் தன் பாதுகாப்பிற்காகப் பிறரைச் சார்ந்திருப்பவர்களிடத்தும் அச்ச உணர்வு மிகுதியாகத் தோன்றும் என்பது உளவியலை அடிப்படையாகக் கொண்டது. இரவுக்குறியில் தலைவன் வரும் வழியைக் கண்டு தலைவி அஞ்சுதல் தலைவன் மீது தலைவி கொண்ட அன்பினை மட்டுமின்றி விரைவில் தலைவனை வரைவுக்கு உடன்பட வைக்கவேண்டும் என்ற உளப்பாங்கினையும் சமூக உளவியலையும் உள்ளடக்கியதாய் உள்ளது.

❖ உடலில் தோன்றும் நோய் மட்டும் பிணியன்று. பிரிவினால் ஏற்படும் வருத்தமும் ஏக்கமும் பிணியே ஆகும். இது உள்ளப் பிணியாகும். இவ்வுள்ளப் பிணி பசலையாக வெளிப்படுகின்றது. கலித்தொகையில் இம்மெய்ப்பாடு இருபத்து நான்கு இடங்களில் இடம்பெற்றுள்ளது.

❖ கலித்தொகையில் அகமாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, பாணன், செவிலி, காமக்கிழத்தி, வாயில்கள், சான்றோர், சுற்றத்தார், கண்டோர், அடியோர், வினைவலர் ஆகியோர்தம் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன. இதில்

தலைமக்கள், காமக்கிழத்தி, அடியவர், வினைவலர் ஆகியோர் தவிர மற்றவர்களுக்கு மெய்ப்பாடு இடம்பெறவில்லை.

❖ களவு, கற்பில் கூற்றுக்குரியோராகிய வாயில்கள், கண்டோர் ஆகியோர்தம் மெய்ப்பாடு தலைவியின் கையற உரைத்தல், காதல் கைம்மிகல், பசலை பாய்தல் கண்டவழி உவத்தல், என்பன போன்ற மெய்ப்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு துன்பம், இன்பம், என்னும் இருநிலைகளில் அமைந்துள்ளன.

❖ தலைவியின் துன்பத்தைத் தனது துன்பமாகக் கொண்டு தோழியும் பாணனும் தலைவனிடம் விரைந்து வருமாறு கூறும் போது தலைவியின் துன்பம் எனும் மெய்ப்பாட்டைக் களைய இருவரும் செயல்படுவதைக் காணமுடிகின்றது.

❖ தலைமக்களிடம் தோன்றும் வீரம், மகிழ்ச்சி ஆகிய மெய்ப்பாடுகள் சான்றோர், சுற்றத்தார், கண்டோர் ஆகியோர்தம் மெய்ப்பாடுகளாகவும் விளங்குதல் சுட்டத்தக்கது. இல்லதுகாய்தல் என்னும் மெய்ப்பாடு தலைவி, காமக்கிழத்தி ஆகிய இருவருக்கும் உரியதாகக் கலித்தொகையில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. இதன்வழி மகளிரின் பொதுமனஉணர்வு புலப்படும்.

❖ கலித்தொகையில் அனைத்து மாந்தர்தம் கூற்றிலும் மெய்ப்பாடானது இடம்பெற்றுள்ளது. கலித்தொகையில் காணப்பெறும் இன்ப, துன்ப மெய்ப்பாடுகள் அனைத்திற்கும் அடிப்படையாக அன்பு என்ற உளவியல் கூறு காணப்படுதல் குறிப்பிடத்தக்கது.

## மேலாய்வுக்களங்கள்

❖ கலித்தொகையைப் போன்று பிற அக இலக்கியங்களையும் தொல்காப்பிய மெய்ப்பாடுகளைக் கொண்டு ஒப்பிட்டு ஆராயலாம்.

❖ இக்காலப் புதுக்கவிதைகளையும் தொல்காப்பிய மெய்ப்பாடுகள் அடிப்படையில் ஆராயலாம்.